


உண்மையான கவிதை
அருமையான திரவியம்.
அதனால் உலகம்
க்ஷேமத்தை அடைகிறது.
எந்த நாட்டிலே புதிய மஹாகவி
தோன்றுகிறானோ, அந்தநாடு
மஹா பாக்யமுடையது.

—பாரதி

## சமர்ப்பணம்

# முன்னுரையாக...

சிங்கம்புணரி வட்டாரத்தைச் சார்ந்த, குறிப்பாக மேலைச்சிவபுரி கணேசர் செந்தமிழ்க்கல்லூரி மாணவர்களிடையே இருந்த எழுத்தார்வத்தை வளர்க்கவும், அவர்களது, இலக்கியக் கண்ணோட்டத்தைச் செழுமைப் படுத்தவும் வேண்டுமென்கிற நோக்கத்தோடு உருளச்சுப் பிரதியாகத் 'தொடரும்' இதழைத் தொடங்குவது என்று முடிவெடுத்தோம்.

அதன் முதல் இதழ் வெளியீட்டு விழாவிலேயே அதில் இடம் பெற்றிருந்த படைப்புகள் இலக்கிய ஆர்வலர்களால் பெரிதும் வரவேற்கப்பட்டதும், விமர்சிக்கப்பட்டதும், தொடரும்—வாசக வட்ட எல்லையை விரிவுபடுத்தியது. மேலும் தமிழகத்தின் பல்வேறு பகுதிகளிலிருக்கிற இலக்கியக்கர்த்தாக்கள், விமர்சகர்கள், பாராட்டியும் விமர்சித்தும் எழுதிய கடிதங்களில் எழுப்பப்பட்டிருந்த ''ஏன் இதை அச்சில் கொணரலாகாது'' —என்ற கேள்வி தொடரும் குழுவினரிடத்திலும் எழுந்தது. ஆனால் பல்வேறு நடைமுறைச்சிக்கல்களின் காரணமாக ஒவ்வொரு மாத இதழையும் அச்சில் கொணர வேண்டாம் என்றும், ஆண்டு மலர்களை மட்டும் அச்சில் கொணர்ந்தால் போதுமென்றும் திட்டமிடப்பெற்றது.

முதலாமாண்டு முடிவுற்றவுடனேயே ஓர் அச்சு மலருக்கான ஆயத்தப் பணிகளில் இறங்கினோம். படைப்புக்களைச்சேகரித்தல், நிதி திரட்டல், விளம்பரங்கள் சேகரித்தல் இவற்றோடு தகுந்த அச்சகம் தேர்ந்தெடுத்தலும் கூட எங்களுக்கு ஓர் அரிய காரியமாக இருந்தது. அதனால் ஏற்பட்டதே, தவிர்க்க இயலாத இந்தத் தாமதம்; இதற்காக எங்களை மன்னிக்க வேண்டுகிறோம்.

இம்மலரில் இடம்பெற்றுள்ள செங்கதிர்த்தேவனின் 'தொடரும் சிந்தனைகள்' என்ற கட்டுரையைப் படித்தாலே—படிக்கும் யாருக்கும் இந்தக்காலதாமதம் புரியும். ஏனென்றால் அது, எங்களது முதலாமாண்டில் வெளி வந்த இதழ்களை மட்டுமே மதிப்பீடு செய்கிறது.

எந்தக்கால கட்டத்தின் பின்னணியில் எங்கள் இலக்கியப் பணி தொடங்கியதோ, அந்தக் காலகட்டத்தின் பின்னணியில் வைத்து, ஓர் இலக்கிய நேர்மையோடு, எங்களது நிறைகளையும், குறைகளையும், சுட்டிக்காட்டும் இக்கட்டுரை—எங்களை மேலும் தொடர்ந்து ஊக்குவிக்குமொரு உந்து சக்தியாக இருக்கிறது. அதுமட்டுமன்றி, பொதுவாகவே, இன்றைக்குள்ள இலக்கியப்பார்வைகளைப் பற்றிய ஒரு விமர்சனமாகவும் வெளிவந்திருக்கிறது. இது பலத்த வாத, பிரதிவாதங்களைத் தமிழிலக்கிய அன்பர்களிடம் எழுப்பும்; எழுப்பவேண்டும் என்ற நோக்கில் இந்த ஆண்டு மலரில் வெளியிடப்பெறுகிறது.

சிற்றிதழ், பேரிதழ் என்கிற பாகுபாடில்லாமல், நாங்கள் அணுகிய போதெல்லாம் எங்களுக்குத் தனது ஆசிகளையும், அன்பையும், படைப்புக்களையும் கூட அளித்து, எங்களை ஊக்குவித்த எழுத்தாளர் ஜெயகாந்தனை இந்த மலருக்கான பேட்டி என்று அணுகியபோது, தனக்கு இலங்கையிலிருந்து ஒருவாசகி எழுதிய கடிதத்தை எங்களிடம் கொடுத்து, அந்தக் கடிதத்தில் எழுப்பப்பட்டிருந்த வினாக்களை—எங்களை எழுப்பச்செய்து,எங்களின் மூலமாக அந்த வாசகிக்குப் பதிலளிக்கும் 'ஒரு புதிய இலக்கிய முறையை ஏற்படுத்துங்கள்' என்று எங்களை வழிநடத்தினார். அவருக்கு வந்த கடிதமும், அவரது பதிலும், ஓர் எழுத்தாளனை வாசகன் எங்ஙனம் புரிந்து கொள்ள வேண்டும் என்பதற்கும், ஓர் எழுத்தாளனுக்கும், வாசகனுக்குமுள்ள உறவு எங்ஙனம் பரஸ்பரப்புரிதலுடையதாக இருக்க வேண்டுமென்பதற்கும் சிறந்த எடுத்துக்காட்டு என்கிற பெருமையோடு இந்த மலரில் இடம் பெற்றிருக்கிறது.

பொதுவாகப் பேட்டிகள் என்றால், ஒரு குறிப்பிட்ட கோணத்தில் மட்டுமே ஒருவரை அளக்க முயல்வதாக அமையும் அங்ஙனமின்றி ஒரு கவிஞரின் முழுமையான பிம்பத்தை வெளிப்படுத்துகிற நோக்கத்துடனும் ஒரு கவிஞரின் அகத்தையும், புறத்தையும் அளக்க வேண்டுமென்கிற நோக்கத்துடனும்—நாங்கள் கவிஞர் மீராவை அணுகியபோது, ஏறத்தாழ மூன்று மணி நேரம் எங்களுக்காக ஒதுக்கி அவரளித்த பேட்டியானது, அவரை மட்டுமின்றி, தமிழ்ப்புதுக்கவிதை வரலாற்றையும்—வெளிப்படுத்துவதாக அமைந்திருப்பது அப்பேட்டியைப்படிக்கும் யாருக்கும் தெள்ளெனத் தெளிவாகும். ஒரு பின்தங்கிய மாவட்டத்திலிருந்து கொண்டு, சிவகங்கையை ஒரு இலக்கிய மையமாக உருவாக்கியிருக்கும் கவிஞர் மீராவின் பேட்டியை வெளியிடுவதில் அந்த மாவட்டத்துக்காரர்களாகிய நாங்கள் பெருமை கொள்வது இயல்புதானே!

தமிழகத்தின் எந்தவொரு மூலையிலும் மண்ணைக்கீறியெழும்பும் ஒரு சிறு இலக்கிய முயற்சியெனும் செடிக்குக்கூடத் தன்வாழ்த்து,தன் ஆதரவு, தன் வழிகாட்டுதல் என்கிற உரத்தையளிக்கும் எழுத்தாளர் வல்லிக்கண்ணன்—தொடர்ந்து எங்களைத் தனது கடிதங்கள் மூலமாக உற்சாகப்படுத்தி இருக்கிறார். கலைஞர்களுக்கேற்படும் படைப்புப் பிரச்சினைகள் குறித்த அவரது சிறுகட்டுரையும் இந்த மலரில் இடம் பெற்றிருக்கிறது.

பாரதியைப்பல்வேறு கண்ணோட்டங்களில் பார்த்து—அவரைச் சரியாகப் புரிந்து கொள்ளும் முயற்சி, அவருக்கு நூற்றாண்டு விழாக்கொண்டாடிய பிறகும் கூட இன்னும் தொடர்ந்து கொண்டேயிருக்கிறது. ஒரு மரபு வழி வடிவத்தில் அவனெழுதிய புதிய ஆத்திசூடியின் ஒரு கட்டளையைப் பற்றி விரிவாகவும் இலக்கிய நயத்தோடும் டாக்டர் பழ முத்தப்பன் எழுதியிருக்கும் கட்டுரை—பாரதியைப்புரிந்து கொள்ள உதவக்கூடும்.

சிங்கம்புணரி வட்டாரத்தில் மட்டும் மிகுந்து காணப்படும், 'அருவியூர் நகரத்தார்' எனும் வணிக சமூகத்தினரைப்பற்றிப்பல்வேறு கல்வெட்டுக்களை ஆராய்ந்து சீ. இலட்சுமணன் எழுதியுள்ள கட்டுரை ஒரு சமூக ஆய்வுக்கட்டுரை—என்கிற முறையில் இம்மலரில் இடம்பெற்றிருக்கிறது.

ஒரு மொழிபெயர்ப்பு நாவலைக் கூட எங்ஙனம் ஆழ்ந்த ரசனையோடு படிக்க முடியும் என்பதைத் தனது 'அவன் விதி'—பற்றிய கட்டுரையில் பாவலர்மணி. ஆ. பழநி எடுத்துக்காட்டுகிறார். இக்கட்டுரையைப் படித்த பின் 'அவன்விதி' —என்ற ருஷ்யச் சிறுகதையை மீண்டும் படிப்போருக்குப் புதிய புதிய இலக்கிய அனுபவங்கள் ஏற்படும்.

நமது பண்டைய வாழ்க்கைமுறையைப்பற்றி ஒரு மறு பரிசீலனை செய்யப்பட்டுவரும் காலமிது. அந்த அடிப்படையில் சித்தர்களின் மருத்துவச் சிறப்பை அறிமுகப்படுத்தும் வகையில், அ. பாண்டியன், R.K. சுந்தரராசன் ஆகியோரது கட்டுரைகள் இந்த மலரில் இடம் பெற்றிருக்கின்றன.

தொடரும் இலக்கியத் திங்களிதழ், தொடர்ந்து சமய ஒருமைப்பாட்டை வலியுறுத்திக்கொண்டே வந்திருக்கிறது. செக்யூலரிசம் என்பது, பிறமதங்களை மதித்தல் என்று தனது கோட்பாடாகச் சொண்டிருக்கிறது. கடந்த காலங்களில் தொடரும் இதழ்களில் வெளியான பலபடைப்புக்களும், எடுத்தாளப்பெற்ற பலமேற்கோள்களும் இதனை உறுதிப்படுத்தும் இந்தக் கண்ணோட்டம் தேசபக்தியும் — மானுட நேயமுமகொண்ட எவருக்கும் பொதுவான கண்ணோட்டம்தான் என்பதனை இம்மலரில் வெளியிடப்பட்டுள்ள, தவத்திரு. குன்றக்குடி அடிகளார் FRONT LINE—க்கு அளித்த பேட்டியின் மொழி பெயர்ப்பையும், ஸையத் ஹஸைம் அலி — NEW THINKING COMMUNIST—இதழில் வெளிவந்த கட்டுரையின் மொழி பெயர்ப்பையும், பாரதியார் 1909-ம ஆண்டிலேயே சொன்ன கருத்தையும் படிக்கும் எவரும் ஏற்றுக்கொள்வர்.

இன்றைக்கு மனித குலத்திற்கு ஏற்பட்டிருக்கும் பல்வேறு அக-புற நெருக்கடிகள், அரசியலில் லஞ்சம், மானுட நேயச் சிதைவு, பசி, பொருளாதார ஏற்றத்தாழ்வு, மத-இன-சாதிமோதல்கள் என்ற பல்வேறு பிரச்சனைகளைப்பற்றி ஆழ்ந்த கவலையோடும், அக்கறையோடும் எழுதப்பெற்றிருக்கிற கவிதைகள், கதைகள், மொழிபெயர்ப்புக்கள் இந்த மலரில் இடம் பெற்றிருக்கின்றன. இந்தப்படைப்புக்கள் உங்களுக்குள்ளும் சில கேள்விகளை எழுப்பி உங்கள் சிந்தனையைக் கிளர்த்துமானால் அதுவே எங்களுக்குக் கிடைக்கும் பெரும்வெற்றி என்று கருதுகிறோம்.

நாங்கள் இந்த இலக்கிய முயற்சியைத் தொடங்கிய பொழுதிருந்தே எங்களுக்குப்பக்கமாக பலமாக இருந்து வழிநடத்திவரும், சிங்கம்புணரி இந்திய முற்போக்கு எழுத்தாளர் தேசியச் சம்மேளனம், ஜேசீஸ், முதலான அமைப்புக்களுக்கும், இந்தமலர் வெளிவருவதற்குப் பொருளுதவியளித்த வணிகப்பெருமக்களுக்கும் — இலக்கிய அன்பர்களுக்கும், கடந்த மூன்றாண்டுகாலமாக, எவ்விதப்பிரதிபலனும் எதிர்நோக்காமல் தொடரும் இதழ்களை உருளச்சு செய்து எங்களுக்குத்தாயாயிருந்து வளர்த்த, திருமதி. அழகம்மை முத்தப்பனுக்கும், இந்த மலருக்கும், முந்தைய தொடரும் இதழ்கள் பலவற்றிற்கும், முகப்போவியங்கள் வடிவமைத்துக் கொடுத்த ஓவியப்புலவர் என். சொக்கலிங்கத்திற்கும் இதழ்வெளிவரும் மாதந்தோறும், அது குறித்த விமர்சனக் கூட்டங்களை, சிங்கம்புணரி, பிரான்மலை, மேலைச்சிவபுரி ஆகிய பகுதிகளில் நிகழ்த்தவுதவிய பெருமக்கள் அனைவருக்கும், ஒரு புத்தகத்தை அச்சிடுவதற்கான போதிய அச்சக வசதிகள் இல்லாதபோதிலும், ஓர் இலக்கியப்பணியில் ஈடுபட வேண்டுமென்ற ஆர்வத்தோடு இம்மலரை அச்சிட்டுக்கொடுத்த கண்ணன் அச்சகத்திற்கும், படைப்புக்கள் அளித்த எழுத்தாளர்களுக்கும், இம்மலர் சிறக்கப் பல்லாற்றானும் உதவிய அனைவருக்கும் நாங்கள் என்றென்றும் நன்றி கொண்டிருப்போம்.

**கிருங்கை சேதுபதி,**
கிருங்காக்கோட்டை - 624 502
பசும்பொன் மாவட்டம்.

—தொடரும் குழுவினர்
10—7—1993

---

முறையாய் இலக்கை அடையும் வரைக்கும் வளரும் — வெற்றி
முனையை எட்டும் வரைக்கும் பயணந் தொடரும்.

---

எங்கு மனம் பயமற்று விளங்குகிறதோ,
எங்கே தலை கம்பீரமாய் நிமிர்கிறதோ,
எங்கு அறிவு சுதந்திரத்துடன் பொலிகிறதோ,
எங்கு குறுகிய சாதிமதப் பிளவுகளால்
உலகம் உடையாமல் உருப்பெற்றிருக்கிறதோ,
எங்கு உண்மையின் ஆழத்தினின்று
சொற்கள் உதயமாகின்றனவோ,
எங்கே தளரா முயற்சி பரிபூரணத்தை நோக்கிக்
கைகளைப் பரப்புகிறதோ,

எங்கு பகுத்தறிவெனும் தெளிந்த ஆறு
மாண்பொழிந்த பழக்கங்களான பயங்கரப்
பாலை மணலில் பாயாது மீள்கிறதோ,
எங்கே விரிந்த சிந்தனையிலும் செயலிலும்
எனது உள்ளத்தை நினது அருள் இழுத்துச்
செல்கின்றதோ,
அந்தச் சுதந்திர சுவர்க்கத்தில் என் அப்பனே
எனது நாடு விழித்தெழுவதாக...!

—தாகூர்

"தமிழிலக்கியத் துறையில் தனக்கென ஒரு தனி உயரத்திலிருந்து தனது எழுத்துக்களின் மூலமாகப் படிப்போர்கள் மனதில் அறிவுக் கிளர்ச்சியை ஏற்படுத்தி அவர்களோடு சமூகப் பிரச்சினைகளைக் குறித்து ஒரு உரத்த விவாதத்தை நடத்திவரும் திரு. ஜெயகாந்தன் அவர்களுக்கு இலங்கையைச் சார்ந்த சஹானா என்கிற வாசகி எழுதிய கடிதத்தையும், அந்தக் கடிதத்தில் கேட்கப்பட்ட கேள்விகள் குறித்து திரு. ஜெயகாந்தன் அவர்களோடு தொடரும் குழுவினர் நடத்திய உரையாடலையும் இங்கே தருகிறோம்"

---

# இலங்கையிலிருந்து வந்த கடிதமும் எழுத்தாளர் ஜெயகாந்தன் தந்த பதிலும்

---

A.S. Sahana
Sri Lanka
*9th Dec. 91*

என் அபிமான எழுத்தாளர் திரு. ஜெயகாந்தன் அவர்களுக்கு வந்தனங்கள். என்றும் நலமே உங்களுக்கு விளையப் பிரார்த்தனைகள்.

இந்தச் சிறியவள் உங்களது பரம — பரமத்திலும் பரமரசிகை. இந்த அறிமுகம் மட்டும் போதும் என்று நினைக்கிறேன்.

'இந்த நாவாலை எழுதுவதன் மூலம் என்னைப் புதிதாய் ஒரு சோதனையில் நான் ஈடுபடுத்திக் கொண்டேன்' என்று 'சில நேரங்களில் சில மனிதர்கள்' முன்னுரையில் சொல்லியிருக்கிறீர்கள் அதுபோல் ஒரு சோதனையில் நானும் என்னை இப்போது ஈடுபடுத்திக் கொள்கிறேன். தேறிவிட்ட மகிழ்ச்சி உங்களுக்கு எனக்குத் தேற-முடியுமா? அறியேன்.

உங்களுக்கு இப்படி ஒரு கடிதம் எழுதுவதைத்தான் குறிப்பிடுகிறேன். எனது 14 வயதிலிருந்து உங்கள் கதை-களைப் படிக்கிறேன். தேடித்தேடிப் படிக்கிறேன். இப்போது வயது 24 ஆகிறது. ரொம்பக் குறைவான உங்கள் நூல்கள்தான் கிடைக்கின்றன. எனினும் சளைக்காமல் தேடுகிறேன்.

இதுவரை உங்களுக்கு ஒரு கடிதம் எழுதவேண்டுமென்று நினைத்ததில்லை. அந்தளவு எனக்குத் தகுதி கிடையாது என்று நினைத்தேன்.

சென்ற ஜனவரியில் நீங்கள் 'எடிட்' செய்த 'குமுதம்' பற்றிக் கேள்வியுற்று இற்றைவரை அதைத் தேடினேன். எதிர்பாராமல் சில நாட்களுக்கு முன் கிடைத்தது. ஒவ்வொரு வரியையும் ஆழ்ந்து படித்த பிறகு—உங்கள் Office address உம் கண்ட பிறகு—எழுத முடிவெடுத்தேன்.

இந்தக் கணம் வரை என்ன எழுதுவதென்று தோன்றவில்லை. ஆனால், எழுதியே தீரப்போகிறேன்.

இத்தகைய வாசக—ரசிக—எழுத்துக்களால் எல்லாம் நீங்கள் பாதிக்கப்பட மாட்டீர்கள் என்பதை நன்கறிவேன் ஆனால், இந்த உலகத்தின் ஒரு மூலையில் இப்படி ஒரு ரசிகை உங்களுக்கிருக்கிறாள் என்று இப்போதாவது காட்டிவிட வேண்டும் என்ற ஆசையில்—உங்கள் எழுத்துக்களை நான் அறிந்துகொண்ட 10 வருடங்களுக்குப் பிறகு—என் முதல் கடிதம் வரைகிறேன்.

உங்கள் மீதான எனது பக்தி, admiration — worship எத்தகைய தென்றால், எனது நெருங்கிய வட்டத்தார் யாரிடமும் உங்கள் பெயரைக் குறைந்தது ஒரு தடவையாவது நான் பிரஸ்தாபிக்காது இருந்ததில்லை. என் நண்பர்களிடத்தே "நீ தானே ஜெயகாந்தன்" என்று பெயர் பெற்றிருக்கிறேன் (சிரிப்பு வருகிறதா?)

உங்களது "ஒரு நடிகை நாடகம் பார்க்கிறாள்" 3 முறை படித்திருக்கிறேன். இன்னும் படிக்க ஆசை. நேரமில்லை அடிக்கடி, Under Line பண்ணிய வார்த்தைகளை எடுத்துப் பார்த்துக் கொள்வேன்.

அதில், கல்யாணி நடிக்கும் நாடக அரங்கின் திரையிலுள்ள துவாரம் ஒன்றுபற்றி 2 பக்கங்களுக்கும் அதிகம் எழுதியிருக்கிறீர்கள். உங்களது எழுத்து லாவண்யத்துக்கு அது ஒரு சிறந்த sample.

'உயர்வும், எளிமையும் நிறைந்த மனிதப்பண்புகள் எப்போதும் என்னைக் கவர்ந்து வந்துள்ளன' என்று 'ஒரு மனிதன் ஒரு வீடு ஒரு உலகம்' முன்னுரையில் கூறியிருக்கிறீர்கள். அதை உங்களது ஒவ்வொரு எழுத்திலும் நான் தரிசித்திருக்கிறேன். 'மனித வர்க்கத்தின் இருண்ட பக்கங்களையே வெளிக்காட்டுகின்றவன்' என்ற உங்களைப் பற்றிய பாமரத்தனமான விமர்சனம் அத்தோடு அடிபட்டுச் சென்று விடுகின்றது.

'குமுதத்தில்' தொடராக எழுதிய வாழ்க்கை அனுபவங்களில் சொக்கிப்போயிருக்கிறேன். உண்மையில், உங்களது பால்யப் பிராயமே ஒரு அசாதாரணத் தன்மைகளோடு துவங்கியிருக்கக் காண்கிறேன். உங்களது இளமை அனுபவங்களே நீங்கள் ஒரு வித்தியாசமான மானிடர் என்று உங்களை வெளிச்சமிட்டுக் காட்டியிருக்கின்றன.

ஒரு இக்கட்டான நிலையில்—உங்களது 10 வயதில் உங்கள் தாயார் எடுத்த துணிச்சலான முடிவைப் படித்து வியந்திருக்கிறேன். 'புருஷனே வேண்டாம் என்று வந்த பிறகு அவனது வீடு எதற்கு?' என்று துணிச்சலாகப் பதிலளித்த உங்கள் தாயார், 'உன்னையும் சுந்தர மூர்த்தியையும் தவிர வேறு யாரையும் நான் காதலிக்கவில்லை' என்று எழுதி வீசிய அந்தப்பெண், உங்கள் வீட்டில் அடுக்கடுக்காக நிகழ்ந்த மரணங்கள் இவையாவுமே உங்களை இன்று இப்படி ஒரு தலைசிறந்த எழுத்தாளராகப் பரிணமிக்கச் செய்ததில் பெரும்பங்காற்றியிருக்-கின்றன—பங்காற்றியிருக்கிறார்கள் என்று எனக்குப் படுகின்றது.

உங்களது தாயாரைப் போலவே என்தாயாரும் கணவனால் ஒதுக்கப்பட்டவர்கள். இரண்டு குழந்தைகளுடன் நடுத்தெருவில் நின்றவர்கள்; துணிச்சலாக இன்னொருவரைக் கரம்பிடித்து இன்று எமது நல்வாழ்வுக்குக் காரணமாக இருக்கிறார்கள்.

உங்களைப் போலவே எனக்கும் என்னை விட்டுச் சென்ற தந்தையோடு எவ்விதக் கோபமில்லை அவரது மரணத்-திற்குப் பிறகு அவரைப்பற்றிய வெறுப்பே அன்பாகக் கனிந்து விட்டது ஹென்றியின் தந்தை சொல்வது போல், "எனக்கு யார்மேலயும் கோபமோ, வருத்தமோ, கிடையாது. அதுக்காக அவங்கள நெனச்சு நா உருகவும் இல்லை .....

உங்களைப் போலவே எனக்கும் மரணபயம் இல்லை. யார்மீதும் கோபப்பட்டால் அவரைவிட அவருக்காக வருந்தும் Limp hearted fellow மட்டுமல்ல, reserved type உம் கூட.

இப்படியெல்லாம் முடியுமானவரை உங்களோடு என்னை ஒப்பிட்டு இணக்கம் காண்பதில் நிறைய மகிழ்ச்சி எனக்கு உங்களைப் போலவே ரஜோ குணமும், தமோ குணமும் பின்னிப் பிணைந்த மனிதர்களைப் படிப்பதில் அதிக சுவை எனக்குண்டு.

உங்களது 'பிள்ளையார் அனுபவம்' படிக்கையில் முதல்தடவையாக உங்களைப் பற்றிய இறுக்கமான மரியாதை உணர்வு குறைந்து லேசான நெகிழ்வுணர்வு தோன்றிற்று உங்கள் 'குமுதம்' படித்த பிறகு இன்னும் அது அதிகரித்திருக்கிறது.

உண்மையில் குமுதம் தான் உங்கள் எழுத்துக்களை விடுத்து உங்களைச் சரியாக எனக்குக் காட்டியுள்ளது என்று நினைக்கிறேன்.

"எனது சாதி அழியட்டும். சாதிப்பண்புகள் அழியக் கூடாது" என்று சீதனம் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறீர்கள். பலர் பலவிதமாகவும் கருத்துக் கூறிய பாபரிமஸ்ஜித் விவகாரம் கொர்பச்சேவ் சீர்திருத்தம் பற்றியெல்லாம் நாலே வரிகளில் கூறியிருக்கிறீர்கள். எந்த இடத்திலும் உண்மையையும் நேர்மையையும் ஆதரிக்கும் உங்களது உன்னத குணம் நன்கு அதில் புலப்படுகிறது.

அம்மாவுடைய இறப்பு பற்றிய உங்கள் கருத்து ரொம்பத் துணிச்சலானது பலர் போலியாக வேனும் நசுங்கி—உலர்ந்து போன உறவுகளைப் பற்றித் தூக்கி வைத்துப் பேசுவதுண்டு நீங்கள் எப்போதுமே வித்தியாச-மானவர் அல்லவா?

முன்னொரு 'குமுதத்தில்' உங்களது தம்பி—நீங்கள் தாத்தா வீட்டுக்கு எடுத்துச்சென்ற தம்பி—இறந்துவிட்டதாக எழுதியிருக்கிறீர்கள். உங்களது குமுதத்தில் உங்கள் தம்பி ஒரு Factoryயில் வேலை பார்ப்பதாக எழுதியுள்ளீர்கள். முரண்பாடாகத் தெரிகிறதே, எதுசரி?

இரண்டு பெண்டாட்டிக்காரர்கள் பற்றிப் பொதுவாக ஒரு தாழ்வபிப்ராயமே நிலவும். ஆனால், அங்கீகாரம் பெற்ற அந்த மணவாழ்வைவிட பல ஆண்களின் சில்மிஷத் திருட்டுத் தனங்கள் பற்றி எம்மக்கள் எதுவும் வெளியில் சொல்வதில்லை.

இந்த முரண்பாடு எதற்கு? நமது தேவைகளைப் பகிரங்கமாக—ஒளிவு மறைவின்றி நாம் நிறைவேற்றிக் கொள்வதில் என்ன தவறு? இதிலும் நான் உங்களை ஆதரிக்கிறேன். ('அட சும்மா கெடபுள்ளே' —ஞாபகம் வருகிறது)

உங்கள் மனைவியர் இருவரது பெயர்களை நீங்கள் குறிப்பிடவில்லை. உங்களது 'வாழ்விக்க வந்த காந்தி முன்னுரை ஞாபகம் வருகிறது. Mrs. Jeyajanani என்பதுதான் அவர்கள் (முதல் மனைவியின்) பெயரா? ரொம்ப' அழகான பெயர்!

படித்த உங்களது மனைவியோடு சில வேளைகளில் உங்களுக்கு ஏற்பட்ட முரண்பாடுகளின் விளைவாகத்தான் 'ஒரு நடிகை நாடகம் பார்க்கிறாள்', 'கோகிலா என்ன செய்துவிட்டாள்?' 'சமூகம என்பது நாலுபேர்', உண்மை சுடும்' 'கண்ணா மூச்சி' போன்ற கதைகள் பிறந்தனவோ என்று சிலவேளைகளில் எனக்குப்படுவதுண்டு. ஏனெனில் சொந்த அனுபவம் இன்றி இத்தகைய உயர் இலக்கியச் சிருஷ்டிகளைப் படைக்க முடியாது என்பது என் கருத்து. இது தவறாகவும் இருக்கலாம்.

பெண்கள் பிரச்னைகள் பற்றி எத்தனையோ பேர், எத்தனையோ உத்திகளில் எழுதியிருக்கிறார்கள். சிவசங்கரி, இந்துமதி வாஸந்தி ராஜம் கிருஷ்ணன், உஷா சுப்ரமணியன் ........இவர்கள் யாருமே உங்களளவு சிறப்பாக, இங்கிதமாக, ஆழமாகப் பெண்ணுணர்வுகளைத் தெளிவு படுத்தவில்லை என்பது என் கருத்து எவ்வளவு நல்லவளாக இருந்தாலும், self உள்ள ஒரு பெண்ணான கல்யாணியைப் போல் இதுவரை ஒரு பாத்திரம் பிறந்ததில்லை.

உங்களது சிறப்பம்சம் என்னவென்றால், கல்யாணியின் அளவே, ரங்காவையும் சிறப்பித்துக்காட்டுவதுதான். நம் பெண் எழுத்தாளர்கள் பலர் இரு சாராரையும் இத்தனை தெளிவு படுத்தி, நடுநிலை நின்று காட்டியதில்லை. உங்களது விசால மனதே அதற்குக் காரணமோ?

உங்களைப் படித்துப் படித்தே எனக்கும் சுயரசனையும், self ம் உருவாகியிருக்கின்றன. கல்யாணியைப் போன்ற பெண்கள் எந்த மூலை முடுக்கிலாவது தென்பட மாட்டார்களா என்று தேடுகிறேன் ஆண்களைத் திட்டித் தீர்த்தபடியே பெண்ணிலை வாதம் பேசும் சாதாரண எழுத்தாளர்களைவிட, ஒரு நடுநிலை இலக்கியவாதியான உங்களது எழுத்துக்களினால் என்னுள் ஏற்படும் பாதிப்புகளை நான் வரவேற்கிறேன். அதன் காரணமாகவே. என் சுற்றத்தாரிடமும் 'அகங்காரம் பிடித்தவள்' 'படித்த முட்டாள்' என்றெல்லாம் பெயர் வாங்குகிறேன். அது குறித்து எனக்குக் கவலையில்லை.

அந்தநாவல் திரைப்படமாக வந்தபோதும் அதைப்பார்க்க—அப்போது எனக்குப் பதினைந்து வயதிருக்கும்—ரொம்பப் பிரயத்தனப் பட்டேன் Video piece தேடினேன். முடியவில்லை சென்றமாதம் நமது T.V. யில் அத்திரைப்படம் ஒளிபரப்பானபோது நான் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே இல்லை வரிக்கு வரி மீண்டும் உங்கள் நாவலையே படிக்கின்ற மகிழ்ச்சி ஏற்பட்டது. அந்த நிறைவின் காரணமாக மனம் இளகிப்போய் நள்ளிரவுவரை நீண்ட நேரம் அழுதுகொண்டிருந்தேன்.

ரங்கா Character யார்வேண்டுமானாலும் செய்திருக்கலாம். ஸ்ரீகாந்த் நன்றாகவே செய்திருக்கிறார். (அசப்பில் அவரது கிருதாவும், தலைமயிரும் உங்களைப்போலவே. பொதுவாக அத்தகை மீசையும், hair style உம் எனக்குப் பிடிக்காது. ஆனால், உங்களுக்கு அதுவே தனித்த personoality தருவதாக எனக்குப் படுகிறது)

லக்ஷ்மி தான் அசத்தி விட்டார். ஒரு கல்யாணியாகவே அவர் மாறவேண்டுமானால் எந்தளவுக்கு அவர் ஆழ்ந்து அந்நாவலைப் படித்திருக்க வேண்டும்......?

உண்மையில் உங்களை inspire பண்ணுவதற்கு அவருக்கு நிறையத் தகுதி இருக்கிறது.

அந்தச்சினிமா பற்றி எனக்குத் தெரிந்த நிறையப் பேரிடம் விசாரித்தேன். பலபேர் T.V.யை Switch off பண்ணி விட்டார்களாம் ஒரு சில படித்த பெண்கள் கல்யாணி பற்றி ரொம்ப ஈடுபாடோடு பேசினார்கள். ஒரு ஆசிரியர் ரங்காவைச் சிலாகித்தார். ஆனால், நானோ கல்யாணியையும். ரங்காவையும் ஒருசேரவே, ரசித்தேன்; புரிந்தேன், ஏற்றுக்கொண்டேன். உங்களது சமநிலையான பார்வைக்கு அந்த நாவல் — அந்த சினிமா நல்லதோர் எடுத்துக்காட்டு.

நீங்கள் சொல்வது போல் சினிமா ஒரு கலைச்சாதனமாக மட்டும் இருக்குமானால், அந்தப்படம் எத்தனை வெற்றி பெற்றிருக்க வேண்டும்? அது ஒரு Common media யாவாக மட்டுமே இருப்பதால்தான் இன்னும் நம் மக்கள் 'நெத்தியடி' யையும், 'வைகாசி பொறந்தாச்சி' யையும் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். இந்நிலை ரொம்ப காலத்துக்கு நீடிக்கும் என்றேபடுகிறது.

இப்படியோர் சிறந்த நாவலைப் படமாக்கியதன் மூலம்—இந்த risk ஆன முயற்சிமூலம்—நீங்கள் எதிர்பார்த்த பலன் கிட்டியிருக்காது என்றே நான் நினைக்கிறேன். மக்களது ரசனை உயரவேண்டுமென்பதே உங்கள் நோக்கம்.

ஆனால், உயர் ரசனை உடையோரை மட்டுமே ஒருபடி உயர்த்துகின்றன, இத்தகைய Art films என்று நான் நினைக்கிறேன். இந்தப் படத்தை உங்கள் நாவலைப் படித்தோர் மட்டுமே (or) இதனைப் புரிந்து கொள்ளும் சக்தி படைத்தோர் மட்டுமே ரசித்திருக்கிறார்கள், சாதாரண ஜனங்கள் had gone away.

தவிரவும், உங்களது 'சில நேரங்களில் சில மனிதர்கள்' நல்ல தோர் வீணை, 'உன்னைப் போல் ஒருவன்' எதுவுமே இங்கு வரவில்லை என்று நினைக்கிறேன்.

உங்களது 'சில நேரங்களில் சில மனிதர்கள்' கங்கா மறக்கமுடியாத இன்னொரு ஜீவன். சந்தடி மிகுந்த வாழ்க்கை-யின் ஓட்டத்தில் அடிக்கடி என்னுள் மறக்கமுடியாமல் மின்னி மறைகின்ற நட்சத்திரம் அவள். சொல்லப்-போனால், இந்தப் பெயரே ஒருவகைத் தவிப்பை என்னுள் ஏற்படுத்தி விடுகின்றது.

வாசற்படியில் அம்மா அழுதுகொண்டிருக்கும் போது 'இவளை எப்படி சமாதானப்படுத்துவது? இப்போ நான் என்ன செய்வது?' என்று அவள் யோசித்துத் தயங்குகிறாளே அந்த ஒரு கட்டத்தில் நான் எத்தனையோ தடவை கலங்கியதுண்டு. எத்தகையதொரு தத்ரூபமான கட்டம் அது?

கங்கா—அவளது தாய்—அவள் வசிக்கும் வீடு—அந்தத்தெரு—இவை எல்லாமே என்னுள் ஒரு நிதர்சன கனவாகப் பலதடவை விரிந்து மறைந்ததுண்டு. நீங்கள் நம்பமாட்டீர்கள் சார்! அந்தக் கங்காவை நான் நேரிலும் சந்தித்திருக்கிறேன் எனது தோழி அவள். பெயர் மட்டும் வித்தியாசம். மற்றபடி உங்கள் கங்காவைப் போன்றதே ஒரு பாத்திரம் அது. ஆனால், தனக்கு நடந்த—தன்னையறியாமலேயே நடந்த—அத்தகையதொரு விபரீதத்தை அவள் யாரிடமும் சொல்லவில்லை, என்னைத்தவிர. கங்காவுக்கு நேர்ந்த கதி அவளுக்கு நிகழாமல் போயிற்று. இத்தனைக்கும் அவள் உங்களையோ, உங்கள் கங்காவையோ அறிந்தவளுமல்ல. நான்தான் உங்களை அவளுக்கு அறிமுகப்படுத்தினேன்.

அதுமட்டுமல்ல சார்! அவளது மாமாகூட அசல் உங்கள் வெங்கட் மாமாதான். கதைகதையாக அவரது இரட்டை வேட விளையாட்டுக்கள் பற்றி அவள் என்னிடம் சொல்லியிருக்கிறாள். அதைக் கேட்டபிறகு எனக்குள் ஏற்பட்ட வியப்புக்கு அளவேயில்லை.

அப்பாவிக் கங்காவையும், Sadist ஆன வெங்கட்மாமாவையும் படித்த யாருக்குமே உங்களது நாவல் ஒரு வக்ரப்-படைப்பாகவே தோன்றியிருக்கும். ஆனால், எனக்கு மட்டும் ஒரு நிஜப்படைப்பாகவே உங்கள் கதை தோன்றிற்று. அதன் காரணமாகவே அந்த நாவல் எனது மிகப்பிரியமான உங்களது இன்னொரு நாவலாயிற்று.

ஆனால், உங்கள் கங்காவைவிட என்தோழி புத்திசாலி இப்போது மணமுடித்து கணவனுடன் இன்பமாக வாழ்கிறாள். ஞாபகமா, கங்கா கூட தான் புத்திசாலித்தனமாக நடந்து கொண்டிருக்கக் கூடதா என்று ஓரிடத்தில் கவலைப்படுகிறாளே.

எப்படியோ ஒரு விதத்தில் அத்தகைய மனோ வியாதிக்காரியை வெளிச்சம் போட்டுக்காட்டியதற்குப் பிராயச்-சித்தமாகவோ என்னவோ, 'கங்கை எங்கே போகிறாளை'ப் படைத்துவிட்டீர்கள்!

அந்த இரண்டாம் பாகத்தைப் படைத்ததன் மூலம் உண்மையிலேயே உங்களுக்குள்ள மானுடம் பற்றிய நற்கருத்தும், நல்ல சித்தமும் இன்னும் பிரத்யட்சமாகி விட்டன.

ஏதோ ஓரிடத்தில் அவள் தவறிவிட்டாலும், தனது வாழ்க்கையின் இறுதி மூச்சுவரை அவள் இந்தியத்தமிழ்ப் பெண்ணாகவே இருந்தாள் என்கின்ற ரீதியிலான அந்த முடிவு, இந்தியப் பண்பாட்டின் மீது உங்களுக்கிருந்த—இருக்கின்ற—அசைக்கமுடியாத நம்பிக்கையையும் வெளிப்படுத்திவிட்டது.

''எவ்வளவுதான் சிக்கல் மிகுந்திருந்த போதிலும், வாழ்க்கையின் ஒவ்வொரு பிரச்னையிலும் முரண்பாடுகளே மலிந்திருப்பினும், மனித வாழ்க்கையின் பொதுவான கதி உன்னதமாய்த்தான் இருக்கிறது என்பது வாழ்க்கையை ஒரு வெறியோடு வாழ்ந்து அனுபவித்தவர்கள் மட்டுமே உணரத்தக்க ஒரு ஞானம்'' என்று கூறியிருக்கிறீர்கள், என் வாழ்க்கையில் சிக்கல்கள் மிகுந்து பூதாகரமாகத் தோன்றும்போதெல்லாம் உங்கள் வரிகளே எனக்கு ஆறு-தலளிக்கின்றன. அதன் காரணமாகவே ஒரு முறையே கிடைக்கும் இந்த வாழ்க்கையின் மீது எனது பற்றும் அதிகரித்திருக்கிறது. இல்லையென்றால் எத்தனையோ பிரச்னைகள் என்னை ஆட்கொண்டிருக்கும் இந்த நிமிஷத்திலும் இத்தனை சாவதானமாக உட்கார்ந்து உங்களுக்கு இந்தக் கடிதத்தை எழுதிக்கொண்டிருப்பேனா?

நேர்மையும், அஞ்சாமையும் எல்லாராலும் புகழப்படுகிறது என்று உங்களது வாழ்வில் ஏற்பட்ட புயல்களை நீங்கள் 'ஒரு இலக்கிய வாதியின் அரசியல் அனுபவங்களில்' கூறியிருக்கிறீர்கள். இத்தனைத் துணிச்சலும், வீரமும், மிக்க உங்களுக்கே அப்படியென்றால் இந்தச் சிறுமி.....?

எனினும் எனது ஒவ்வொரு மைல்கல்லிலும் நான் உங்களது அந்த வரிகளையே மார்க் பண்ணுவதற்குச் சங்கற்பம் செய்துள்ளேன். உங்களது பிரியத்துக்குரிய 'மௌனி'யின் 'மாறுதல்' கதை எனக்குப் புரியவே இல்லை, சார். ஒரே குழப்பம்.

எனக்கென்றால் உங்களது 'கண்ணாமூச்சி' போலவோ, 'புதுச்செருப்பு கடிக்கும்' போலவோ, 'கோடுகளைத் தாண்டாதகோலங்கள்' போலவோ ஒரு சிறந்த கதை தமிழில் இல்லை.

Contemporary writing படிப்பதில்லையென்று கூறியிருக்கிறீர்கள். உங்களைப் போன்ற பெரிய இலக்கியவாதி ஒருவருக்கு அது சாத்தியம். நமக்கு எங்கே சார்? ஆமாம், அப்படி நீங்கள் சொல்லக் காரணம் என்ன? 16வயதிலேயே முதல் கதை எழுதியிருக்கிறீர்கள்! எனது முதல் கதையும், கவிதையும் 21வயதில் பிரசுரமாகின களம் 'மல்லிகை'

உங்களது எழுத்தையே எனது மானசீகக் கோட்பாடாகக் கொண்டு தொடர்ந்தும் எழுத வேண்டும் என்பது எனது தீராத ஆசை.

கடைசியாக ஒரு விசயம் சார் போதைப் பொருள் பாவனை பற்றி நிறைய எழுதியிருக்கிறீர்கள். பாரதியார் போன்ற பெரிய மனிதர்களையும் உதாரணம் காட்டியிருக்கிறீர்கள். உங்களைப் போன்ற முதிர்ந்த—வாழ்வு பற்றிய தீர்க்கமான பார்வை கொண்ட—இலக்கியவாதிக்கு அது சாத்தியமாகலாம். எனக்கென்றால் அது சரியாகப் படவில்லை. கூறுவது பிழையாயின் மன்னித்து விடுங்கள்.

'ஒரு இலக்கியவாதி ஓய்ந்துவிட்டால் மற்றவர்கள் சந்தோஷப்படுகிறார்கள்' என்று குறை கூறி இருந்தீர்கள் 'குமுதம்' படித்தபிறகு அது உங்களைப் பற்றியே நீங்கள் கூறியதோ என்று தோன்றிற்று.

ஏன் சார், இப்போது நீங்கள் எழுதுவதில்லை? உங்களிடமிருந்து ஏதாவது ஒரு சிருஷ்டி எமக்குக் கிடைத்தாலும் அதைப் பொக்கிஷமாகக் காப்பாற்ற நாங்கள் தயார். Please மீண்டும் எழுதுங்கள்.

இந்தக் கடிதத்தை நீங்கள் எந்தளவுக்கு அங்கீகரிக்கிறீர்கள் என்பதை நானறியேன். படித்துவிட்டு குப்பையில் கூடப் போடலாம். ஆனால் எனது முதலும், இறுதியுமான ஆசை இது, உங்களுக்கு எழுதவேண்டுமென்பது.

குறைந்த பட்சம் உங்களிடமிருந்து ஒரு வரியில் ஒரு *Post card* வந்தாலும்மிகமகிழ்வேன்.

நானும் என்கணவரும் (2 வருடங்களுக்கு முன் திருமணம். Proposed marriage) சிலவேளை மிகவிரைவில் அங்கு வரவுள்ளோம். முன்னர் ஒருமுறை புறப்பட்டு ராஜீவ்காந்தி கொலையின்பின் மனமில்லாது போயிற்று.

வந்தால் உங்களை உங்கள் Office-ல் சந்திக்க முடியுமா?

நான் படிக்காத உங்களது, நாவல்கள் ஏராளமுண்டு அங்கு கிடைக்குமா? அறிய ஆவல்!

பதில் எதிர் பார்த்து இந்தச்சிறுமி,
—ஸஹானா—

**உங்களது படைப்புக்கள் எல்லாம், உங்களது சொந்த அனுபவங்களின் வெளிப்பாடுகள்தாமா?**

அனுபவம் தான். பிறருடைய அனுபவங்களை—மாந்தர் மட்டுமன்று பிற ஜீவராசிகளின் அனுபவங்களைத் தனது சொந்த அனுபவமாக ஆக்கிக் கொள்வதனாலேயே ஒருவன் படைப்பாளியாகிறான். படைப்பாளியும் ஒரு சாதாரண மனிதனே என்கிற முறையில் அவனுக்கும் சாதாரண சொந்த அனுபவம் நிறைய உண்டு. அவற்றைச் சலித்தெடுத்துச் சொல்வதிலேதான் படைப்பின் ரகசியம் அடங்கி இருக்கிறது. சொந்த அனுபவங்களை அப்படியே எழுதினால் சகிக்காது; பயனும் தராது தற்கால எழுத்தாளர்கள் பலர் இந்தச் சகதியில் விழுந்து தத்தளிப்பவர்களே ... !

**பெண் எழுத்தாளர்கள் சித்திரித்துக் காட்டாத அளவுக்கு, ஆண்களைச் சித்திரிக்கிற அளவுக்கே தங்களால் எவ்வாறு பெண்களையும் சித்திரிக்கமுடிகிறது?**

ஆண் எழுத்தாளர்களெல்லாம் என்ன ஆண்மையைப் பரத்திவிட்டார்கள்? ஆண், பெண் என்ற நிலை கடந்து ஆத்மாவைப் பார்ப்பவர்களுக்கே எழுத்தாளர்கள் என்று பெயர். அப்படிப்பட்டவர்கள் ஆணாயிருந்தாலென்ன பெண்ணாயிருந்தாலென்ன? ஆனால் இன்று பலபேர் அலிகளாக இருக்கிறார்கள் என்பதனால்தான் திருமதி. ஸஹானாவுக்கு "என்னை இறைவன் சமைத்திருப்பதாய்தோன்றுகிறது—தன்னை நன்கு தமிழ் செய்யுமாறு......!"

ஒரு தம்பி இறந்துவிட்டதாகக் கூறியிருக்கிறீர்களே. பிறகு ஒரு தம்பி ஃபாக்டரியில் வேலை பார்ப்பதாக எப்படிக் கூறுகிறீர்கள்?

ஒருவனுக்கு ஒரு தம்பிதான் இருக்க முடியுமா?

**இன்றைக்கு வரும்படைப்புக்களைப் படிக்கும் பழக்கம் உண்டா? படிப்பதில்லை எனில் ஏன்?**

1. எனக்குப் பழக்கமில்லை. 2 என்னுடைய எழுத்துப்பணிக்கு, என்காலத்துக்கு முந்தைய காலத்து இலக்கியங்களைப் படிப்பதே எனக்கு உதவிபுரிகிறது. தற்காலப் படைப்புக்களைப் படித்தால் எனது படைப்புகள் அனைத்தும் அவைகுறித்த விமர்சனங்களாகவே மாறிப்போகும் என்கிற பயம். சிலர் விஷயத்தில் நான் பலாத்காரவாதியாக ஆகிவிடவேண்டும் என்கிற அச்சம். எனது சமகாலத்தைச் சேர்ந்த சகோதரர்களோடு வாழ்கிற சௌஜன்யம் கெட்டு விடக்கூடாது என்கிற நல்லெண்ணம். இன்னும் ஒன்றைச் சொல்லி விடுகிறேன். நான் படிக்காமல் இல்லை. நான்படித்தேன் என்று சொல்ல வெட்கப்படுகிறேன். இதனை நான் எல்லாருக்கும் சொல்லுகிறேன் என்று எண்ணாதீர்கள். உங்களைப் போன்ற நல்ல எழுத்தாளர்களுக்கு நான் என்ன சொல்லுகிறேன் என்றுபுரியும் !

**போதைப் பொருள் உபயோகம்பற்றித் தங்கள் கருத்தை அந்த அம்மையார் மீண்டும் அறியவிரும்புகிறாரே?**

அது பற்றி நான் சொல்லவேண்டியதெல்லாம் சொல்லியாகி விட்டது. இனி அதுபற்றிப் பகிரங்கமாக விவாதிக்காமலிருப்பது சமூக நன்மைக்கு உகந்தது என நினைக்கிறேன்.

**ஏன் இப்பொழுது எழுதுவதில்லை?**

நான் எழுதிய அனைத்தையும் எல்லோரும் படிக்கவில்லை என்பதனால் நான் தற்போது எழுதுவதில்லை. நான் எழுதியவற்றையெல்லாம் எல்லாரும் படித்து விட்டபிறகுதான் நான் எழுதுவது சரி. முன்புபோல் எழுதுவதில்லை. ஆனால், எழுதி என்ன ஆக வேண்டுமோ அதைச் செய்து கொண்டுதான் இருக்கிறேன். கிராக்கியிருக்கிறது என்பதனால் உற்பத்தி செய்கிறவனல்ல நான்.

**'தொடரும்' இதழ்குறித்துத் தங்களது கருத்தறிய விரும்புகிறோம்**

அச்சில் வருதலும், அதிக வாசகர்களைப் பெறுதலும் வேண்டும்... !

---

**வல்லிக்கண்ணன்**

# கலையும் கலைஞர்களும்

உன்னத இலக்கியம் என்பதற்கு நீங்கள் வைத்திருக்கும் வரைமுறைகள் என்ன என்று ரசிகநண்பர் ஒருவர் கேட்டார்.

'வரைமுறை' என்று எதுவும் கிடையாது, இருக்கவும் முடியாது என்று சொன்னேன்.

உன்னதப் படைப்பு இப்படி இருக்க வேண்டும் என்று இலக்கணம் பண்ண இயலாது. படைப்பாளியின் கூரிய அறிவு, நுட்பமான உணர்வு, மனப்பண்பு, அனுபவ ஆழம், சுயசிந்தனை, வளமான கற்பனை, இவற்றுக்கெல்லாம் மேலான ஒரு உள்ஒளி, தனித்த பார்வை—அவன் பெற்ற வாழ்க்கை தரிசனம்—படைப்பில் நன்கு பதிவாகி, படைப்புக்கு அழுத்தமும் செறிவும் கனமும் சேர்க்கிறபோது அந்தப்படைப்பு 'சிறந்த படைப்பு' ஆக மிளிர்கிறது. படைப்பாளியின் திறமையும் தேர்ச்சியும் அனுபவமும் அவனது படைப்புகளுக்கு வலிமைசேர்க்கும்.

ஒரே படைப்பாளியின் பல ரகமான படைப்புகளையும் படித்துப் பார்த்தால் இந்த வித்தியாசம் புரியும் புதுமைப்பித்தனின் 'சாப விமோசனம்' 'அன்று இரவில்' போன்ற உன்னதப் படைப்புகளையும் அவரது சாதாரணக் கதைகளையும் படித்தாலேபோதும் டால்ஸ்டாயின் பல நாவல்களையும், ஜனரஞ்சக எழுத்தாளர்களின் கதைச்சுவை மலிந்த கிளுகிளுப்பூட்டும் நாவல்களையும் படித்தால், உன்னதப் படைப்புகளின் தன்மை புரியும்.

இப்படித்தான் சொல்ல முடிகிறது—ரோஜா ஏன் உயர்ந்த புஷ்பமாக மதிக்கப்படுகிறது? மல்லிகை எப்படி சிறந்த மலராக விளங்குகிறது? தாமரை எதனால் உன்னத மலராகக் கருதப்படுகிறது? இதற்கெல்லாம் வரையறைகள் வகுத்து விளக்க முடியாது. நுகர்ந்து ரசித்து இன்புற வேண்டியது தான். கலைஇலக்கிய உன்னதங்களும் அத்தன்மையானது தான்

ஒரு கலைஞனின் வீழ்ச்சி எதனால் எல்லாம் நிகழ்கிறது என்று அந்த நண்பர் கேட்டார்.

—தொடர்ச்சி - எதிர்ப்பக்கம்

# எது பெரிது

டாக்டர் பழ முத்தப்பன்

பாட்டுக்கொரு புலவன் பாரதியின் புதிய ஆத்திச்சூடியில் இடம் பெற்ற தொடர் பெரிதினும் பெரிதுகேள் என்பது ஆத்திச்சூடி என்று எண்ணும் பொழுதே தமிழ் மூதாட்டி ஔவையின் நினைவு நம் கண்முன் நிழலாடும். ஆம். ஆத்திச்சூடி என்ற சிற்றிலக்கிய அமைப்பைத் தமிழ் உலகிற்கு முதன் முதலில் தந்தவள் அம்மூதாட்டியே ஆவாள். அப்பெருமாட்டியின் அடிச்சுவட்டிலேதான் நம் பாவலரும் புதிய ஆத்திச்சூடியைப் படைத்து மொழிந்தார். ஆத்திச் சூடி—என்பது, அகர நிரலில் சுட்டுவது என்று பொருள்படும். சுட்டுவதுதான் சூடி ஆயிற்று. ஆத்திச்சூடிபடைப் பதற்கு இலக்கணம் ஏதேனும் உண்டா என்று பாட்டியல் நூல்களைப் பார்த்தால்—எவ்வித இலக்கணமும் நமக்குக் கிடைக்கவில்லை ஆனால் ஒல்காப் பெரும் புகழ்த் தொல்காப்பியரும் காரிகைப் பேராசானும் நமக்கு ஆதாரமாக விளங்கி—சிறிய இலக்கணக் குறிப்பைத்தந்து சென்றுள்ளனர்

''ஆயிரு தொடைக்குங்கிளை எழுத்து உரிய'' என்பது காப்பியர் காட்டும் இலக்கணம். மோனையும் எதுகையும் எழுத்துக்கள் ஒன்றுவதோடு வருக்க எழுத்துக்களும் ஒன்றிவரலாம் என்பது அச்சூத்திரத்தின் பொருளாகும். அதன்படி தான் உயிர் எழுந்து வருக்கத்தில் ஆத்திச்சூடி நூல்கள் அமைந்துள்ளன. இன்று நமக்குக் கிடைத்-திருக்கும் ஆத்திச்சூடி நூல்களில் மிகவும் பழமையானது ஔவையாரின் ஆத்திச்சூடியாகும்—அதன் பின்னர் பாரதியாரின் புதிய ஆத்திச் சூடி, பாரதிதாசனின் ஆத்திச்சூடி. டாக்டர் வ.சுப மாணிக்கத்தின் தமிழ்ச்சூடி, கவிஞர் நா.ரா. நாச்சியப்பனின் நெறிச்சூடி, பேராசிரியர் ச. மெய்யப்பனின் அறிவியல் சூடி, டாக்டர் தமிழண்ணலின் ஆய்வுச்சூடி பேராசிரியர் சோம இளவரசின் நீதிச்சூடி, கவிஞர் ரெ. முத்துக்கணேசனின் முத்துச்சூடி போன்ற-வையும், சுவாமி சுத்தானந்த பாரதி, கவிஞர் வாணிதாசன் டாக்டர் ந. சஞ்சீவி ஆகியோரின் ஆத்திச்சூடிகளும் எழுந்து தமிழ் இலக்கியத் துறைக்கு அழகு செய்கின்றன. இத்தகு சூடிகள் அனைத்தும் அறம் கூறும் அவை யங்களாக மட்டும் விளங்காது = காலத்திற்கேற்ப — பலதுறைச் செய்திகளைத் தாங்கியுள்ளன என்றால் அது மிகையாகாது.

தமிழகம், தமிழுக்குத் தகும் உயர்வளிக்கும் தலைவனை எண்ணித் தவங்கிடைக்கையில் — பைந்தமிழ்த் தேர்ப்-பாகனாய், செந்தமிழ்த் தேனீயாய் சிந்துக்குத் தந்தையாய் — குவிக்கும் கவிதைக்குயிலாய், திறம்பாட வந்த மறவனாய்—புதிய அறம் பாட வந்த அறிஞனாய் பாரதிப்புலவன் தோன்றி ஆத்திச்சூடி பாடினான். ''அச்சந்தவிர்'' என்ற கட்டளையுடன் தொடங்கி ''வௌவுதல் நீக்கு'' என்ற கட்டளையுடன் முடிகின்ற 110 வரிகளை உடைய புதிய பாணியைப்படைத்தான். அப்பாணியில் அமைந்த ஒவ்வொரு வரியும்—பாரதிப் பாவலனின் உள்ளத்தில் எழுந்த புரட்சிக்கனல் தெறிக்கும் கருத்துக்களாம். அக்கருத்துக்களில் தன்னை இழந்த அவனின் தாசனாம பாரதி தாசன் பாரதியின் புதிய ஆத்திச் சூடியைப் பற்றிக் குறிப்பிடும்போது ......

## கலையும் கலைஞர்களும்—தொடர்ச்சி......

தன்னகங்காரமும் தற்சிறப்புமோகமும் ஒருவனிடம் அளவுக்கு அதிகமாக ஊறிப்போகிற போது—அவன் எவ்வளவு பெரிய கலைஞனாக இருந்தாலும்—அவனுக்கு வீழ்ச்சி நிச்சயம் ஏற்படும். கலைஞனுக்கு தன்னம்பிக்கை தேவை தான். அது தற்பெருமையாகவும் தன்னகங்காரமாகவும் கனத்துக் கொழுக்கிறபோது. அவன் தனக்கு நிகர் யாருமில்லை என்ற நினைப்பில் செயல்புரிகிறான். அது அவனை வீழ்ச்சிப் பாதையில் இட்டுச் செல்கிறது.

ஒரு கலைஞன் தனது திறமையைப் பூரணமாகப் பயன்படுத்த முயலுவதை விடுத்து, மற்றவர்கள் புகழ்கிறார்கள் என்பதற்காகவும், பணம் நிறையக்கிடைக்கிறதே என்பதற்காகவும் பெரும்பாலோரின் தேவைக்கும் ருசிகளுக்கும் தகுந்தபடி உற்பத்தி செய்யத் தயாராகி விடுகிறபோது, அவனது வீழ்ச்சி உறுதிப்படுத்தப்படுகிறது.

புகழ் வெளிச்சமும் பணகாந்தியும் ஒருவனை கிறக்கிவிடவும், அவன் எதைச்செய்ய வேண்டுமோ—தன் ஆற்றலால் எதை உருவாக்க முடியுமோ—அதை உருவாக்குவதற்கு மாறாக, தான் எதைக் கொடுத்தாலும் மற்றவர்கள் ஏற்றுக்கொண்டு மகிழ்ந்து போவார்கள் என்ற நம்பிக்கையோடு, அதிகம் சிரமப்படாமலே உற்பத்தி பண்ணித்-தள்ளுகிறபோதும், கலைஞன் தன் வீழ்ச்சிக்குத் தானே அடிகோலுகிறான். (தனக்குத் தானே குழிதோண்டிக் கொள்கிறான் என்றும் சொல்லலாம் )

அவனது இந்த மனநிலையை வணிக நோக்குடையவர்கள்—சுயலாப நோக்கம்கொண்ட வியாபாரசக்திகள்— நன்குபயன்படுத்திக்கொண்டு அந்தக்கலைஞனை தீவிரமாக ஆதரித்து, வெகுவாக பப்ளிசிட்டிபண்ணி, தாராளமாக அவனுக்குப் பணம்கொடுத்து. அவனை ஊக்கி உற்சாகப்படுத்துகிற போதும், ஒரு கலைஞனின் வீழ்ச்சிப்பாதை நன்கு அமைக்கப்பட்டுவிடுகிறது.

''இந்த நாளில் இந்நாட்டு மக்கட்கு
வேண்டும் பண்பு வேண்டு செயல்களைக்
கொஞ்சமும் பாரதி அஞ்சாது கூறினான்
முனை முகத்து நில்வேல் —முதியவள் சொல் இது
முனையிலே முகத்துநில் —பாரதி முழக்கமிது
மீதூண் விரும்பேல் —மாதுரைத்தாள் இது
ஊண் மிக விரும்பு என உரைத்தான் பாரதி
மேலும் கேளீர் —கோல்கைக் கொண்டு வாழ்
குன்றென நிமிர்ந்து நில்; நன்றுகருது,
நினைப்பது முடியும், நெற்றி சுருக்கிடேல் என்று
எழுத்தில் சிங்க ஏற்றின் குரலைப்
பாய்ச்சுகின்றான் பாரதிக் கவிஞன்.

எனப் போற்றிப் புகழ்வார் அத்தகு நிலையில் பழங்கதை பேசி—பாராளாமல் அடிமைத் தளையில் கட்டுண்ட தமிழரை அடித்து எழுப்பிடும் புரட்சிக்கவி ஆத்திச் சூடியிலும் அனல் தெறிக்கக்கட்டளை வாக்கியத்தைக் கட்டுரைக்கிறார். அக்கட்டளை வாக்கியத்தில் ஒன்றுதான் ''பெரிதினும் பெரிதுகேள்'' என்பது. இத்தொடருக்கு என்ன பொருள்? எப்பொழுதுமே அறநூல்களில் ஒரு வாக்கியத்திற்குப் பொருள் காணும்போது பலவேறுபட்ட கருத்துக்கள் தோன்றுவதுண்டு. எனவேதான் திருக்குறள் உள்ளிட்ட அறநூல்களுக்கு உரையாசிரியர்கள் பலர் தோன்றினர். அந்த முறையில் 'பெரிதினும் பெரிதுகேள்' என்ற பாரதியின் அருள்வாக்கிற்கு மூன்று பொருள்கள் கூறப்பெறுகின்றன. முதலில் அத்தொடரை கட்டளை வாக்கியமாகக் கொள்ளாது இயல்புத் தொடராகக் கொண்டால்—பெரியவற்றில் எல்லாம் மிகப்பெரியது நட்பு என்று பொருள் கிடைக்கும். (ஏனெனின்) கேள் என்பது அங்கு பெயர்ச் சொல்லாக விளங்கி அது நட்பு என்ற பொருளைத்தான் தருகிறது. எனவே உலகில் பெரிதினும் பெரிதாக விளங்குவது நட்பு என்பது பெறப்படும். இதனை வலியுறுத்தும் வண்ணம் நம் சங்க இலக்கியங்களும் பெரிதினும் பெரிதாக நட்பையே குறிக்கின்றன. உதாரணமாக,

''நெய்தல் இருங்கழி நெய்தல் நீக்கி
மீன் உண் குருகினம் கானல் அல்கும்
கடல் அணிந்தன்று; அவர் ஊரே
கடலினும் பெரிது, எமக்கு அவருடைய நட்பே''

என்ற ஐங்குறு நூற்றுப் பாடலை இங்கு சுட்டலாம். உலகில் பெரிய பொருளில் மிகவும் குறிப்பிடத்தக்கது கடல். அந்தக்கடலை விட மிகப் பெரிது காதலன் நட்பாகும், என்று தலைமகள் கூறுவது பெரிதினும் பெரிது நட்பு என்பதை வலியுறுத்தும். அதைப் போலவே,

''நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று
நீரினும் ஆரளவின்றே சாரற்
கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே''

என்ற குறுந்தொகை 3வது பாடலும் நிலத்தினும் பெரிது நாடனின் நட்பு, வானினும் உயர்ந்தது நாடனின் நட்பு, நீரினும் ஆழமுடைத்து நாடனின் நட்பு, என்று நட்பைப் பெரிதினும் பெரிதாகப்படைத்து மொழிகின்றது. இத்தகைய அகப்பாடற் சான்றுகள் கூறுவதுபோல பாரதியும் பெரிதினும் பெரிதாக நட்பைத்தான் கூறியிருப்பாரா? பாரதி வாழ்ந்த காலத்தை இப்பொழுது நாம் நினைத்துப்பார்க்க வேண்டும். அவன் வாழ்ந்தகாலம் நெஞ்சில் உரமுமின்றி—நேர்மைத் திறமுமின்றி கண்ணிருந்தும் குருடராய் வாயிருந்தும் ஊமையராய்—அச்சமும் பேடிமையும் கொண்டவராய் மக்கள் அடிமையாய் வாழ்ந்தகாலம். அத்தகு காலத்தில் மக்களுக்கு நட்புதான் பெரிது என்று எடுத்துச்சொல்லவேண்டும்என்று ஒருக்காலும் நினைத்திருக்கமாட்டான் பாரதி. எனவே பெரிதினும் பெரிதுகேள் என்ற தொடருக்கு நட்பை அவன் கூறியதாக நாம் கொள்ளுதல் வேண்டா.

இனி, அத்தொடரைக் கட்டளை வாக்கியமாகக் கொண்டு பொருள் காணலாம். கட்டளை வாக்கியமாகக் கொள்ளும் பொழுது இருபொருள் பெறப்படும். அதில் ஒன்று ''பெரிதினும் பெரிதான கருத்துக்களையே கேட்பாயாக'' என்பதாகும். இங்கு கேட்பாயாக என்பது கேள்விச் செல்வதைக் குறிக்கிறது. எனவே பெரிதினும் பெரிது கேள்விச் செல்வம் ஆகும் என்று பொருள் கொள்ளலாம். கேள்விச்செல்வம் பெரிது என்பதை அணுவைத்துளைத்து ஏழ்கடலைப் புகட்டி குறுகத்தரித்த குறளைத்தந்த வான்புகழ் வள்ளுவப் பெருமான் 10 குறட்பாக்கள் மூலமாக விளக்கிடுவார். ''செல்வத்துட் செல்வம் செவிச்செல்வம்'' என்றும் ''கற்றிலன் ஆயினும் கேட்க அஃதொருவற்கு ஒற்கத்தின் ஊற்றாம் துணை'' என்றும், ''கேள்வி உடையார் ஆன்றாரோடு ஒப்பர்'' என்றும், கேள்விச் செல்வத்தின் பெருமையைப் பேசுவார். கம்பநாடனும் ''மருந்தினும் இனியகேள்வி செவியுற மாந்து வாரும்''

என்று குறிப்பிடுவார். ''கற்றலின் கேட்டலே நன்று'' என்பார் பழமொழியார். எனவே கேள்விச்செல்வம் பெரிதினும் பெரிது என்பதை நாம் மறுக்க இயலாது. ஆனால் இந்நாட்டினைக் கவிழ்க்கும்பகையைக் கவிழ்க்கும் கவிமுரசாய். நீடுதுயில் நீக்கப் பாடிவந்த நிலவாய்த்தோன்றிய பாரதி ''பெரிதினும் பெரிது—கேள்விச் செல்வம் என்பதை வலியுறுத்தவே ''பெரிதினும் பெரிதுகேள்'' எனக் கூறியிருப்பாரா என்பதை நாம் எண்ணிப்பார்க்க வேண்டும்.

''அன்ன சத்திரம் ஆயிரம் வைத்தல்
ஆலயம் பதினாயிரம் நாட்டல்
பின்னருள்ள தருமங்கள் யாவும்
பெயர் விளங்கி யொளிர நிறுத்தல்
அன்ன யாவினும் புண்ணியம் கோடி
ஆங்கோர் ஏழைக்கு எழுத்தறிவித்தல்''

என்று கல்வியின் மேன்மையைப் பாடியிருக்கும் கவிஞர், கல்வியின் சிறப்பை பெரிதினும் பெரிதாகக் கூறுவதில் ஆர்வமுடையவராக விளங்கலாம். ஆதலால்தான் புதிய ஆத்திசூடியின் முதற்பகுதியில் ''கற்றது ஒழுகு'' என்றும், ''கைத்தொழில் போற்று'' என்றும், ''நீதி நூல் பயில்க'' என்றும், ''பாட்டினில் அன்புசெய்'' என்றும் பலவாறு கல்வியின் மேன்மையைப் போற்றுகிறார். அதுபோல கேள்வியின் மேன்மையைப் போற்றப் ''பெரிதினும் பெரிதுகேள்'' எனச் சொன்னார் எனவும் கொள்ளலாம். ஆனால் கேள்விச் செல்வத்தைவிட அவரின் எண்ணம் அறிவு பெற்றவன் சுதந்திரம் பெறவேண்டும் என்பது தான் மையமாக அமைந்திருந்தது. எனவேதான் ஊமையராய் செவிடராய் வாழ்ந்தது போதும் 'சென்றிடுவீர் எட்டுத்திக்கும் கொண்டுவாரீர் கலைச்செல்வங்களைத் தமிழுக்கு' என்று முழக்கமிட்டார். எனவே அத்தொடருக்கு மூன்றாவது பொருளைக் காண்போம்.

அத்தொடருக்கு பெரிதினும் பெரியவற்றைக் கேட்பாயாக என மற்றொரு பொருளும் கொள்ளலாம் இங்கு கேள் என்பது கேட்டல் என்ற ஏவல் வினைச் சொல் அடியாக நிற்கும் அதாவது ஆசைப்படுதல் என்ற வினையின் சாயலைப் பெற்றிருக்கும். எதை ஆசைப்பட்டாலும் பெரிதினும் பெரிதாக ஆசைப்பட்டு—பெரிதாகவே கேட்பாயாக என்ற விரிந்த பொருளை அத்தொடர் தருகிறது. எனவே பெரிதினும் பெரிதுகேள் என்ற தொடருக்கு பாரதியின் உள்ளக்கிடக்கை. எதை ஆசைப்பட்டாலும் பெரிதாகவே ஆசைப்படு என்ற நிலையில்தான் அமைந்து அத்தொடர் பிறந்திருக்கவேண்டும். ஏனெனின் இத்தொடருக்கு முன் ''புதியனவிரும்பு'' ''பூமியிழந்திடேல்'' என்ற தொடர்கள் அமைந்து பாரதியின் சுதந்திர வேட்கையை நமக்குச் சுட்டிக்காட்டுகின்றன. அந்த நினைவோடு பெரிதினும் பெரிதுகேள் என்பதற்கு முடிந்த முடிபாக—எதனை விரும்பினாலும்—ஆசைப்பட்டாலும் பெரிதாகவே விரும்பு— அல்லது என்ற ஆசைப்படு என்ற பொருளையே கொள்ளலாம்.

---

இலக்கிய உலகில் ஒரு சோதனை முயற்சியாக இருந்த புதுக்கவிதை என்கிற வடிவத்தைப் பொதுமக்களிடம் எடுத்துச் சென்று அந்த வடிவத்திற்கு அங்கீகாரம் தேடித் தந்த பெருமைக்குரியவரும், பதிப்புத் துறையில் பல புதுமைகள் செய்து வருபவரும், தமிழகப் பல்கலைக்கழக ஆசிரியர்கள் இயக்கம் தோன்றக் காரணமாயிருந்த முன்னோடிகளில் ஒருவரும், ஒரு இலக்கிய ஏடு ஒன்றை நடத்தியவருமான கவிஞர் மீராவுடன் தொடரும் குழுவினர் நடத்திய உரையாடலை இங்கே தருகிறோம்.

# மீரா:

— ஒரு கவிஞர்,
— ஒரு பதிப்பாளர்,
— ஒரு பத்திரிகை ஆசிரியர்,
— ஒரு பேராசிரியர்.

புதுக்கவிதை - ஏற்கனவே இருந்தாலும்கூட, அதுக்கு ஒரு வீச்சுக் கொடுத்து—பலரையும் போய்ச்சேர்ந்தது உங்களோட ''கனவுகள் + கற்பனைகள் = காகிதங்கள்'' தான். அதுக்கு முன்னால நீங்க கவிதை எழுதி-யிருக்கீங்களா?

ஓ...... நிறைய எழுதியிருக்கேன்ல. முதல் கவிதை தாமரையில் வந்துச்சு.

**ஜீவாவைப் பற்றியா?**

இல்ல...... பாரதியைப் பற்றி தீபக்குன்றம்ங்கிற தலைப்பில சிவகங்கை சாந்திங்கிற புனைபெயர்ல எழுதியிருக்கேன். நெறைய புனைபெயர் வச்சிருக்கேன் (சிரிப்பு) இப்பக்கூட, அன்னம்விடு தூதுல ''சோழன்''ங்கிற பேர்ல எழுதினேன். ''வாகைமாறன்னு'' முரசொலியில் எழுதியிருக்கிறேன் ஆனா முதல் கவிதை வந்தது தாமரையில தான். பாரதியைப் பற்றித்தான் எழுதினது. எனக்கொரு ''ரேர் ஆபர்சூனிட்டி (அரிய வாய்ப்பு) தான் அது நான் முதன்முதலா வேலை பார்த்த இடம். சரியாச் சொன்னா ஒரு மாதம் ரெண்டு மாதம் தொடர்ந்து வேலை பார்த்த இடம் எட்டயபுரம். அது மாதிரி முதல் கவிதை எழுதினது பாரதி மணிமண்டபத்தில. எப்பவும் சாயங்காலத்திலே அங்கே தான் உட்கார்ந்திருப்பேன். வே ற அந்த ஊர்ல ஒண்ணும் பொழுது போக்கே –59ல எல்லாம் —இல்லே. அநேகமா சினிமாக் கொட்டகை கூட இல்லே. முதன்முதலா பப்ளிஷான கவிதையும், நான் அதிகமா ஈடுபாடு வச்சிருந்த பாரதியைப் பற்றித்தான். –'59, '60ன்னு நெனைக்கிறேன். 'தாமரை' ஆரம்பிச்சு ரெண்டு மூணு வருஷத்துக்குள்ளன்னு நெனைக்கிறேன். அதுக்குப்பிறகு மதுரையிலிருந்து வெளிவந்த 'தமிழ்நாடு' பத்திரிக்கையில் அரசியல் சார்பற்ற கவிதைகள் எழுதியிருக்கேன். ரெண்டு, மூணு வாரத்துக்கு ஒரு முறை கவிதைகள் வெளிவரும். அவை அரசியலுக்கு அப்பாற்பட்ட பொதுவான கவிதைகள். அது தியாகராஜ செட்டியாரின் பத்திரிக்கை அதனால அப்படிப்பட்ட கவிதைகள் எழுதினேன்.

'திராவிடன்'. 'இனமுழக்கம்', 'அருவி' கண்ணதாசனின் 'தென்றல்', நாவலரின் 'மன்றம்' இதுகள்லயெல்லாம் அரசியல் கவிதைகள் நிறைய எழுதியிருக்கேன் படிக்கிற காலத்தில இயல்பாகவே தி.மு.க. வில ரொம்பத் தீவிரமா இருந்த ஆளு நான். இன்னுஞ் சொல்லப் போனா, அந்தத் தலைவர்களோட நேரடித்தொடர்பு அந்த வயசிலேயே எனக்கு உண்டு.

**அந்தப் பத்திரிக்கைகள்ல வந்த கவிதைகள் எல்லாம் புத்தகமா வந்திருக்கா?**

இல்லே ''64லவந்த என் தொகுப்பில அந்தக் கவிதைகள் எல்லாம் இல்லே—காரணம்—வெறும் மொழி உணர்ச்சியையே அரசியலாக்கிக்கிட்ருக்காங்களே ஒழிய, உண்மையான திராவிடநாடு அடையணும்ங்கிறதிலேயோ அல்லது தமிழ்மொழியைக் காப்பாற்றணும்ங்கிறதிலேயோ தீவிரமான, உண்மையான நாட்டம் அவங்களுக்கு இருக்கிறதாகவே போகப்போக எனக்குப் படலே அவங்க திராவிடநாடு என்கிற கோரிக்கையைக் கைவிட்டவுடனேயே சோர்வு ஏற்பட்டிருச்சு, தீவிரமா இருந்தவங்களுக்கெல்லாம் 'சம்பத்' பரவாயில்லையோ அப்படின்னு தோண ஆரம்பிச்சிருச்சு. ஆனாலும். சி என்.ஏ. மேலே மாணவர்களுக்கு ஒரு தனிப்பட்ட மரியாதை இருந்துச்சு. அன்னைக்கு மாணவர் உலகம் எல்லாம் திராவிடநாடு கோரிக்கையைக் கைவிட்டாக்கூட அவர் பின்னாடி போய்க்கிட்டிருந்தது... ஆட்சிக்கு வந்ததுக்குப் பிறகு பலபேருக்குக் கசப்புணர்ச்சி வந்தது. அரசியல்ல பல தவறுகள் அல்லது சரிவுகள் ஏற்பட்ட போது, தீவிரமா இருந்த கவிஞர்கள், கலைஞர்கள் பார்வையெல்லாம் மாறிருச்சு தியாகராஜாக் கல்லூரியில் படிச்ச மாணவர்கள்லேயே பலபேர் அப்படிப் போயிட்டாங்க. இன்குலாப் எல்லாம் ரொம்பத் தீவிரமா இருந்தவரு தான் அதனால அந்தக் காலக்கட்டத்திலேயே மொழியுணர்ச்சிதான் 'சப்ஜெக்ட் மேட்டர்' ன்னு நெனைச்சுக்கிட்டிருக்கோம். பாரதிதாசனோட நேரடியான பாதிப்பு ஒரு குறிப்பிட்டகாலம் இருந்திச்சு. சில கவிஞர்கள்— 60ல எழுதவந்த கவிஞர்கள்லாம் முதல்ல பாரதிதாசனாலதான் ஈர்க்கப்பட்டு, அந்தப்பாதையில்தான் எழுதிக்கிட்டிருந்தாங்க அப்பறந்தான் எல்லாரும் பாரதியார்கிட்ட வந்தாங்க, பாரதியார் கவிதைகளைப் படிக்கறப்ப அவரோட ''ஹையர் பர்ஸ்பக்டிவ்'' —விரிந்து பரந்த விசாலமான பார்வையிருக்கே—அதைப் பின்னால தான் புரிஞ்சுக்க முடிஞ்சுச்சு பாரதிதாசன் நல்ல கவிஞர் அவரும் விரிந்து பரந்த நோக்கோட எழுதியிருக்கார் ஆனாலும் திராவிட நாட்டைத் தீவிரமா எடுத்துக்கிட்டு வெறியோட பேசுவார் பாரதிகிட்டே என்னன்னா ஒரு ''சப்ளிமென்ட்'' —இருக்கும். காங்கிரஸ் இயக்கத்துக்குச் சார்பா அவரோட பாட்டெல்லாம் இருந்தாலும், இந்தக் கடுமையானதெல்லாம் பாரதியார்கிட்டே இருக்காது ரெண்டுபேருமே ஆரம்பத்தில் எல்லாக் கவிஞர்களையும் ஈர்த்திருந்தாலுங்கூட முதல் கட்டத்திலேயே திராவிட இயக்கக் கவிஞர்கள் எல்லாம் பாரதிதாசன் கிட்டதான் ஈடுபாடு கொண்டிருந்தாங்க பின்னாலதான் அவங்கள்லாம் சமுதாயப் பார்வை, பொருளாதார முன்னேற்றம், இந்திய தேசியப்பற்று என்பது தவிர்க்க முடியாதது என்கிறதெல்லாம் வர்றபொழுது பாரதியார்கிட்டே வர்றாங்க ரெண்டு பேருக்கும் நெருக்கம் இருக்கு, குரு—சீடன் இதெல்லாம் இருக்கு. அது வேற விஷயம். ஆனா எந்தத் தடத்திலே போறதுன்னு இருக்குல்ல ... அதுல இவரொரு பாதை அவரொரு பாதை அப்போ தமிழ் நாட்டிலே பெரியாரோட இயக்கம் இருக்கு. பாரதிதாசன் ஒரு பக்கம் பெரியாரை எடுத்துக்கிட்டார் இன்னொரு பக்கம் பாரதியை எடுத்துக்கிட்டார் பாரதியை ஒரு குருவாகவும் பெரியாரை ஒரு குருவாகவும் ஏத்துக்கிட்டார். அவரைப் பொருத்த வரைக்கும் பின்னால பெரியார்கை ஓங்கும்போது பார்ப்பனர்களைச் சாடுதல், திட்டுதல் அவருடைய படைப்புகள்ல நிறைய வந்தது.

**அப்படி எழுதினாத்தான் புகழ்கிடைக்கும் என்பதற்காக வேண்டி பாரதிதாசன் அந்தமாதிரி எழுதினாரா?**

அப்படிச் சொல்ல முடியாது. பாரதிதாசன்கிட்ட விமர்சிக்கக் கூடிய அம்சங்கள் இருக்கலாம். ஆனா அவர் ''சின்சியாரிட்டியை'' ஒண்ணும் சொல்ல முடியாது. கவிஞர்களை எப்படிப் பார்க்கணும்னா யார் உண்மையா

இருக்கக் கூடிய கவிஞர்கள், அப்படின்னு பார்க்கணும். உதாரணமா இளைய கவிஞர்களை வச்சுக்கங்களேன் அதுல பொய்யா இருக்கக் கூடிய கவிஞர்கள் யாருன்னு பட்டியல் சொல்றதைக் காட்டிலும், உண்மையா இருக்கக் கூடிய கவிஞர்களுக்கு ஒரு உதாரணமா இன்குலாபைச் சொல்லலாம். போலீஸ் அடக்கு முறையா இருந்தாலும் எதிர்த்து நிற்கக் கூடிய அளவுக்கு துணிச்சலா சில விஷயங்களைப் பாடறார். அப்படிப் பல கவிஞர்கள் இன்னைக்குக் கிடையாது. பாரதி, பாரதிதாசன் எல்லாம் யாருக்கும் அடிபணிந்தது கிடையாது. எனக்கு இவங்க ரெண்டுபேரோட பாதிப்பும் உண்டு. பள்ளிக்கூட நாளிலேயே எனக்குப் பாரதிதாசன் மேல பற்று இருந்திச்சு. அரசியல் சார்போட அறிமுகமானதனால பாரதிதாசன் நல்லா அறிமுகமாயிட்டார். மேடைகளிலெல்லாம் பாரதிதாசன் கவிதைகளைச் சொல்வாங்க. அவரைப் படிச்சதோட மு.வ, காண்டேகர் இவங்க நூல் எல்லாம் படிச்சிருக்கேன்.

ஐடியலிஸமெல்லாம் வர்றதுக்குக் காரணம் முவ, காண்டேகர்லாம் படிச்சது. திராவிட இயக்கத்திலே இருந்த பொய்களை எல்லாம் பார்க்கிறபோது இந்த ஐடியலிஸத்தினால தான் நாங்க அதிலேயிருந்து விலகிவர முடிஞ்சது மு.வ, நாவல்கள் எல்லாம் படிக்காமப்போயிருந்தா, நான் சரியான பாதையிலே வராமப் போயிருப்பேன். '60-61ல பத்திரிக்கைகள்ல எழுதினதெல்லாம் தொகுப்பிலவரல்லே. '64ல மீ ராஜேந்திரன் கவிதைகள்'னு என்னோட முதல் தொகுப்பு வருது. அப்போ நிறைய விமர்சனமும் வந்தது. அதில பாரதிதாசன் கவிதைக்கு மாறான கவிதையும் இருந்தது—பாரதிதாசன் கவிதையில, தமிழன் ஒருத்தன் தெலுங்குப் பெண்ணைக் காதலிக்கிறான். இவ்வளவுக்கும் அவனுக்கு முறைப்பெண் — அத்தைமகள் — ஒருத்தி இருக்கா அத்தை மகளை விட்டுட்டு, அவளைத் தான் கல்யாணம் பண்ணிக்கு வேன்னுட்டு அவள்கிட்டே போயிப்பேசிக்கிட்டு இருந்தபோது, அவ தெலுங்கு பேசறா, அது தெரிஞ்சவுடனே மனசை மாத்திக்கிடறான். நான் தெலுங்குப் பெண்ணைக் காதலிக்க மாட்டேனுடறான், அவ கிணத்துல போயி விழுந்துடறா. தெலுங்குப் பெண்ணா இருந்தாலும் அவ, அவனை உண்மையாத்தான் காதலிக்கிறா. இவன் என்ன நினைக்கிறான்னா, மொழி அடிப்படையில அவளைப் பிரிஞ்சு வந்து, அத்தை மகளைக் கட்டிக்கிடற மாதிரி எழுதியிருப்பார். இது மொழியுணர்ச்சியோட எழுதின கவிதை இவ்வளவு பெரிய கவிஞர், புனிதமான காதலையும்—அது ஒரு புனிதமான உணர்ச்சி. இண்டர்நேஷனல்ஃபீலிங்—மொழியையும் சம்பந்தப்படுத்தியிருக்க வேண்டியதில்லே. பாரதிதாசனுக்கு எப்பவும் மொழிதான் முக்கியம். இருந்தாலும் அவளோட காதல் உண்மையா இருக்கறபோது, இவர் இப்படிப் படைச்சிருக்க வேண்டியதில்லை-யேன்னு நினைச்சு நான் அதுக்கு மாறா எழுதினேன். மலையாளப் பொண்ணை ஒரு தமிழ்ப் பையன் காதலிக்கிற மாதிரியும், அவ 'நான் ஒரு மலையாளப் பெண் நீங்க தமிழ்ப் பையன் இரண்டு பேரும் கல்யாணம் பண்ணிக்க முடியுமான்னு கேட்க, ஏன் முடியாதுன்னு சொல்லி, ரெண்டுபேரும் ஐக்கியமாயிடற மாதிரியும் எழுதியிருப்பேன் —இதிலே கதை ஒண்ணும் கிடையாது; கருத்துத்தான். இதுக்கு முன்னுரை எழுதின, டாக்டர் இலட்சுமணப் பெருமாள் — நான் என்ன எழுதினேன்ங்கிறதைப் பக்கத்திலேயிருந்து தெரிஞ்சுக்கிட்டதனால பாரதிதாசன் பாட்டையும், இதையும் ஒப்பிட்டுக் காட்டி அவரது சீடர் அவரையும் மீறிப் பாடறார்ங்கிற மாதிரிஎழுதியிருப்பார். அப்ப இது ஒரு சர்ச்சை ஆயிருச்சு, முடியரசன், தமிழண்ணல் இவங்கள்லாம் இதைப் பத்திப்பத்திரிக்கைகள்லே எழுதினாங்க, "பாவேந்தரை இப்படிப் பார்க்கக் கூடாது மொழியுணர்ச்சி மேலோங்கியிருந்த காலத்தில் அப்படிப் பாடினாரு அந்தச் சிந்தனையைப் புரிஞ்சுக்கணும்" —அப்படின்னு எழுதினாங்க. அதனால அந்தத் தொகுப்புக்கு நிறைய வரவேற்பு இருந்துச்சு. அதுக்குப்பிறகு கவியரங்கக் கவிதைகள்தான் எழுதினேன்.

**கவியரங்கக் கவிதைகள் கவிதை இலக்கிய வளர்ச்சிக்கு உதவும் என்று கருதுகிறீர்களா?**

அது ஒரு ஃபார்ம் ஆஃப் லிட்ரேச்சர், கவிதைக்கு நாம என்னதான் இலக்கணம் வகுத்தாலும், இப்படி எழுதலாமா? இப்படி எழுதக்கூடாதா? அப்படியெல்லாம் சொல்ல முடியாது. கவிதையை வசனத்தில எழுதலாங்கிற மாதிரி வந்திருக்கு ஒரு காலத்திலே கவிதை நடையில தான் எல்லாம் சொல்லணும்னு இருந்திச்சு — ஜோசியத்தைச் சொல்லணுமா? நிகண்டு சொல்லணுமா? —அகராதியைக் கவிதை நடையிலே எழுதி வச்சிருக்கான்ல — அந்த நடையை அன்னைக்குப் பயன்படுத்தினாங்க. இன்றைய விஞ்ஞான வளர்ச்சி வந்து வசன நடைக்கு ஏராளமா வாய்ப்புக் குடுத்திருச்சு. அப்பல்லாம் அந்த வாய்ப்புக் கிடையாது. அப்ப, வானசாஸ்திரமா இருந்தாலும் சரி. அகராதியா இருந்தாலும் சரி, எல்லாத்தையும் கவிதை நடையிலே — செய்யுள் நடையிலே — சொல்லணும்னு இருந்துச்சு. அதுல வந்து கவித்துவத்தை அதிகம் எதிர்பார்க்க முடியாது. இப்ப வசனம் வந்திருச்சு. வசனத்திலே கவித்துவத்தோட எழுதினா அதை ஒரு கவிதைன்னு ஏத்துக்கறோம்—கால மாறுதல் தான்! எப்படி உடையில, மத்த பல அம்சங்கள்ல நாம சூழ்நிலைக்கு ஏத்தாப்பல வாழ்க்கை நடத்திக்கிட்டிருக்கோமோ அப்படித்தான் இலக்கியத்திலும் மாறுதல்வரும் இலக்கியத்தில் நாமதான் புனிதத்தைப் பாதுகாத்துக் கிட்டிருக்கோம்ங்கிறது பயனில்லாத வாதம். அந்தக் காலத்திலே முன்னோர்கள் இதையெல்லாம் புரிஞ்சு எல்லாத்துக்கும் ஒழிபியல்னு வச்சான். இலக்கணத்தையும் சொல்லிட்டு, இதெல்லாம் மீறியும் வரும்னு சொன்னான். அதுமாதிரி, 'பழையன கழிதலும் புதியன புகுதலும், வழுவல கால வகையினானே.' என்று சொல்லி வச்சான். இப்படிச் சொன்னாலுமே சிலபேர் உடும்புப் பிடியா நின்னு "அதெப்படிங்க தமிழ்மரபை மாத்தறது"ங்கறாங்க. ஆனா படைப்பாளிதான் அதை உணர்வான். என்ன செய்யலாம்கிறது அவனுக்குத்தான் தோணும். பாரதிதாசனுக்கும் புதுசாச்செய்யணும்னு ஆசை இருந்துச்சு. அவர்காலத்திலே அவரைப் பொருத்தவரைக்கும் பழைய நடையிலே, 'பங்காரு பத்தர்கிட்டே இலக்கணம் படிச்சேன். அவர் சொல்லிக்குடுத்த இலக்கண நடையில எழுதணும்'னு நெனைச்ச பாரதிதாசன்

எளிமையா புதுநடையிலே எழுதணும்னு நெனைச்சதே பெரிசு. இன்னைக்கு ''வெஸ்டன்ட்ரென்ட்'' வந்திருக்கு. இன்னும் சொல்லப்போனா நல்ல புதுக்கவிதை எழுதறதுங்கறது கஷ்டம். மரபுக்கவிதை ஈஸி, மரபுக்கவிதை எழுதறது எளிதா எழுதிடலாம். இதுக்கு எதுகைமோனையே கைகுடுத்துடும். செய்யுள் நடையிலே இருக்கிற ஒட்டம் இருக்கே, அது கை குடுத்துடும். புதுக்கவிதையில விஷயத்தோட எழுதணும்னாகஷ்டந்தான் ..

ஆரம்ப காலத்திலே நான் பத்திரிக்கைகள்ல எழுதியிருக்கேன் எழுபதுகள்ல பத்திரிக்கைகள்ல அதிகமா ஒண்ணும் எழுதலே. 'கனவுகள் · கற்பனைகள் = காகிதங்கள்' வந்ததற்கப்பறம் தான் ஒரு கவனிப்பு ஏற்பட்டுச்சு. அதுக்கு முன்னால இடைப்பட்ட காலத்திலே எல்லாம் கவியரங்கக் கவிதைகள் தான். கவியரங்கக் கவிதைகளை '66லயோ, 67லயோ தொகுத்து ''மூன்றும் ஆறும்''னு வெளியிட்டேன். அதுக்கு அரசாங்கம் பரிசு குடுத்தது. '74ல ''கனவுகள் + கற்பனைகள் = காகிதங்கள்'' தொகுப்பு வந்தபோது, நல்ல வரவேற்பு இருந்துச்சு. அதுக்குக் காரணம் சூழல்தான்.

'மணிக்கொடி', 'எழுத்து' போன்ற பத்திரிக்கைகள் புதுக்கவிதை முயற்சியில்ஈடுபட்டன. 'மணிக்கொடி' 'கலா மோகினி' பத்திரிக்கைகள்ல எழுதின ந. பிச்சமூர்த்தி பத்து வருஷத்துக்கு மேலே பேசாம இருந்துட்டார். அவருக்கே இந்தக் கவிதைகளுக்கெல்லாம் வரவேற்பு இருக்குமான்னு சந்தேகம் வந்திருச்சு திராவிட இயக்க அலை அடிச்சுக் கிட்டிருந்தபோது, எந்தக் கவிதையும் நிற்கலே; நிற்க முடியலே. இதை எல்லாம் மீறி வந்தவங்க பட்டுக்கோட்டை மாதிரி ஆளுங்கதான். பொதுவுடமை இயக்கத்திலே இருந்து கொஞ்சப்பேர் வந்திருந்தாங்க. தொ.மு.சி. ரகுநாதன் கூட கவியரங்கங்களிலே கவிதை பாடினவர்தான், அவர் கவிதையில கம்பீரம் இருக்கும். இந்தக் கால கட்டத்தில புதுக்கவிதைக்கு அவ்வளவு வரவேற்பு இல்லை. சி.சு. செல்லப்பாவின் 'எழுத்து' கூட 200, 250 பிரதிகள்தான் வந்திச்சு. திராவிட இயக்கத்தைச் சார்ந்த கவிஞர்களே புதுமைபண்ணணும்னு முயற்சி செய்ய ஆரம்பிச்சாங்க நான்கூட அப்படித்தான் எனக்குத் தாகூர், கலீல்கிப்ரான் இவர்கள்கிட்ட ஈடுபாடு உண்டு. தாகூர் மாதிரி செய்யணும்னு ஒரு ஆசை இருந்திச்சு. இதெல்லாம் இருந்தும் ஒரு தயக்கம்... இது கவிதை இல்லயேன்னு. எழுபதுகள்ல வந்த புதுக்கவிதைகள்லாம் பார்க்கிறபோது நாம இப்படிச் செய்யலாம்கிற மாதிரி ஒரு நம்பிக்கை. நா. காமராசன் ஒரு பக்கம். நான் ஒரு பக்கம் இது மாதிரி முயற்சி பண்ணினோம். அப்துல் ரகுமான் இதுமாதிரி முயற்சிகள் அப்பவே செஞ்சிருக்காரு இப்ப எல்லாம் மேத்தா, நா. காமராசன் ரெண்டு பேரும் 'நான்தான் புதுக்கவிதைக்கு முன்னோடி, பிரபலப்படுத்தினது'னு சண்டை போட்டுக்கிறாங்க ஆக்சுவலாப் பார்த்தா தியாகராஜா காலேஜ்ல படிக்கிறப்போ முதல்ல முயற்சி பண்ணினது அப்துல்ரகுமான் தான், பல நல்ல கவிதைகள்லாம் எழுதியிருக்காரு ஓசையோட புதுக்கவிதைகள்லாம் எழுதியிருக்காரு ஆனால், தியாகராஜா காலேஜ் ஆசிரியர்கள்கிட்ட கொடுத்தபோது அவங்க யாருமே ஏத்துக்கல'இது என்னய்யா, கவிதையாங்'கிற மாதிரி கேட்டாங்க, 'மேகசின்ல' போடமாட்டேன்டாங்க அப்ப ஒரு நல்ல கவிதையை—அது ஒரு லவ்போயம் தான் —இங்கிலீஷ் புரொபசர் சக்திவேலுக்கிட்ட காட்டினப்போ 'அருமையா இருக்'கேன்னு அவர் சொல்ல, 'இதை மேகசின்ல போடமாட்டேன்கிறாங்கன்'னு இவர் சொன்னதும் 'கொடுப்'பான்னு வாங்கி இங்கிலீஷ்ல பண்ணிப் போடுவோம்னாரு. தமிழ்ல வரவேண்டிய கவிதையை, தமிழ்ல வர்றதுக்கு அன்னக்கி மரபு நடையா இருந்ததாலே ஆங்கிலப்படுத்தி தியாகராஜா காலேஜ்ல 60'லேயோ, 61'லேயோ வெளியிடவேண்டி இருந்துச்சு. அப்போ முதல் முயற்சியை ரகுமான் செய்திருக்காரு. அதுக்குப் பின்னாலதான் காமராசன் வர்றாரு. மேத்தா காமராசுக்கும் ஜூனியர்தான். இவங்கள்லாம் மெட்ராஸ்ல பத்திரிக்கைகள்ளோட, உறவு இருக்கிறதனாலே 'நாங்கதான் அந்தக் காலத்துல இருந்து செஞ்சுக்கிட்டு வர்றோம்'னு சொல்றாங்க. நியாயமாப் பார்த்த பிச்சமூர்த்தியைத்தான் சொல்லணும். பிரபலப்படுத்துனதுன்னு பார்த்தாக்கூட அப்துல் ரகுமானைத்தான் சொல்லணும். அவருக்கு உருது, பிரஷ்யன் மொழிகள்ல பயிற்சி இருந்திச்சு. உருது கவிதை மொழி. சந்தமும், கற்பனையும் கலந்து வர்றது பிரஷ்யன் மொழி அவரது தாய்மொழியே உருதுதான். அதனால அவருக்கு உருதுக் கவிதைகள்ல நல்ல பரிச்சயம். 'கஜல்'லாம் அப்படியே சொல்லுவார். புதுமையா இருக்கும் தமிழ்ல இப்படியெல்லாம் இல்லையேன்னு சொல்லுவார். பல புதுமைகளைச் சொல்லிக்கிட்டிருப்பார். 'ஹிந்தி' சினிமாவுக்குப் போய் உட்கார்ந்தா, படத்துல வர்ற ஹிந்திப் பாட்டையெல்லாம் ட்ரான்ஸ்லேட் பண்ணிச் சொல்லுவார். அதைக்கவிதை நடையில சொல்லுவார். கவிதையோட போக்கு புதுமையா இருக்கணும்னு சொல்லுவார்.

எழுபதுலதான் புதுக்கவிதை பாப்புலராகுது. இந்தக் கட்டத்துல திராவிட இயக்கத்துல இருந்து வந்த காமராசன் லாம் எழுதினவுடனே புதுக்கவிதைமேல ஒருகவனிப்பு ஏற்பட்டது. காமராசன் இந்தி எதிர்ப்புப் போர்க்கவிதைகளை மரபுல எழுதிக்கிட்டிருந்தாரு எழுதினதைக் காட்டிலும் நிறையப் பேசிக்கிட்டிருந்தார். திடீர்னு அவர் கவிதை எழுத ஆரம்பிச்சு, அதுவும் வித்யாசமா எழுதி, அந்தக் கவிதைகள் வந்தபோது கவனிப்பு ஏற்பட்டது திராவிட இயக்கத்துல இருந்து வந்தவங்கள்லாம் மரபைக் காப்பாத்துறதுக்காகவே வந்தவுங்க மாதிரி கருதப்பட்டபோது அவுங்களே இப்படி எழுதுறாங்களேன்னு ஆச்சர்யமாப் போச்சு. ஆனால் நல்லா இருந்ததுனாலே எந்தப் பத்திரிக்கையினாலேயும் காமராசன் கவிதைகளை மறுக்க முடியல. 'குறள்நெறி'யில் கூட காமராசனோட கவிதை வந்திருக்குன்னு நினைக்கிறேன். அப்படி துடிப்பா, வித்யாசமா இருந்தவுடனே சில பத்திரிக்கைகள்லம் புதுக்-கவிதையை வெளியிட்டன. புதுக்கவிதையைப் பிரபலப்படுத்துனதுல காமராசனுக்கு ஒரு பங்கு இருக்கு

இந்த வடிவம் கவிதையாங்கிற தயக்கம் இருந்ததனால என்னோட கனவுகள் + கற்பனைகள் = காகிதங்கள்ல 'வசன கவிதை'ன்னு போட்டிருப்பேன். வசன கவிதைன்னு ஒரு 'பார்ம்' உருவாகணும்னு நெனச்சுத்தான் அப்படிப்

போட்டிருந்தேன். கவிதைங்கிற வார்த்தையைப் பயன்படுத்தல. காமராசனும் அதுமாதிரி பண்ணியிருக்காரு 'வசன கவிதையும்—சில கவிதைகளும்'-னு போட்டிருப்பாரு அவரோட 'கறுப்பு மலர்கள்' தொகுப்புல பலபேரும் அந்தத் தொகுப்பைப் பார்த்து ஆச்சர்யப்பட்டாங்க. ஏன்னா அவர் எழுதியிருக்கக்கூடிய சப்ஜக்ட் மேட்டர்ஸ் பிராஸ்ட்யூட்டைப் பற்றி, நீதிமன்றங்களைப் பற்றி ('அவர்கள் நீதிமன்றங்களை விசாரிக்கிறார்கள்) கொடியைப் பற்றி, சேரியைப்பற்றின்னு —'தீம்' மாறுபட்டதா எடுத்துக்கிட்டாரு.

ஆக, புதுக்கவிதை இந்த மாதிரி வந்ததைப் பார்த்ததும் 'எழுத்து' குருப்புக்கு மருட்சிதான். நம்ம பாட்டுக்கு ஒரு சின்ன வட்டத்துல வச்சுக்கிட்டிருந்தோமே அது போச்சேங்கிறமாதிரி ''கர்ப்பக்கிருஹத்துல இருந்து பூஜை பண்ணிக்கிட்டிருந்தப்போ ஹரிஜனங்கள் வந்த மாதிரி இவங்க வந்துட்டாங்களே''ன்னு மருட்சிதான். 'தேர்ட் ஸ்டேஜ்'லதான் சோசலிஸ சக்திகள் புதுக்கவிதைகள் எழுத வந்துச்சு அந்த மாதிரி இளைஞர்கள்லாம் 'வானம்பாடி' இயக்கம் ஆரம்பிச்ச உடனே அதுல ஐக்கியமாயிடுறாங்க, அப்பத்தான் புதுக்கவிதை ஒரு சரியான நிலைக்கு வருகிறது தொடர்ந்து புத்தகங்கள் வெளிவருது. சமூக விமர்சனங்களும் வருது. என்னோட 'ஊசிகள்' அந்தத் தொடர்ச்சியை ஒட்டித்தான் வருது என்னோட நேரடியான போராட்ட அனுபவங்கள் தான் அதில் வெளிப்பட்டிருக்கு.

**''கனவுகள் + கற்பனைகள் = காகிதங்கள்'', 'தீம்' சொந்த அனுபவத்தில் இருந்து எடுத்துக்கிட்டீங்களா? இல்லை மரபை அடிப்பொட்டி எடுத்துக்கிட்டீங்களா?**

மரபுல எனக்கு அழுத்தமான நம்பிக்கை உண்டு. சங்கப் புலவர்களோட நவீன உத்திகளுக்கு முன்னாடி கூட நாம இன்னும் வரல. நல்ல புதுக்கவிதைகள்னு சொல்றதா இருந்தா சங்கக் கவிதைகளைச் சொல்லாம். சங்க இலக்கியத்துல நவீன உத்திகளைக் காணலாம். அப்படிப் பார்க்கிறபோது இப்போ இருக்க புதுக்கவிதைகள்ல பெரிசா சாதிச்சிட்டோம்னு ஒண்ணும் சொல்ல முடியாது. புதுக்கவிதை ரெண்டாவது கட்டத்துலதான் வந்திருக்கு இன்னும் ஒரு முழுமையான பரிமாணத்துக்கு வந்து சேரல. மேலை நாட்டு முயற்சிகளைப் பார்த்துச்சில கவிஞர்கள் எழுதுறாங்க 'மீட்சி' மாதிரி பத்திரிக்கைகள்ல அந்த மாதிரிக் கவிதைகள் வருது அது அரைவேக்காட்டுத் தனந்தான். அவுங்க நல்லாப் படிச்சவங்களா இருந்தாலுங்கூட புது வடிவத்தைத் தரல. ஒரு டி.எஸ்.—எலியட் மாதிரி சாதனை படைக்கக் கூடிய நீண்ட கவிதையைத் தரல, அந்தக் கட்டத்துல எனக்கு மரபுல ஒரு அழுத்தமான நம்பிக்கை இருந்ததனாலே பழைய அகப் பாடல்கள்ல இருக்கிற உத்திகளைக் கையாளணும்னு நெனச்சுக்கிட்டிருந்தேன். அப்பத்தான் காதல்ங்றது மட்டுமில்லாதபடி அதைக் கடந்து அதுல ஒரு அர்த்தம் கிடைக்கிற மாதிரி இருக்கணும்னு நெனைச்சேன். அதுனால வெறும் பெண்ணைப் பற்றிய வருணனை இல்லாம சொல்லணும்னு நெனைச்சேன். கனவுகள் + கற்பனைகள் = காகிதங்கள் திட்டம் போட்டு எழுதுனது நான். தனித்தனியா எந்தக் கவிதையும் ஒரு கதை மாதிரி இருக்கணும்னு நெனைச்சேன். தனியா எடுத்து வச்சுப் படிச்சாலும் அது ஒரு தனிக்கவிதை மாதிரி இருக்கும். தனியா ஒரு கவிதைய எடுத்து வச்சுப் பார்த்தாலும், ஒரு அர்த்தம் தரணும்; ஒருவிதமான உணர்ச்சி உண்டாக்கணும்; வாசகனைப் போய் நெருடணும்கிறது அதோட நோக்கம். என்னோட அனுபவத்தை எழுதுறதுனாலே வாசகனை முன்னாடி வச்சுக்கிட்டு எழுதல. அவுக என்ன எதிர்பார்ப்பாங்களன்னு நெனச்சுக்கிட்டு எழுதல இதுல நம்மோட 'ஃபீலிங்'கை சொல்லணும்னு நெனச்சேன். அதையும் மொத்தமான கதைமாதிரியான தொடர்ச்சி கிடைக்கணும்னு நெனச்சேன். இது ஒரு டெக்னிக் 'திருக்குறள்' மாதிரி அதையும் சரியாக் கையாண்டிருப்பேன் 'கதையல்ல ஆக்கிக் கொள்ளலாம்'னு சொல்லியிருப்பேன். வளவளன்னு போயிறக் கூடாது; சுருக்கமா இருக்கணும்; 'ட்ராமெட்டிக் பார்ம்' வேணும்; அப்படியெல்லாம் செஞ்சிருப்பேன். ''ஒரு தெய்வாம்சம் பொருந்திய பேரழகை அள்ளி அணைக்கும் ஆர்ம வெறியில் ஒரு ஆன்மா அலைகிறது'' ங்கிறதுமாதிரி பின்பக்கத்துல போட்டிருப்பேன். அதுல பரிபூரணத்துவம்கிற மாதிரி ஒன்று சொல்லியிருப்பேன், பெர்ஃபெக்ஷன்—கவிதையில பரிபூரணத்துவத்தை அடைவதற்கு ஒரு கவிஞனோ அல்லது ஒரு ஆன்மாவோ மேற்கொள்கிற முயற்சி மாதிரி. இதை 'எட்டர்னிட்டி'ன்னு சொல்லலாம் நிரந்தர உண்மைன்னு சொல்லலாம். இதநான் பெண்ணா உருவகப் படுத்தியிருக்கேன். ஏன்னா எல்லாமே பெண்ணாகத்தான் நாம பார்க்கிறோம். ஓடக்கூடிய நதியைக்கூட அப்படி ஒரு பெண்ணா உருவகப்படுத்திச் சொல்ற போதுதான் நேரே அப்பீல் ஆகும். அது மாதிரி பரிபூரணத்துவம்னு வரும்போது அதைப் பலபேர் புரிஞ்சிருப்பாங்களான்னு தெரியல. இப்ப சோசலிஸத்தையே வச்சுக்கங்களேன். சோசலிஸம்ங்கிற ஒரு பரிபூரண நிலையை அடையணும். (நான் எழுதுறப்போ ''சோவியத் யூனியன்ல சோசலிஸம் இருக்கு''. இப்ப மாற்றங்கள் வந்திருக்கு) அப்படிங்கிறத ஒரு சிம்பாலிக்கா வச்சுச் சொன்னேன். அந்த நோக்கத்துனாலதான் வெறும் பொண்ணுன்னு வருணிச்சுக்கிட்டுப் போகல. ரொம்ப எச்சரிக்கையோடதான் இதைப் பண்ணினேன். எங்கேயோ ஒரு பெண்ணோட சாயல் இருக்கிற மாதிரி ஒரு ஃபீலிங் படிக்கக் கூடியவங்களுக்கு இருக்கலாம். நான் ஒரு நிரந்தர உண்மையை வச்சு, ஒரு தத்துவத்தை மையப்படுத்தி எழுதணும்கிற மாதிரி நெனச்சேன். 'Truth is beauty; Beauty is truth'ன்னு கீட்ஸ் சொன்னான்ல. அழகுதான் உண்மை; உண்மைதான் அழகுங்கிற மாதிரி சொன்னான்ல அது மாதிரி நிரந்தரமான உண்மையைக் காதலிக்கிற மாதிரி, ஒரு தத்துவத்தைக் காதலிக்கிற மாதிரி, ஒரு தத்துவத்தை ஒரு பெண்ணுருவுல வச்சுப் பார்க்கிற மாதிரி எழுதுனேன். கலீல்கிப்ரான், தாகூரையெல்லாம்படிச்சதோட விளைவு இது. நான் மானுடக்காதல், தெய்வீகக்காதல் இரண்டையும் இணைக்கிற மாதிரி சொல்லியிருக்கேன். ஒரு தத்துவப் பின்னணியோட நாயக நாயகி பாவத்துல ஆழ்வார்கள்

மானுடக் காதலைத்தான் கொண்டு போனாங்க, கடவுளைக் காதலனா வச்சுக்கிட்டு, கடவுளை அடையற முயற்சியா.. ! கடவுளுக்குப் பதிலா நீங்க விரும்பக் கூடிய ஒரு ''பிளாசபி'' —அதை நெனைச்சுக்கிட்டுப் பார்க்கலாம் அப்படிங்கற நிலையில எழுதினேன். சுதந்திரத்தைத் தத்துவமா வச்சுக்கிட்டுக் கூடப் பார்க்கலாம். இது மாதிரி ஒரு தத்துவப் பின்னனியோட பார்க்கணும்னு தான், அதை நான் வச்சேன். ஆனா அவ்வளவுக்கு யாரும் அதைப் புரிஞ்சுக்கலே. அதை விமர்சனம்பண்ணினவங்க அப்படியெல்லாம் பண்ணல்லே. 'நா.வா.' தான் இந்தக்கவிதையைப் பற்றி நல்லாப் புரிஞ்சுக்கிட்டு எழுதினவர். மனித மதிப்புக்கு இடமில்லாத சமுதாயத்தில் காதல் தோல்விக்கு என்ன காரணம்ங்கிற மாதிரி ரொம்ப விரிவா ''அனலைஸ்'' பண்ணி, ''ஆராய்ச்சி'' போன்ற பத்திரிக்கைகள்ல கட்டுரைகள் எழுதினார். நிறைய வரவேற்பு இருந்திச்சு. ஏராளமான பெண்கள்லாம் விரும்பிச் சந்திக்கணும்னு சொல்லுவாங்க. பார்க்கறபோது இதெல்லாம் உங்க அனுபவமான்னு கேட்பாங்க!

நீங்க 'தீம்'னு சொன்னவுடனேதான் ஒரு விஷயம் ஞாபகத்துக்கு வருது. உங்களுடைய 'இமேஜ்' என்னவோ, ஒரு பெண்னுன்னு சொன்னீங்க. பெர்ஃபெக்ஷன் — பரிபூரணத்துவம் அல்லது விடுதலை — அதைவந்து ''ஒரு பெண்ணா உருவகிச்சீங்க இதையே தான் குணாவில கமலஹாசன் பண்ணியிருக்காப்ல

அப்படியா,

அழுக்கான சூழல்லே வளர்ந்து வர்றான் அவன். அவன் அம்மா ''ப்ராஸ்ட்யூட்'' அவள் 'ப்ராஸ்டியூஷன்' வச்சு நடத்திக்கிட்டிருக்கா, அவளை விட்டு ஓடிப்போன அப்பா, இப்படிப்பட்ட சூழல்ல அவன் வளர்றான், அந்த அழுக்குக்குள்ளே இருக்கறதனால அவன் பெர்ஃபெக்ஷனுக்கு ஆசைப்படறான் தூய்மையைத் தேடறான் அந்த பர்ஃபெக்ஷன் ''அபிராமி''ன்னு சொல்லி அவன் மனசுக்குள்ள பதிஞ்சுபோகுது. அப்போ, அபிராமியைத் தேட ஆரம்பிச்சுடறான். ''அபிராமி வருவான்னு'' சொல்ல ஆரம்பிச்சுடறான். இப்படி பெர்ஃபெக்ஷனைத் தேடறது கவிஞர்கள்கிட்ட நிறையவே இருக்கு அதுதான் அவங்க படைப்ப உன்னத மாக்குது. அவங்களை உயர்த்துது. அந்த வகையில தத்துவார்த்தப் பின்னனியோட நீங்கசொல்றீங்க.

நான் ரெண்டு வகையா அதை வெளிப்படுத்தி இருக்கேன். சில இடங்கள்லே உள்ளர்த்தமாகவும், சில இடங்கள்-லே வெளிப்படையாகவும் கோடி காட்டியிருப்பேன் — 'நான் ஏங்கெல்ஸின் மாணவன்'னு சொல்லியிருப்பேன். 'சோவியத்தின் கூட்டுப் பண்ணை'ன்னு சொல்லியிருப்பேன். இதிலே 'எய்ம்' என்னான்னா ஒரு பெண்ணைக்காட்டி அவமேல காதல்ங்கிற மாதிரி அப்படியே 'டீல்' பண்ணிட்டுப் போயிருப்பேன். அதைச் சரியா யாரும் இந்த மாதிரி விமர்சிக்கலே.

அந்தக்கவிதையிலே உங்க இலக்கு அதுதான். அதை ரொம்பப்பேரு புரிஞ்சுக்கலே இல்லியா?

ஆமா, அந்தக் கவிதையைப் பொருத்த வரைக்கும் வெறும் 'எமோஷனல்—அவுட்போகஸ்'னு சொல்லிட முடியாது. ஒரு அரசியல் நோக்கம் இருந்துச்சு. அதைக் கொண்டு வரணும்னு 'பர்பசாவே' பண்ணினேன். நிலமீட்சி இயக்கம் பற்றி எல்லாம் சொல்லியிருப்பேன். சமத்துவச் சமூக அமைப்பு அப்படிங்கறதை அர்த்தப்படுத்திப் பார்த் தாங்கன்னா இந்தக் கவிதைக்கு இன்னும் பெரிய வெற்றி கிடைச்சிருக்கும். அதை விட்டுட்டு வெறும் காதல்ங்-கிறதை மட்டுமே பார்க்கிறாங்க. காதல்ங்கிறது இருக்கு இல்லேன்னு சொல்லலே. முதல்ல படிக்கறவங்களுக்குக் காதல்ங்கிற அர்த்தந்தான் கிடைக்கும். ஆனா அதுக்கு அடுத்த கட்டத்துக்குப் போகணும் 'பொயட்ரி' படிக்-கறதுக்கும் 'ப்ரோஸ்' படிக்கறதுக்கும் பெரிய வித்தியாசம் இருக்கு. ஒரு நாவலை ஒரு தடவை ரெண்டு தடவை படிச்சுட்டா அதில உள்ள சில இடங்கள், உத்தி இதுகள்லாம் மனசுல இருக்கும், ஆனா 'பொயட்ரி' யை ரெண்டாந் தடவை படிக்கும்போது, ஒரு புது விதமா அர்த்தங் கிடைக்கும். மூணாவது தடவை படிச்சா இன்னொரு புது அர்த்தங்கிடைக்கும். விதவிதமான அர்த்தங்களைக் கொடுக்கும் வகையில கவிதையோட அமைப்பு இருக்கும்.

''அறிதோறும் அறியாமை''—அப்படிங்கறது கவிதைக்கும் பொருந்தும் அல்லவா?

ஆமா! தோண்டித்தோண்டிப் பார்க்கணும். அப்போ பரிமேலழகர் உரை சொன்னார் அதுக்குப் பின்னால வந்த-வர்கள் அவர் சொன்ன உரையே போதும்னு நெனைக்கலே. மேல போறதைப் பார்க்கிறோம். இன்னைக்குத் தண்டபாணி தேசிகர் வரைக்கும்உரை சொல்லிக்கிட்டே இருக்காங்க, புதிய அர்த்தம் பார்த்துக்கிட்டே இருக்காங்க! அப்படிப்பார்க்கற மாதிரி என்தொகுப்பை யாரும் பார்க்கலே!

இவ்வளவு நல்ல கவிதைகள் தந்த நீங்க 'ஊசிகளு'க்குப் பிறகு ஏன் தரவில்லை?

இப்போ, 'குக்கூ'ன்னு தயார்பண்றேன். எல்லோரும் 'ஹைகூ'ன்னு பண்ணிக்கிட்டிருந்தாங்கள்ல. நானும் கொஞ்சம் எழுதினேன். நான் எப்பவுமே வித்தியாசமா எழுதணும்னு நெனைப்பேன். ஒரே மாதிரி எழுதக் கூடாதுன்னு விரும்புவேன். என்னுடைய 'கனவுகள் + கற்பனைகள் = காகிதங்கள்'ல ஒரு கற்பனை, ஒருவித

உணர்ச்சி, 'எமோஷனல்', ரொமான்டிக் இதெல்லாம் இருந்திச்சு. 'ஊசிகள்' ரொம்ப ரியலிஸ்டிக்கா ப்ளெய்ன் க்ரிட்டிசிசமாகவும் இருந்திச்சு. அவரா இதெல்லாம் எழுதினாருன்னு பலபேருக்குத் தோணிச்சு இன்றையச் சமூகத்தை விமர்சனம் பண்ற மாதிரி எழுதணும்னு பிளான்பண்ணிக்கிட்டு எழுதினது அது. அதுமாதிரி இந்த 'ஹைகூ' எல்லாம் எழுதிக்கிட்டிருந்தபோது, இந்த 'குக்கூ' கவிதையை எழுதியிருக்கேன். சீக்கிரமா புத்தகம் வெளியிடணும். அதுலவந்து கவிதையில பின்னால ஒரு 'ரைம்' வரும் அதனால மத்த 'ஹைகூ' கவிதைகளுக்கும், இதுக்கும் ரொம்ப வித்தியாசம் இருக்கும். ஹைகூன்னா என்னன்னு கேட்டா நம்ம குறள் மாதிரி அது. சின்னக் கவிதைகள். அதை விரிச்சுப் பார்த்தா—தாமரைப்பூவு விரிச்சா அது உள்ளே இதழ்கள் விரியற மாதிரி அர்த்தங்-கிடைக்கணும்னு ஜப்பான்ல பண்ணினாங்க. நாம சோதனை முயற்சியா ஏதாவது செய்யணும். அப்பதான் அதைப் புத்தகமாக் கொண்டுட்டு வரணும்னு நெனைச்சேன்.

பாரதிதான் ஹைகூவை அறிமுகம் பண்ணிவச்சார். ஆனா பாரதி ஹைகூவில பரிசோதனை பண்ணிப் பார்க்கலே. இவ்வளவு ஆண்டு காலம்கழிச்சு —70 ஆண்டு காலம் கழிச்சு - இந்த 'ஹைகூ' முயற்சி வருவதற்கான சமூகச்சூழல் எதுன்னு நெனைக்கிறீங்க?

ஒரு புதிய சோதனை முயற்சி இருக்கணும்ங்கிறது எல்லாத்திலேயும் ஏற்பட்டிருக்கு டி.வியில நாடகங்கள்லாம் புதுமாதிரியாப் போடறாங்க. நிஜநாடகம் வந்திருக்கு. அதனால இப்ப இலக்கியச் சோதனைகளுக்குரிய கால கட்டம்னு நினைக்கிறேன். அப்போ, 'நடை' பத்திரிகையிலதான் இந்த மாதிரி கவிதைகளை 'ட்ரான்சிலேஷன்' பண்ணிப் போட்டிருந்தாங்க. ரகுமான் சில ஹைகூ கவிதைகள் எழுதி, 'பால்வீதி' —தொகுப்பில வெளிவந்திருக்கு. ஜூனியர் விகடன் கட்டுரையில கூட அவர் ஹைகூவைப் பற்றி எழுதியிருக்கார் ஜப்பான் கவிதைகளை ட்ரான்ஸ்லேட் பண்ணி லீலாவதி போட்டிருக்காங்க அறிவுமதி அதுமாதிரி செய்ய ஆரம்பிச்சாரு. அவரைப் பார்த்துட்டு அமுதபாரதி இப்போ இளைஞர்கள்கிட்ட புதுமையாச் செய்யணும்ங்கிற நாட்டம் வந்திருக்கு. புதுக்கவிதையி-லேயும் திரும்பத் திரும்ப சில விஷயங்களே பேசப்பட்டன. வேலை இல்லாத் திண்டாட்டத்தைப்பற்றி ஒரு கவிதை இருக்கும். வரதட்சினைக் கொடுமைபற்றி ஒரு கவிதை இருக்கும். கல்யாணமாகாத பெண்களைப் பற்றி ஒரு கவிதை இருக்கும். எல்லோரும் இது மாதிரியா பாட ஆரம்பிச்சுட்டாங்க. அப்புறம் அதுல ஒரு வெறுப்பு ஏற்பட்டிருச்சு. அப்போ புதுசா ஏதாவது செய்யணும்ங்கிற போது இந்த மாதிரி சோதனை முயற்சிகள் வருகின்றன.

நீங்க ஒரு கவிஞரா மட்டுமில்லாம, ஒரு பதிப்பாளராகவும் இருக்கீங்க என்ன நோக்கத்துக்காக நீங்க பதிப்புத்துறையில ஈடுபட்டீங்க?

நல்ல புத்தகங்களே வெளிவரல்லே அப்படீங்கற குறை எனக்கிருந்துச்சு. குறிப்பா, கவிதை புத்தகங்கள். நல்ல கவிஞர்களோட புத்தகங்கள் வெளி வரணும்ங்கிறதிலே நாட்டம் உண்டு. என்னுடையதுன்னு மட்டும் பெரிசாப் பாக்கறது கிடையாது. நம்ம சமகாலத்து நல்ல படைப்பாளிகள்—இளைஞர்கள் இவங்களையெல்லாம் மேலே கொண்டுட்டு வரணும்னு நெனைக்கறதுண்டு காரணம் என்னன்னா 'கார்க்கி'யைப் படிக்கிறோம் 'கார்க்கி' எப்படில்லாம் என்னல்லாம் பண்ணியிருக்காரு? புதிய இளைஞர்களை எல்லாம் ஊக்கப்படுத்தியிருக்காருன்னு நம்ம மனசில பதியுதுல்ல. அவரளவுக்குச் செய்ய முடியாட்டிக்கூட சமூகக் கடமைன்னு ஒண்ணு இருக்குல்ல! நம்ம என்ன ஃபீல்டுல இருக்கோமோ அந்த ஃபீல்டுல சமூகத்துக்குப் பங்களிப்புச் செய்யணும் நாம ஒருத்தரை அறிமுகப்படுத்தறபோது நம்மளை இவர் தாங்க அறிமுகப்படுத்தினார்னு சொன்னா நமக்கு அதுவும் ஒரு பெருமை. பாரதி நமக்கு முன்னால இருக்கறவங்களை எல்லாம் இவர்தான் வள்ளுவர், இவர்தான் இளங்கோ இவர்தான் கம்பர்னு அடையாளம் காட்டினார். தன்னுடைய சமகாலத்திலேயும், 'எழுக கவிஞன்' னு பாரதிதாசனையும் அடையாளங்காட்டிப் போறார். அப்படித்தான் செய்யணும் அதுதான் நல்லது. நல்ல கவிஞரா இருக்கக் கூடியவர், நல்ல படைப்பாளியா இருக்கக்கூடியவர், பிற்காலத்தில தனக்குப் பின்னால இவர்கள் கவனிக்கப்பட வேண்டிய வர்கள்னு சுட்டிக் காட்டினா இதுவரைக்கும் கவனிக்காம இருந்தவங்களும் கவனிப்பாங்க பாரதிதாசன்கிட்டே போய் முன்னுரை கேட்டா எல்லாருக்கும் கொடுத்திருக்கார். ஒரு பக்கம் நல்லா எழுதறவங்களுக்கும் கொடுத்-திருக்கார். தொந்தரவுக்காகவும் கொடுக்க வேண்டியிருந்திருக்கும். அதுமாதிரி சுட்டிக்காட்டணும்.

எனக்கு 'அபி' கவிதைகளைப் போடணும்னு தோணிச்சு 'அவரு உங்களுக்குத் தெரிஞ்ச பதிப்பகத்தில கொடுத்துப் போடச் சொல்லுங்கன்'னு தன் கவிதைகளைக் கொடுத்திருந்தார். நானும், மதுரை, சென்னையிலே சில பதிப்பகங்கள்லே கொடுத்துப் போடச் சொன்னேன். அதை யாருமே போடறதுக்கு முன் வரல்லே எல்லாருமே படிச்சுப் பார்த்துட்டு 'ஒண்ணுமே புரியல்லே இது என்ன'ன்னு கேக்கற மாதிரி ஆயிருச்சு. ''இது கவிதைங்க''ன்னு சொன்னா ''கவிதையா? கவிதைன்னா எதுகை மோனை எல்லாம் இருக்கணுமே. இதுல அப்படி இல்லையே''ன்னு கேட்டாங்க! இவ்வளவுக்கும் அபிக்கு மரபுல நல்ல தேர்ச்சி உண்டு. அப்படிப்பட்டவரு புதிய முயற்சியாச் செஞ்சிருந்ததை நான் அப்துல்ரகுமான் எல்லாரும் சேர்ந்து எப்படியாவது கொண்டு வரணும்னு நெனைச்சோம். என்ன இன்னொருத்தர்கிட்டேப் போய்க் கேட்கிறது? நம்மலே போட்டா என்ன? அப்படினுட்டு ஆளுக்கு 100, 200ன்னு போட்டு—நான், அப்துல், அபியுங் கூடக் கொடுத்தாரு. ஒரு அஞ்சுபேரு —கொண்டு வந்தோம்.

அப்படிக் கொண்டு வர்றப்போ எனக்கொரு ஐடியா வந்திச்சு. நாங்க கன்னியாகுமரி போயிருந்தபோது கன்னியா குமரிக் கடற்கரையிலதான் அன்னத்தைப் பற்றி யோசித்தோம். வருஷத்துக்கு மூணு புத்தகம் போட்டா என்ன? அப்படின்னு யோசிச்சோம். 'வாசகர் வட்டத்'துல முன்வெளியீட்டுத் திட்டம்னு செஞ்சிக்கிட்டிருந்தாங்க. 74ல்ல கல்லூரியிலே போராட்டம் வெடிச்ச நேரம். போராட்டம் முடிஞ்சு அமைதியா இலக்கியத்துல ஈடுபடுவோம்னு நெனைச்சு அபியோட புத்தகத்தை 'ஊர்வசி' அச்சகத்துல அ்டிச்சு வெளியிட்டோம். அதுக்கப்புறம் மூணு புத்தகம் கொண்டு வருவோம்னு பிளான் பண்ணி ரெண்டாவதா 'பால்வீதி' மூணாவதா 'மரக்குதிரை'ன்னு மலையாளச் சிறுகதைத் தொகுப்புக் கொண்டாந்தோம். நாலாவது 'வேட்டி'ன்னு 'கி.ரா' வோட புத்தகம் கொண்டாந்தோம். ஆனால் குறிப்பிட்ட நேரத்துல கொண்டு வர முடியலே. 'பால்வீதி' சேலத்துல ஒரு பிரஸ்ல போட்டோம். அடிக்கடி போய்ட்டு வர்றது — அது இன்னும் சிரமமா இருந்தது. பேசாம நாமளே ஒரு அச்சகம் வச்சா என்னன்னு நெனைச்சோம். 75ல் என்னைக் காலேஜ்ல வேலையை விட்டு நீக்கியிருந்தாங்க. அப்போது மூணு நாலு பேரைக் கூட்டுப் பங்குதாரராச் சேர்த்துக்கிட்டு காலேஜ் போராட்டத்துல ஈடுபட்டிருந்த நண்பர்களோட உதவியோட நவம்பர் 14-ஆம் தேதி அச்சகத்தை ஆரம்பிச்சோம். 'வேட்டி', 'மரக்குதிரை' புவியரசோட 'இதுதான்' புத்தக மெல்லாம் வெளியே வேற அச்சகங்கள்ல போட்டோம். 75க்குப் பிறகுதான் சொந்த அச்சகத்துல இருந்து புத்தகங்கள் போட ஆரம்பிச்சோம். 'ஜெயகாந்தன் ஒரு விமர்சனம்'னு ஒரு புத்தகம் போட்டோம். அப்புறம் போகப்போக வருஷத்துக்கு மூணு புத்தகம்ங்கிறது சரியா வராதுன்னு சொல்லிட்டு ரெகுலர் கம்பெனி மாதிரி செய்வோம்னு நெனைச்சு வருஷத்துக்கு 7, 8 புத்தகம்னு கொண்டு வந்தோம். அப்புறம் அன்னத்தை பிரைவேட் லிமிடெட்னு மாத்தினோம். அதுல ரைட்டர்ஸ் எல்லாம் பங்குதாரராச் சேர்ந்துக்கிட்டாங்க. இப்படித்தான் பதிப்புத் துறைக்கு வந்தேன். இது ஒரு ஆக்ஸிடென்ட்தான். அபியோட புத்தகத்தைப் பதிப்பகத்துல போட்டிருந்தாங்-கன்னா பதிப்புத் துறைக்கு வந்திருக்கமாட்டேன். ஒரு 'சேலஞ்ச் மைன்ட்' இருந்ததனாலே நாமளே போட்டா என்னன்னு வந்ததுதான்.

பதிப்புத் துறையில் ஈடுபட்டது உங்களது படைப்பாக்க முயற்சிகளுக்குத் தடைதானே?

'ஒரு கவிஞரை சாகடிச்சு வருது அன்னம்'னு பலபேர் சொல்வாங்க. எனக்கு அதுல கொஞ்சம் வருத்தம்தான். அது எனக்கு உள்ளுக்குள்ளே இருக்கக் கூடிய சோகம். ஆனா சில நல்ல ஆக்கங்கள் எல்லாம் செய்யணும்னு சொல்லிப் பல திட்டங்களை மனசுக்குள்ளே வச்சுக்கிட்டு இருக்கேன். அதெல்லாம் செய்ய முடியாமப் போச்சு. இனிமே எங்கே செய்யப் போறோம்னு ஒரு பயமும் —அநேகமா, அதிகம்னே சொல்லலாம்— வந்திருச்சு. இந்த வருஷத்துல இருந்து எழுதணும்னு சொல்லிக்கிட்டிருக்கேன். என் பையன் வந்து இதுல பொறுப்பு எடுத்துக் அதனால இனிமேல் எழுதுவேன்.

பொதுவா கவிஞர்கள் கணக்கு வழக்கில் 'வீக்'கா இருப்பாங்களே? நீங்க எப்படி?

(சிரிப்பு) பொதுவா எனக்கு இதுல உள்ள கணக்கு வழக்கு அதிகம் தெரியாது. பணத்தை எடுத்துக்கிட்டுப் போய் பொருளை வாங்குவேன். 'பில்'லைக் கொடுத்திடுவேன். ஆனால் எந்தப் பேப்பர் நல்லது, எப்படிப் போகுறதுங்-கிறதில ஒரு நல்ல பழக்கம் வந்திருச்சு. மற்றபடி அன்றாட வரவு செலவு இதெல்லாம் எனக்குத் தெரியாது. ஆனா அச்சகம் சம்பந்தமா மத்தவங்களைக் காட்டிலும் எனக்குக் கொஞ்சம் அறிவு உண்டு. புத்தகத்துக்கெல்லாம் 'லே அவுட்' நான் செய்வேன். பதிப்பு சம்பந்தமா எதாவது படிச்சிருக்கேன்னா? இல்லை! ஆர்வம் காரணமாத் தெரிஞ்சுக்கிட்டேன். 'கம்போஸிங்' கூடத் தெரியாது. ஆனால் குற்றம் மட்டும் தெரியும். நமக்கு வந்துக்கிட்டிருக்க பெருமை எல்லாம் தொழிலாளிங்ககிட்ட உள்ள திறமைனாலேதானே ஒழிய நமக்கிட்டே ஒண்ணும் இல்லை.

புத்தகம் தயாரிப்புல 'நவீன பாணி' எல்லாம் கையாளுறீங்க இதுக்கு இன்ஸ்பிரேஷன் எதாவது உண்டா?

வெளிநாட்டுப் புத்தகங்கள் ஆங்கிலப் புத்தகங்கள்லாம் பார்க்கிறேன். உதாரணத்துக்கு சோவியத்துல இருந்து வந்த 'ஈஸ்தெட்டிக்ஸ்' புத்தகத்தோட லே அவுட்டைப் பின்பற்றித்தான் 'வீடு'ங்கிற 'பால்ராஜ் கென்னடி'யோட புத்தகத்தைத் தயாரிச்சோம். கிட்டத்தட்ட முன்னூறு புத்தகங்களாவது இதுவரைக்கும் வெளியிட்டிருப்போம். 'அன்னம் அகரம்' ஆரம்பிச்சதே 'பென்குவின் — பெலிகன்' மாதிரி செய்யணும்னுதான். பெலிகன்ல கிளாஸிக்ஸ்தான் போடுவாங்க. இது மாதிரி அகரத்துல பழைய இலக்கியங்கள் எல்லாம் போடணும்னு நெனைச் சோம். முடியல, அன்னத்தை வச்சு 'மாடர்ன்' லிட்ரேச்சர்தான் போட்டுக்கிட்டு இருக்கோம். ஆனா சங்க இலக்கியங்கள்ல இருந்து 'சிலப்பதிகாரம்' முதலிய பழைய இலக்கியங்களை அச்சுல கொண்டு வரணும்னு ஆசை இருக்கு சந்தர்ப்பம் கிடைக்கும்போது செய்யணும்.

இவ்வளவு திட்டமிட்டு செலவழிச்சு ஒரு புத்தகத்தை வெளியிடுறப்போ லாபமில்லாட்டியும் பரவாயில்லை, கையைப் பிடிக்காம இருக்கா?

இப்ப நட்டமில்லே அப்பிடி லாபமில்லாட்டா எப்படித் தொடர்ந்து செய்ய முடியும்? பதிப்புத் துறையில நமக்கு முன்னாடி இருந்தவங்களோட அனுபவங்கள்லாம் நமக்கு உதவிச்சு. சக்தி.வை. கோவிந்தனோட சக்தி காரியாலயம்

நவயுகப்பிரசுராலயம் இதெல்லாம். பதிப்புத் துறைங்கிறத தமிழ்நாட்டுல காப்பாத்திக்கிட்டு வர்றதே செட்டி நாட்டுப் பகுதிதான். தேவகோட்டைப் பக்கத்துல இருந்து போனவங்க, காரைக்குடியிலிருந்து போனவங்கதான், பதிப்புத் துறையில இருக்காங்க. நம்ம தலை முறையில 'வாசகர் வட்டம்', இவங்க எல்லாருக்கும் பொருள் இழப்புத் தான்ங்கிறதை ஒத்துக்கணும். அதை அவங்க லட்சியமா நினைச்சு, அந்த நேரத்தில் வியாபார ரீதியாக் கொண்டு வரணும்னு நெனைச்சுத் தோல்வி அடைஞ்சாங்க. ஒரு கட்டத்துக்குப் பிறகு அவங்களால கொண்டு வரமுடியாம, கம்பெனியையே மூடறமாதிரி ஆகிருச்சு. வாசகர் வட்டமும் அப்படி ஆகிருச்சு. பிறகு 'கிரியா' வருது. கிரியா வரக்கூடிய சூழல்லே இலக்கியவுலகிலே ஒரு புதிய அலை அடிக்குது. சினிமாவிலேயும் அப்படி ஒரு மாறுதல் நாடகத்துறையிலேயும் ஒரு மாறுதல். பதிப்புத் துறையிலேயும் ஒரு மாறுதல் வருது 'வாசகர் வட்டம்' வரைக்கும் இல்லாத புது வாசகர் கூட்டம், 'கிரியா' 'அன்னம்' இதுமாதிரி பதிப்பகங்களுக்கு வர்றாங்க. அவங்கதான் இது மாதிரியான பதிப்பகங்களைக் காப்பாத்திக்கிட்டு வர்றாங்க. மாணவர்களிடம் வாங்கும் ஆர்வம் குறைவா இருந்தாலும் வியாபாரிகள், பாங்க் எம்ப்ளாய்ஸ், L.I.C. ஊழியர்கள் உழைக்கக்கூடியவங்க இவங்க எல்லாம் மாதத்துக்கு இவ்வளவுன்னு செலவழிச்சுப் புத்தகம் வாங்கறாங்க. நல்ல இலக்கியம்னு அறிமுகப்படுத்தினா வாங்கிப் படிக்கிறாங்க. அதனால நஷ்டத்துக்கு வாய்ப்பில்லே இன்னும் துணிச்சலா. எழுத்தாளனுக்கு மிகப் பெரிய சன்மானம் கொடுக்கிற அளவுக்குப் பதிப்பகத்துறை வளரல்லே. உதாரணமா அன்னம் பிரைவேட் லிமிடெட் ஆரம்பிச்சு கோ. கேசவனோட பள்ளு இலக்கியம்ங்கிற புத்தகத்தை 1200 காப்பிகள் போட்டோம். —'அது 89'ல இப்ப 10 வருஷம் ஆச்சு. இப்போ எங்களோட 150 வது புத்தகமா இப்ப மறுபதிப்புப்போடறோம். ஏன் இந்த 10வருஷ இடைவெளி? தமிழ்நாட்டிலே இன்னும் 1,500 பிரதிகளுக்குமேல போடமுடியாத சூழல் இருக்கு. ஆனா அதே நேரத்திலே விற்காம பழைய புத்தகக் கடையிலே தூக்கிப் போடற கேவல நிலையும் இல்லே முன்னேற்றம் இருக்கு.

நூலகத்திலே வாங்கிக்கிறதிலே சீரான முறை இல்லே. நல்ல புத்தகங்களை நூலகத்திலே வாங்கி வைக்கணும். அதுக்குன்னு ஒரு நல்ல சரியான குழுவை நியமிக்கணும். கதை, கவிதை, நாடகம்ங்கிற மாதிரி ஒவ்வொரு துறையிலேயும் உள்ள 'எக்ஸ்பர்ட்ஸ்' அந்தக் கமிட்டியில இருக்கணும். அவங்களுக்கு விரிந்த மனசும் இருக்கணும். அப்படிப்பட்ட ஆளுங்க இருக்காங்க. உதாரணத்துக்கு வல்லிக்கண்ணனைச் சொல்லலாம். லைப்ரரி ஆர்டர் வர்றதுக்குக் காலதாமதம் ஏற்பட்டு 2 வருஷம் கூட ஆகிறது. பணம் வந்து சேர்றதுக்குள்ளே 2 வது வருஷம் முடிஞ்சு போகுது. தமிழ்நாட்டிலே எழுத்தாளன் 'நான் எழுதிச்சம்பாதிச்சே வாழ்ந்திடுவேன்' அப்படிங்கற தன்னம்பிக்கையோட வாழ்வதற்கான சூழ்நிலை ஏற்படணும். முழுநேர எழுத்தாளர்கள் இருப்பது சமூகத்துக்கு நல்லது. அப்பத்தான் அவங்க யாரைப்பத்தியும் கவலைப்படாம நினைச்சதைச் சொல்ல முடியும். அவனே ஒரு பெரிய ஃபோர்ஸ்' அப்படிங்கிற அளவுக்கு இருக்கணும். எந்தக்கட்சியும் சாராமலேயே இருக்கலாம் — தாகூர் மாதிரி. ஆனா முன்னோக்கித் தன்னோட சமூகத்தைக் கொண்டுட்டுப் போற பொறுப்புத் தனக்கு இருக்குன்னு நெனைச்சு எழுதறவனா இருக்கணும். தமிழ்நாட்டுல எழுத்தாளனுக்குப் புத்தகம் மூலமா கெடைக்கிற ராயல்டியை நம்பி வாழுறமாதிரி சூழல் ஏற்படணும் கேரளாவில அப்படிக் கிடைக்குது. இப்ப 25% வரை குடுக்கறாங்க. நம்ம அப்படி இல்லே 10%லயிருந்து 15% வரைதான் குடுக்கமுடியுது. இது குறைவானதுதான் ஒரு புத்தகம் 2,000, 3,000 பிரதி போட்டு, ஒரு வருஷம் ஒன்னரை வருஷத்துல வித்திருச்சுன்னா 20%ல இருந்து 25% வரை ராயல்டி குடுக்கலாம். கேரளாவில ஒரு புத்தகம் வரப்போகுதுன்னு விளம்பரம் வந்தாலே 2,000 காப்பிக்கு ஆர்டர் வந்திடுது. இங்கேயும் முன்வெளியீட்டுத் திட்டமெல்லாம் பண்ணிப் பார்க்கறாங்க. அவ்வளவுக்கு ஆதரவு இல்லே. கேரளாவில 3000, 4000 காப்பிகள் கூட போடறாங்க ..

புத்தகம் வெளியீட்டுக்கென்று ஏதேனும் கொள்கை வைத்திருக்கிறீர்களா?

இலக்கியத்தரம் வாய்ந்த புத்தகங்களை வெளியிடறோம். இடதுசாரி இலக்கியப்புத்தகங்கள் வெளியிடறோம். அவங்களுக்கு இடையே பல்வேறு முரண்பாடுகள இருந்தாலும், இலக்கியத் தரமுடைய படைப்புகளை வெளியிட்டு வர்றோம். அதுபோல வெங்கட்சாமிநாதன் எழுதற புத்தகங்களையும் வெளியிட்டு வர்றோம். வெங்கட்சாமிநாதன் ஒரு ஆண்ட்டி கம்யூனிஸ்ட்தான். நான் என்ன பாக்கறேன்னா டெல்லியில இருந்துக்கிட்டு, பழைய தமிழ் இலக்கியம், வையாபுரிப்பிள்ளை, தெருக்கூத்து இதெல்லாம் பற்றி அவர் எழுதறாரே அதெல்லாம் நம்ம வெளியிடணும் அப்படிங்கறதுதான் அதுல அப்பப்ப நெருடல் உண்டு. அப்பப்ப கம்யூனிஸ்ட் அட்டாக் எல்லாம் பண்றாரு அகாடமிஷியன்ஸ் செய்யாத காரியங்கள்லாம் அவர் செய்யறாரே அப்படின்னு அவருக்கு மேடை போட்டுக் குடுப்போம்னு அவருப் புத்தகங்களை போடறோம். அதுக்கு விமர்சனங்கள் வந்தால் அதையும் வெளியிடலாம். விமர்சனம் வளர வேண்டிய கலை'

உதாரணத்துக்கு கோ. கேசவன் எழுதின மார்க்சிய இலக்கியப் பார்வைங்கிற புத்தகத்தைப் போட்டோம். அதுல அந்தப் புத்தகத்தில உள்ள பார்வையில உள்ள குறைபாடைப்பத்தி நுஃமான் எழுதின புத்தகத்தை வெளியிட்டோம். நுஃமான், கேசவன் ரெண்டு பேரோட பார்வையிலேயும் உள்ள குறைபாட்டைப் பற்றி வந்த விமர்சனத்தையும் போட்டிருக்கிறோம். புத்தகமாப் போடல்லே. 'அருணன் கட்டுரைகள்'னு போட்ட புத்தகத்திலே ஒரு கட்டுரையா வந்திருக்கு. தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்கத்துல செயலாளரா இருக்காரே அவரு எழுதினதுதான் அது! விமர்சனம் மேற்கொண்டு வந்து சர்ச்சைகள் வரட்டும்னுதான் நான் ஆசைப்படறேன். நம்ம கருத்தைத் திணிக்கணும்கிறது இல்லே...!

**பதிப்பகத் துறையில ஈடுபட்ட நீங்க ஒரு பத்திரிகையையும் நடத்தினீங்க. முதல்ல ஒரு சின்ன சைஸில நடத்திக்கிட்டிருந்தீங்க. பிறகு என்ன தைரியத்தில நீங்க ஒரு பாப்புலர்மேகசின் நடத்தற முயற்சியில ஈடுபட்டீங்க?**

அதைவந்து 'பாப்புலர் மேகசின்'னு நான் நெனைக்கலே. அதே நேரத்திலே சிறுபத்திரிக்கையா நடத்தணும்னு நெனைக்கலே. ரெண்டுக்கும் நடுவிலே ஒரு 5,000 காப்பிஸ்போடலாம்ங்கிற எண்ணம் இருந்துச்சு. கணையாழி கூட இதுமாதிரித்தான் பண்ணிக்கிட்டிருந்துச்சு. அதனால ஒரு 5,000 காப்பிஸ் போடலாம்ங்கிற தன்னம்பிக்கை இருந்திச்சு. முதல் 2 இஷ்யூ 3000 காப்பிஸ் போட்டோம். நல்லாப் போச்சு. ரீடர்னா ஒரு ஐம்பது, நூறு வரும். அவ்வளவு தான். ஏஜண்டுகள் கூட நிறைய அனுப்பச் சொல்லி எழுதினாங்க. அப்பறம் 3வது இஷ்யூவில 5000 போட்டோம். ஆனா எதிர்பார்த்த அளவுக்குப் போகலே செலவு வேற அதிகமாயிருச்சு. 3000 காப்பிஸ்தான் போகும்போல! பணமும் வரல்லே. அனுப்புற திலேயும் சிக்கல்கள் ஏற்பட்டுப் போச்சு. இப்படியே பத்து இஷ்யூஸ் வரை கொண்டு வந்தோம். சந்தாவை மட்டுமே நம்பி அதை நடத்தியிருந்திருக்கலாம். நிச்சயம் 3000 காப்பிஸ் போயிருந்திருக்கும். சிறு பத்திரிக்கையில இருந்து ஒரு பெரிய பத்திரிகை மாதிரியான முயற்சியை மேற்கொண்ட போது அதிகமான சந்தா அன்னத்துக்குத்தான் கெடைச்சுச்சு. பதிப்பகம் வேற எடைஞ்சலா இருந்ததா? அந்தக் காலகட்டத்துல வேற புத்தகங்கள் வெளியிடவே முடியலே. இதுவும் கெட்டு, அதுவுங்கெட்டுப் போன சூழ்நிலை பதிப்பகத்தோட பேர் மங்கிப்போயிருமோன்னு தோணிச்சு. அதனால பத்திரிக்கையைத் தொடர்ந்து நடத்தறதுக்கு வாய்ப்பு இல்லேன்னு நெனைச்சோம். போஸ்டல் கன்ஸஷன் ரேட்டும் கூடிப்போச்சு சரியாகவும் சந்தாதாரர்களுக்குப் போய்ச் சேரலை. அவங்களும் 'என்னங்க பணத்தை வாங்கிக்கிட்டுப் புத்தகம் அனுப்பாமலே விட்டுட்டீங்க'ன்னு கேக்க ஆரம்பிச்சுட்டாங்க. அதனால திரும்பத் திரும்ப அனுப்ப வேண்டியதாப் போச்சு. நிர்வாகச் சிரமம், விற்பனையான பணம் வராமல் போனது, பதிப்பகத்தையும் பத்திரிகையையும் சேர்த்துக் கவனிக்க நேரமில்லாமல் போனது—இந்தக் காரணங்களாலதான் பத்திரிகையை நிறுத்த வேண்டி கட்டாயம் உண்டாச்சு. மத்தபடி அந்தப் பத்திரிகைக்கு நல்ல வரவேற்பு இருந்துச்சு. ஜெயகாந்தன் கூடப் பாராட்டியிருக்காரு. நிப்பாட்டின பிறகு, ஏன் நிப்பாட்டினீங்கன்னு கேட்டாரு. நிப்பாட்டியிருக்க வேண்டியதில்லையேன்னு கூடச் சொன்னாரு. சுந்தர ராமசாமியும் நல்லா வந்ததுன்னாரு. கோமல் சுவாமிநாதனும் சிறுபத்திரிக்கைக்கும், பெரிய பத்திரிக்கைக்கும் இடையில ஒரு இடம் இருக்குது. அதிலே நீங்கதான் சரியாச் செஞ்சிருக்கீங்கன்னாரு.

**தொடர்ந்து பத்திரிகை நடத்தலாம்ங்கிற எண்ணம் உண்டா?**

என்னோட ஆசையே அதுதான். ஒரு நல்ல பத்திரிகையைக் கொண்டாறணும்கிற ஆசையிலதான் 'கவி'யைக் கொண்டுவந்தேன். ஒரு தேவை இருக்கு இப்ப கவிதையில ஒரு தேக்கம் வந்திருக்கு கவிதைக்கினு ஒரு பத்திரிகை சுரதாகூட நடத்தியிருக்காரு. பாரதிதாசன் கூட நடத்தியிருக்காரு. ஆசை இருக்கும். லட்சியம் இருக்கும். ஆனா நெருக்கடி வந்துரும். நான் என்ன நெனைக்கிறேன்னா தமிழ்க் கவிதையில ஒரு தேக்கம் வந்துருக்கு. தேக்கம்னா 70 ல தொடங்கி 80 வரைக்கும் ஒரு பத்து வருஷம் புதுக்கவிதையில அடிச்ச அலை இப்போ இல்லை. இப்ப பெரிய கவிஞர்கள்லாம் பார்த்தீங்கனா அவங்களோட முதல் தொகுப்பு மாதிரி, அடுத்து வந்ததெல்லாம் அவுங்க பேர் சொல்லறது மாதிரி அமையல.

**கவிஞர், பதிப்பாசிரியர், பத்திரிக்கையாசிரியர், இவை எல்லாவற்றுக்கும் மேலாக நீங்கள் ஒரு தனி நபர். அந்த முறையில் தாங்கள் வாழ்கிற வாழ்க்கை தங்களுக்கு மன நிறைவைத் தந்திருக்கிறதா?**

கல்லூரிப் பணிகளில் மிகுந்த ஈடுபாடு காட்டியிருந்திருக்கேன். நிர்வாகமும் என்கிட்டே பிரியமா இருந்திருக்காங்க ஆறு ஏழு மணி வரைக்கும் கூட இருந்து வேலை பார்த்திருக்கோம். பின்னாடி 73ல நிர்வாகம் மாறிச்சு இளையராஜா பொறுப்புக்கு வந்தாரு அவரும் பிரியமாத்தான் இருந்தாரு என்னைப்பாராட்டி லட்சியக் கவிஞர்னு பட்டமெல்லாம் குடுத்திருக்காரு. ஆனா அவருக்குச் சுற்றியிருந்தவங்க சரியில்ல. நிர்வாகமும் சரியாப் பண்ணத் தெரியல. ஆசிரியர்களுக்கு நெறைய அவமானம் ஏற்பட்டிருச்சு அதை எதிர்த்துப் போராட வேண்டியிருந்தது. இந்தப் போராட்டம் தமிழ்நாடு ஆசிரியர் இயக்கத்துல முக்கியமானது. அப்பத்தான் 'MUTA' உருவாச்சு. போராட்ட வெற்றியில இக்கல்லூரியை அரசாங்கம் எடுத்துக்கிச்சு, மக்களுக்குச் சொந்தமா எல்லா நிறுவனங்களும் இருக்கணும்; அரசாங்கம் நடத்தணும்; அப்படீங்கிற ஆசை நிறைவேறிச்சு. முதல் தேதியில எல்லாத்துக்கும் ஊதியம் கெடைச்சுச்சு. தனியார் கல்லூரிகள்ல எல்லாம் ஆசிரியர்களுக்கு நிறையச் சம்பளப்பாக்கி வச்சிருந்தாங்க. அதையெல்லாம் மாத்தி பிரின்ஸ்பால் மூலமா டைரக்ட்பேமெண்ட்-னு கொண்டு வந்தோம். இந்தப் போராட்டத்தை வச்சு 'MUTA' தோன்றுனதும், அது வளர்ந்ததும் நிறைவான காரியந்தான். ஆனா அரசுக் கல்லூரி எடுத்த பின்னாலும் முன்னேற்றமில்லை புதிய பாடங்கள் எதுவும் வரல. ரிடையர் ஆகப்போற காலத்துல உற்சாகம் இல்லாமத்தான் இருக்கு.

என்னதான் ராஜாவை எதிர்த்துப் போராடினாலும் அவர் மேல எனக்குத் தனிப்பட்ட பகையெல்லாம் இல்ல. அவர் இறந்தப்போ எனக்கு ரொம்ப வருத்தமாகத்தான் இருந்தது. அவரு ஏதோ அறியாமப் பண்ணிட்டாருன்னுதான்

நெனைச்சேன். என்னோட 'வா இந்தப் பக்கம்' —ங்கிற புத்தகத்தைக் கூட அவருக்குத்தான் காணிக்கையாக்கியிருக்கேன். குடும்ப வாழ்க்கையைப் பொருத்தவரைக்கும் மன நிறைவாத்தான் இருக்கேன். ரெண்டு பையன்கள் மூத்த பையன் 'மருத்துவம்' படிச்சிருக்கான். இன்னொரு பையன்தான் பிரஸ்ஸைப் பார்த்துகிட்டிருக்கான்.

**மாறியிருக்கக் கூடிய உலகச் சூழ்நிலையில் ''சோவியத் யூனியன்'' வீழ்ந்த பிறகு தங்களது சிந்தனையில் மாற்றம் ஏதும் ஏற்பட்டுள்ளதா? தங்களது லட்சியம் குறித்து மறுபரிசீலனை செய்வதுண்டா?**

இல்லை 'சோவியத்' நமக்கு ஒரு பிரத்யட்ச லட்சிய நாடாக இருந்தது. அதை உடைக்க வேண்டுமென்று தொடர்ந்து அமெரிக்கா முயற்சி செய்து வந்தது இப்போது ஏற்பட்டுள்ள மாற்றங்களுக்குக் ''கோர்ப்பச்சேவை''க் குற்றம் சொல்ல முடியாது. 'சோசலிஸம்' தோத்துப் போகக் கூடிய தத்துவமல்ல. நம்ம நாட்டோட பிரச்சினைகளுக்குத் தீர்வு அதுதான். மதம், ஜாதி இதையெல்லாம் பயன்படுத்தி சோசலிஸத்தை நோக்கி போகவிடாம பண்ண முயற்சிக்கிறாங்க. ஆனாலும் நேரு காலத்தில இருந்தே ஜனங்கள் சோசலிஸ ஆதரவு மனப்பான்மை உள்ளவங்களா வளர்ந்திருக்காங்க யாரு ஆட்சிக்கு வந்தாலுமே இந்திய மக்கள் அமெரிக்காவுக்கு எதிராத்தான் இருப்பாங்கன்னு அமெரிக்காவே நெனைக்கும். அப்படி ஒரு ஏகாதிபத்திய எதிர்ப்பும், சோசலிஸ ஆதரவும் நம்ம ஜனங்கள்கிட்ட இருக்கு. நிச்சயம் மாற்றம் வரும்னு நம்பலாம். விரக்தி அடைய வேண்டியதில்ல. காதலல் தோல்வி ஏற்படத்தான் செய்யுது. அதுக்காகக் காதலிக்காம இருக்காங்களா? அதுமாதிரி தத்துவத்துல நம்பிக்கை வச்சுக்கிட்டுத் தொடர்ந்து போய்க்கிட்டே இருக்க வேண்டியதான்.

# அருவியூர் நகரத்தார் - ஓர் ஆய்வு

**சி. இலட்சுமணன்**

உலகெல்லாம் உணர்ந்து ஓதுதற்கரியவனாகிய சிவபெருமான் மீது இடையறாபக்தியும், நித்தம் மரகத விநாயகர் பூஜையும், உலகெங்கும் இரத்தின வணிகம் செய்யும் உரிமையும், மன்னவர்களுக்கு மணிமுடி சூடும் பெரும்பேறும், தமக்கெனத்தனிக் கொடிவைத்துக் கொள்ளும் தகுதியும் உடையவர்கள் சந்திரகுல தனவைசியராகிய அருவியூர் நகரத்தார் எனப் பழைய சுவடியொன்று எடுத்தியம்புகிறது. ''நகரத்தார் எனுஞ்சொல் இக்காலத்தில் பெரும்பான்மையாக, செட்டி நாட்டுப் பகுதியில் வாழும் நாட்டுக் கோட்டைச் செட்டியார்களைக் குறித்தாலும் பழங்காலத்தில் வணிகர்கள் அனைவரையும் குறிக்கும் பொதுச் சொல்லாகவே இச்சொல் விளங்கியது. முற்காலக் கல்வெட்டுக்களில்'' இந்நகரத்தோம், ''மணிக்கிராம நகரத்தார்'', ''ஐநூற்றுவ நகரத்தார்'', ''நாகநாட்டு நகரத்தார்'' 'அருவியூர் நகரத்தார்' போன்ற சொற்களைக் காண்கிறோம்.

ஆதியில் சீர்மிகு சம்புத்தீவில் நாகநாட்டில் சத்தியாபுரி என்ற நகரத்தில் இச்சந்திரகுல கோத்திர வைசியர்கள் மரகத விநாயகர் பூஜையும், கோபதீசுவரர் வழிபாடும், சதாசிவகுரு பீடத்தில் தீட்சா கிரியையும், இரத்தின வியாபாரமும் செய்து கொண்டு மன்னர்களால் சிறப்பாக மதிக்கப்பட்டு விபூதி, உத்திராட்சம் தரித்து சைவ சித்தாந்திகளாக வாழ்ந்து வந்தனர். நாகநாட்டு மன்னன் கொடுங்கோலனாகிக் கடுந்தண்டனைகளை இவர்களுக்கு வழங்கவே அந்நாட்டை நீத்து தொண்டை நாட்டுக் காஞ்சிபுரத்தை வந்தடைந்தனர். வைசியர்களின் வரவறிந்த அரசன் அகமகிழ்ந்து அன்போடு வரவேற்று, உபசரித்து, ஆதரவளித்து தன்னாட்டிலேயே வாழுமாறு வேண்டிக் கொண்டான். வேந்தனின் வேண்டுகோளை ஏற்று நகரத்தார் அவ்வூரிலே தங்கினர். மன்னவன் வேண்டுகோளின்படி புஷ்கர நதியில் நீராடி சத்யபுரீசவரரைத் தரிசித்து, அருணசிரி சிவசங்கராச்சாரியிடம் தீட்சாகிரியைப் பெற்றுக் கொண்டனர். மரபு வழாமல் அறம் பிறழாமல், எல்லார்க்கும் இனியராய், ஈர நெஞ்சினராய் பன்னெடுங் காலமாய் அந்நகரிலேயே வாழ்ந்து வந்தனர் காலத்தின் கோலத்தால் தோன்றிய பிரதாபராசன் என்ற மன்னவன் அநீதியின் உற்ற தோழனானான்; வணிககுல மக்களின் துன்பத்தை இன்பமெனக் கொண்டான். ஆகவே கலிவருடம் 2312-ல் விருகிருதி ஆண்டில் ஆண்டு வருபவனுக்கஞ்சி ஆண்டவனை வணங்கி வேண்டி சோழநாடு ஏகினர்.

சோணாடாண்ட மனு நீதிச் சோழன் புதிதாக தன்னாட்டிற்கு வந்தவர்கள் நன்னாட்டம் கொண்டவர்களென்றறிந்து, அவர்களை அவைக்கு வரவழைத்து விசாரித்தான். பன்னாட்டு வணிகர்களும் வாழும் தன்னாட்டிற்குப் புதிதாக வந்த இவ்வணிகப் பெருங்குடியினர் தென்னாட்டிற்குச் செல்லும் திட்டத்துடன் வந்திருப்பதை உணர்ந்தான். ''இக்காவிரிப்பூம்பட்டினத்தில் வடக்குத்தெருவில் பலவகை வணிகர்களுமிருப்பதால், இரத்தின வணிகர்களாகிய நீங்கள் ஏனைய மூன்று தெருவிலும் குடியமருங்கள், சிங்கக்குடையும், உங்கள் மாளிகையில் தங்கக்

கலசங்களும் வைத்துக் கொள்ளுங்கள். காவிரியில் நீராடலும், தில்லைப்பதியில் ஈசானியச் சிவாச்சாரியாரிடத்து தீட்சாகிரியையும் பெற்றுக் கொள்ளுங்கள்'' என்று மிகவும் வேண்டினான். நகரத்தார் கூடி நன்கு ஆலோசித்து, வேந்தனின் வேண்டுகோளை ஏற்று எண்ணாயிரம் வைசியக் குடும்பத்தினரும், பூம்புகாரில் குடியேறி அரச விசுவாசத்துடன் ''இரத்தின தனமகுட வைசியர்கள்'' என்ற பெயருடன் சிவநெறியும் அறநெறியும் வழுவாது வாழ்ந்து வந்தனர். பூவந்திச் சோழன் ஆட்சிக் காலத்தில் மிகப் பெரிய சோதனையொன்று இம்மரபினருக்கு வந்தது. வைசியப் பெண்கள் அனைவரையும் மன்னவன் சிறைவைத்தான். உயிரினும் மானத்தைப் பெரிதாக மதிக்கும் வணிகர் சிந்தை நொந்து, வைசியக்குடும்பத்தினர் எண்ணாயிரம் குடும்பத்தினரும் தங்கள் தீட்சா குருவாகிய ஆத்மநாத சாஸ்திரியை அடைந்தனர். ''குருநாதா எங்கள் வம்சத்துச் சிசுக்களையும், மரகத விநாயகர் பூஜையையும் காத்து வாருங்கள'' என்று பணிந்து கண்ணீருடன் கூறி அக்கினி பகவானுக்கு ஆகுதியாயினர்.

குழந்தைகள் ஈன்றோரை இழந்தனர், குரு சீடர்களை இழந்தார். மேற்குத் தெரு ஆறு வழியைச் சார்ந்த அறுநூறு ஆண்பிள்ளைகளையும், தெற்குத் தெரு நான்கு வழியைச் சேர்ந்த நானூறு பிள்ளைகளையும், கீழத்தெரு ஏழு வழியைச் சார்ந்த ஐந்நூற்றிரண்டு சிசுக்களையும் ஆத்மநாத சாஸ்திரிகள் கண்ணெனக் கருத்துடன் காத்து, அறிவுபுகட்டி, வளர்த்து வந்தார். ஏறக்குறைய ஒன்பது ஆண்டுகளுக்குப்பின் மன்னவன் தன் மகனுக்கு மகுடம் சூட்ட விரும்பினான். ஆத்மநாத சாஸ்திரி பக்கமிருந்த ஆயிரத்து ஐந்நூற்றிரண்டு வைசியகுல மக்களை அணுகி மரபின்படிதன் மகனுக்கு மகுடஞ் சூட்டுமாறு வேண்டினான். ''மன்னவனே உங்கள் செய்கையால் எங்கள் பெற்றோர்களும், பெண்டிர்களும் மானம் காக்க உயிர்த்தியாகம் செய்தனர். நாங்களோ பிரமச்சாரிகள் எங்களுக்கு விதிப்படி மகுடஞ்சூட்ட உரிமையில்லை'', என்று கூறி மறுத்து விட்டனர். பெற்றெடுத்த பிள்ளைக்குப் பட்டஞ் சூட்டத் தடை ஏற்பட்டதைக் கண்ட வேந்தன் வேதனையுற்று வேதம் வல்ல வைசிய குலகுருவாகிய ஈசானச் சிவாச்சாரியாரையும் ஏனையோரையும் கலந்தாலோசித்தான். அறநூலின்வழி ஆய்கின்றபோது ''வைசியகுலத்தார் வேளாளர் குலத்தில் பெண் கொள்வது குற்றமில்லை. ஆகவே வைசியர் வேளாளர் குலப்பெண்களை திருமணம் செய்யலாம்'' என்றனர். சோழ மன்னன் உழுது உலகு புரக்கும் வேளாளர்களையும், அவர்கள் தம் குருக்களையும் அழைத்து கால் வழி தவறாது தழைக்க உதவுமாறு வேண்டினான். வேளாளர்களும் பெண்கொடுக்க இசைந்தனர் வைசியர்கள் ''நாங்கள் வேளாளர் பெண்களை எடுக்கிறோம். ஆனால் பிற்காலத்தில் பெண்களைக் கொடுக்க இயலாது'' என்றனர். அரசனும் ஆதீனக் குருக்களும் வேளாளர்களைச் சம்மதிக்கச் செய்தனர். ஆனால் வேளாளர்கள் தங்கள் பெண்களுக்கு வேளாளர் குருக்கள் தாம் தீட்சா குருக்களாக இருக்க வேண்டுமென்றனர். இருதரப்பினரும் இசைந்தனர். மேலத்தெரு ஆறு வழியைச் சார்ந்த அறுநூறு பிள்ளைகள் 'கார்'காத்த ே ளாளப் பெண்களையும், தெற்குத்தெரு நான்கு வழியைச் சார்ந்த நானூறு பிள்ளைகள் கீழத்தெரு ஏழு வழிப்பிள்ளைகள் சோழிய வேளாளப் பெண்களையும் திருமணஞ் செய்தனர். இப்பெண்கள் முறையே திருவாரூர் திருநாவுக்கரசு குருக்களையும், கும்பகோணம் சிவஞானக் குருக்களையும், ஸ்ரீ வாஞ்சியம் நிரம்ப வழகிய குருக்களையும் தீட்சா குருக்களாகக் கொண்டனர்.

இல்லறத்தார்களாகிய வைசியர்கள் சோழனாகிய இராஜபூஷணனுக்கு மணிமகுடஞ் சூட்டினர். மன்னனின் மரியாதையையும் பெற்றுக் கொண்டனர். வேளாளர்கள் தங்கள் பெண்களுக்குச் சகல சீர்வரிசைகளையும் செய்த துடன், வேலை செய்வதற்கு வெள்ளாட்டி (பணிப் பெண்கள்)களையும் அனுப்பினர். பிற்காலத்தில் தோன்றும் உபயகுல மாமன்மார்களுக்குத்தான் சடங்கும், உரிமையும் உண்டென்றும் முடிவு செய்தனர். ''உபய குல பூபால வைசியர்'', ''இரத்தின தன மகுட பூபால வைசியர்'', கங்கை குல வேளாளர் வீட்டுப் பெண்களைத் திருமணஞ் செய்ததால் ''சந்திர கங்கா குல வைசியர்'' என்ற சிறப்புப் பெயர்களும் பெற்றனர். விபூதி, உத்திராட்சமணிந்து சிவநெறிச் செல்வர்களாக வாழ்ந்து வரலாயினர்.

பாண்டிய மன்னன் 'சௌந்திர பாண்டியன்' சோழனின் விருந்தாளியாகக் காவிரிப்பூம்பட்டினத்திற்கு வந்தான். சோணாட்டு மக்கள் அவனுள்ளத்தைக் கவர்ந்தனர். சோழனோடு உரையாடும் போது ''கீர்த்தி பூஷண பாண்டியன் காலத்தில் கடல் பெருக்கெடுத்து திருப்பூவனம் வரை அழித்து விட்டது. பின்னர் பதினெட்டு பாண்டியர்களின் ஆட்சிக் காலம் வரை எங்கள் நாட்டில் நற்குடிகள் இல்லாது போயினர். தற்போது பல்வேறு திசைகளிலுமிருந்து நற்குடிகள் குடியமர்த்தப்பட்டுள்ளனர். நாடும் வளஞ்செறிந்ததாகவுள்ளது. மேலும் நாடு நன்னாடாக வைசியர்களையும் வேளாளர்களையும், வேதம் வல்லார்களையும் என்னாட்டிற்கு அனுப்பி உதவுங்கள். அவர்களுக்கு எல்லா வசதிகளையும் செய்து தருவேன்'' என்று வேண்டினான். சோழன் மூன்று தெரு வைசியர்களையும் அழைத்துப் பாண்டிய மன்னனின் வேண்டுகோளைக் கூறி அவர்கள் உதவியை நாடினான். ''நாங்கள் மூன்று தெருவினரும் ஒருவரை விட்டு மற்றொருவர் பிரிவதில்லை. அவ்வாறு நாங்கள் பாண்டிய தேசம் சென்றால் எங்களைத்தாங்கள் எவ்வளவு மரியாதையுடன் நடத்துகிறீர்களோ, அவ்வாறே பாண்டிய மன்னனும் மரியாதையுடன் நடத்த வேண்டும். மேலும் நாங்கள் சேர்ந்து வாழ்வதற்குரிய இடம், தேவாலயங்கள், குருமார்கள் தங்குவதற்கு மடாலயம் அமைக்க வசதி இவற்றைச் செய்துதர வேண்டுமென்று கூறினர். சௌந்திர பாண்டியனும் உறுதிகூறி வைசியர்களைத் தன்னாட்டிற்கு அழைத்து வந்தான்.

பாண்டிய நாட்டெல்லையை அடைந்தவுடன் மன்னன் வணிகப் பெருங்குடியினரை நோக்கி ''வைசியகுலச் செம்மல்களே, கடலுக்கு மேற்கும் பிரான்மலைக்குக் கிழக்கும், வைகைக்கு வடக்கும், வெள்ளாற்றிற்குத்தெற்குமாக

அமைந்துள்ள இப்பூமி வேளாளர் பகுதியாகும்; உழுதும், உழுவித்தும் விருந்தோம்பும் பண்பினர் வேளாளர். ஆகவே ''மூன்று தெருவைச் சார்ந்தவர்களாகிய நீங்கள் இப்பகுதியில் எங்கு வேண்டுமானாலும் தங்கிச் சீரும், சிறப்புமாக வாழுங்கள்'' என்றான். மேலைத் தெருவைச் சார்ந்த ஆறுவழியினருக்கு அரிவையூரும், பிரான்மலைக் கோயிலும்; தெற்குத்தெரு நான்கு வழியாருக்கு சுந்தரபட்டணமும் அவ்வூர் கோவிலும்; கீழத்தெரு ஏழுவழியாருக்கு இளையாற்றங்குடியும் அவ்வூர்க் கோவிலும் உரிமையுடையதாக வகுத்துக் கொண்டனர். தாங்கள் பரம்பரையாக வழிபட்டு வரும் மரகத விநாயகரை அரியூரில் பிரதிஷ்டை செய்து வழிபடுவதென'' வைசியர்கள் முடிவெடுத்தனர். அரியூரில் வாழ்ந்து வந்த வணிகப்பெருங்குடியினர் ''அரியூரார்'' அரிவையூரார், ''அருவியூரார்'' என்றழைக்கப்பட்டனர்.

சிற்றூராகிய அருவியூர் அருவிமாநகராயிற்று. ''குலசேகரப் பட்டினம்'', ''தேசி உய்ய வந்த பட்டினம்'' என்ற சிறப்புப் பெயர்களும் ஏற்பட்டன. திசையாயிரத்தைந்நூற்றுவர், நானா தேசிகள் என்ற வணிகக் குழுவினரும் அங்கே குடியேறினர். எறிபடை நல்லூர் (செட்டிகுறிச்சி) ஐந்நூற்றுவ மங்கலம் (ஐநூத்திப்பட்டி) எனும் வணிகப் பதிகளும் தோன்றின. திசையாயிரத்தைந்நூற்றுவர் பெயரால் ஐநூற்றீசுவரர் கோவில், துவராபதீசுவரர் கோவில் ஆகியவை கட்டப்பட்டன. பழைய ஆலயங்களில் புதிய இறைத் திருவுருவங்களும், அடியார்கள் திருவுருவங்களும் எழுந்தருளுவித்தனர். நித்திய பூஜைக்கு நிலங்கள் அளித்தனர் மடாலயங்களைத் தோற்றுவித்தனர். இப்பகுதியிலுள்ள நகரத்தார்கள் பலருங்கூடி பொருள்களுக்குத் தீர்வை விதித்தனர், தீர்வைப்பணம் ஆலயங்களுக்கும் அறநிலையங்களுக்கும் அளிக்கப்பட்டது.

சகாப்தம் 1210 (கி.பி. 1288) அரியூர்பட்டினம் எடுபட்டுப் போனதால் மேலைத்தெரு வைசியர்கள் கோட்டாற்றைச் சென்றடைந்து மரகத பிரதிஷ்டை செய்து வாழ்ந்து வந்ததாகப் பழஞ்சுவடி குறிக்கிறது இன்றும் கோட்டாற்றில் மரகத விநாயகர் எனும் தேசி (க) விநாயகர் கோவிலுள்ளது. அப்பகுதியில் செட்டியார் சமூகத்தினர் வாழ்ந்து வருகின்றனர். இவர்கள் அனைவரும் சைவர்கள். அருவியூர் நகரத்தாரில் ஒரு பிரிவினர் சைவ உணவைக் கை விட்டு விட்டதால் அருவியூர் தெற்கு வளவு நகரத்தார் எனப்படுகின்றனர். இப்பிரிவு எப்போது தோன்றியது என்பதற்கான குறிப்பொன்றும் இதுவரை கிடைக்கவில்லை. கோட்டாற்று தேசிவிநாயகர் கோவிலில் தூணொன்றில் மூவரின் உருவங்கள் காணப்படுகின்றன. ஒருவர் தலையில் மட்டும் சிவலிங்கமுள்ளது. 1288-ல் அருவியூர் அழிந்துவிட்டதாகக் கூறப்பட்டாலும் கி.பி. 15-ம் நூற்றாண்டு வரை அச்சிற்றூர் இருந்ததாகக் கல்வெட்டில் குறிப்புள்ளது. கோட்டாற்றிற்குச் சென்ற அருவியூர் நகரத்தார்கள் காலப்போக்கில் தங்கள் பழையவூரை மறந்து விட்டார்கள். அங்குள்ள சைவ வேளாளர்களுடன் மணவினை வைத்துக் கொண்டனர். தற்போது சைவச்செட்டியார்கள், கோட்டாற்றுச் செட்டியார்கள், தலைமைச் சிறப்பு பற்றி மூப்பனார்கள் என அழைக்கப்படுகின்றனர். நெல்லை மாவட்ட இலைவணிகர்களாகிய மூப்பனார் இவர்களில் வேறு. இவ்வணிகர்களில் ஒரு பிரிவினர் ஏழூர் செட்டியார்கள் எனவும் அழைக்கப்படுகின்றனர். இவர்களில் ஒரு பிரிவினர் சைவ உணவினர். இவர்கள் கேரள நாட்டிலும் பரவி மிகச்சிறுபான்மையராக வாழ்ந்து வருகின்றனர், இன்றும் இவ்வகுப்பாரிடையே வாணிபமே முதன்மைத் தொழிலாக விளங்குகிறது. பொன், நவதானிய வணிகத்தில் சிறந்து விளங்குகின்றனர். பக்தி, பண்பாடு, நேர்மை ஆகியவை இச்சமூகத்தார்க்குரிய சிறப்பம்சங்களாக இன்றுமுள.

## அருவி மாநகர்

அருவியூரா? அருவிமாநகரா? அருவியூர் ஒரு சிற்றூரன்று, மாநகர். வீரசோழனின் 35 ஆம் ஆட்சியாண்டில் (கி.பி. 1213) கல்வெட்டொன்றில் ''அருவி மாநகரத்து வியாபாரி திருமணிக்கிழார் தேவன் உமையொருபாகன்' என்ற வணிகன் குறிக்கப்படுகிறான் மேலும் தென்னியக் கல்வெட்டுத் தொகுதி 8 ல் கல்வெட்டெண் 442'' அருவிமாநகரமான குலசேகரப்பட்டினத்தோம்'' எனக் குறிக்கிறது. அருவியூர், கி.பி. 1106-ல் நானா தேசிப்பெருந்தெரு என்றும் கி.பி1117 ல் தேசியுகந்த பட்டினம் என்றும் கி.பி. 1204-ல் ஸ்ரீ வல்லபபுரம் என்றும் கி.பி. 1288 ல் குலசேகரபட்டினம் என்றும் அழைக்கப்பட்டதாக சிவபுரிப்பட்டி, திருப்பத்தூர், திருக்கோஷ்டியூர் கல்வெட்டுக்களால் அறிகிறோம்.

அருவியூரில், அருவியூர் நகரத்தார் மட்டுமின்றி திசையாயிரத்து ஐந்நூற்றுவர், நானா தேசிகள் போன்ற பல்வகை நகரக் குழுவினரும் வாழ்ந்து வந்தனர். இம்மாநகரைச் சுற்றி திசையாயிரத்து ஐந்நூற்றுவ மங்கலம் (ஐநூத்திப் பட்டி) எறிபடைநல்லூர் (செட்டிகுறிச்சி) கூடலூர் (தற்போது அழிந்து விட்டது) ஆகிய வணிகப்பதிகளுமிருந்தன, இவ்வூரிலிருந்து எறிபடை நல்லூருக்கு ஒரு பெருவழி (High way) சென்றது. இந்நகர் ஒருமைல் நீளமும் முக்கால்மைல் அகலமும் கொண்டதாக அமைந்திருந்தது. இங்கு பதினெட்டுப் பெருந் தெருக்களிருந்தன. துவராபதீசுவரர் ஆலயம், ஐந்நூற்றீசுவரர் கோவில், சுந்தரபாண்டீசுவரம், அருணைகண்ட விண்ணகர், மரகத விநாயகர் திருக்கோவில், வடக்கு வாசல் செல்வி கோவில் ஆகியவை இருந்தன. காலப்போக்கில் அருவிமாநகர் சிற்றூராய்ச் சிதைவுற்றழியவே ஆலயங்களும் அழிந்தன. இவ்வாலயத்தைச் சேர்ந்த திருவுருவங்கள் சிலவற்றை காளாப்பூர் ஆற்றங்கரையிலும், சிங்கம்புணரிக்கு வடபாலுள்ள விழுப்புணி களத்திலும் இன்றும் காணலாம் கோவிலின் கற்கள் ஆங்கிலேயர் காலத்தில் அணைகள் கட்ட எடுத்துச் செல்லப்பட்டன. மருதுபாண்டியர் காளையார் கோவிலுக்குக் கற்களை வண்டியில் கொண்டு சென்றதாகச் செவிவழிச் செய்தியுமுண்டு. அருகேயுள்ள ஊர்களின் ஆலயங்களில் இவ்வூர் கல்வெட்டுக்களையுடைய கற்றுண்டுகளையும் காணலாம்.

இத்தகைய வணிகப்பெருநகர் எங்கிருந்தது எனும்வினா எழுவது இயற்கையே. இது பசும்பொன்முத்துராமலிங்கம் மாவட்டம் சிங்கம்புணரிக்குக் கிழக்கேயுள்ள காளாப்பூருக்குத் தென்பாலமைந்திருந்தது. காளாப்பூரும் அந்நகரின் ஒரு பகுதியாக ஒரு காலத்திலிருந்திருக்கலாம். அப்பகுதி இன்று 'அருவிக்காடென' வழங்கப்படுகிறது. அப்பகுதி-யிலுள்ள புன்செய் நிலங்களை உழும்போது அம்மி, குழவி, பழைய மண்பாண்டப் பகுதிகள் கிடைத்துள்ளன, பழஞ்செப்புக் காசுகள் கிடைத்ததாகச் சிலர் கூறுவர். களிமண்ணால் செய்யப்பட்டு சுடப்பட்ட உறைகளால் அமைக்கப்பட்ட கிணறு ஒன்றும் இப்போது அங்குள்ளது. ஆல ஊருணி அல்லது மரகத ஊருணி எனும் பெயருடைய அகன்ற குளமொன்றும் அப்பகுதியிலுள்ளது.

இத்தகைய செல்வமும், அறமும் இணைந்து வாழ்ந்த நகரிருந்த இடத்தைக் கண்டுபிடித்து உலகறியச்செய்த உரிமையும், பெருமையும் உடையவர் சிங்கம்புணரியைச் சார்ந்த, மலேயா வாழ் மாமேதை திரு டாக்டர் *சி. ஜெயபாரதி M.B.B.S.,* ஆவர். அவரது குறிப்புரை கொண்டுதான் இக்கட்டுரை எழுதப்பட்டது. அரசோ, பல்கலைக்கழகமோ, செய்ய வேண்டிய பெரும்பணியைத் தனியொருவர் தன் முயற்சியால், பிறர்தூற்றுதலுக் கஞ்சாது, போற்றுதலை எதிர்பாராது கண்டு பிடித்து வெளியிட்டார் என்பது உலகு போற்றத் தகுந்த செயலாகும்.

## அருவியூர் நகரத்தாரின் சமயப்பணிகள்

மனிதர்தம் மனத்தைச் செம்மைப்படுத்துவது சமயம். சமயத்தின் தலையாய குறிக்கோள் இறைப்பணியும், மக்கட்பணியுமாகும். பண்டைய ஆலயங்கள் சமுதாயக் கூடங்களாக விளங்கின. ஆலயத்தில் உடற்பிணி நீக்கும் மருத்துவச்சாலைகளிருந்தன. அறியாமைப் பிணி நீக்கும் கல்விக் கூடங்களும் நூலகங்களு-மிருந்தன. ஆகவே இத்தகைய அறச்சாலைகளைப் பேணிக்காப்பதில் அறவழிப் பொருளீட்டிய அருவியூர் நகரத்தார்கள் கண்ணும் கருத்துமாக இருந்தனர். ''நகரம்'' என்ற வணிகக் கூட்டத்தார் மட்டுமின்றி தனிநபர்-களாய வணிகர்களும் அறத்தொண்டர்களாக விளங்கினர். ஆலயம் என்பது இறைவனின் இருப்பிடம். ஆகவே ஆலயங்களமைத்து இறைத் திருவுருவங்களையும், அடியார்கள் திருவுருவங்களையும் எழுந்தருளுவித்தல், திருக் குளங்கள் தோண்டுதல், நந்தவனங்களை அமைத்தல் சிவனடியார்கள் தங்குவதற்குத் திருமடங்களமைத்தல், நந்தா விளக்குகள் ஏற்றுவித்தல், அணிகள் முதலியவற்றை இறைவனுக்களித்தல் போன்ற அறப்பணிகள் பல செய்யப்பட்டன, அவற்றினைக் கல்வெட்டுக்களின் துணைகொண்டு இனிக்காண்போம்.

## இறைத்திருவுருவங்களைஎழுந்தருளுவித்தல்

புதிய ஆலயங்களைக்கட்டி ஆங்கே இறைத் திருவுருவங்களை எழுந்தருளுவிப்பது. பழைய ஆலயத்தில் புதிய இறைத் திருவுருவங்களை எழுந்தருளுவிப்பது, உற்சவ மூர்த்திகளைப் பிரதிஷ்டை பண்ணுவது ஆகிய மூவழிகளிலும் அருவியூர் நகரத்தார் இறைத்திருவுருவங்களை எழுந்தருளுவித்துள்ளனர்.

புதுக்கோட்டை மாவட்டம் திருமயம் வட்டத்திலுள்ள சாத்தனூரில் வீரசோழனின் 35 ம் ஆட்சியாண்டில் (கி.பி. 1213) அருவிமாநகரத்து வியாபாரி திருமணிக்கிழார் தேவன் உமையொருபாகன், ஸ்ரீ கைலாசத்து உமாபதி ஈசுவரமுடைய நாயனாரை எழுந்தருளுவித்தான். அச்சிவன் கோவிலைக் கட்டினான். மேலும் ஆலயத்தில் பூசனைகள் சிறப்பாக நடைபெற ஊராரிடமிருந்து ''பொய்யா மொழியாள் குளமும், வயலும்; பொன்னன் குளமும், வயலும்; முத்தாண்டவர் வயலும் குழியும் விலைக்கு வாங்கி ஆலயத்திற்கு அளித்துள்ளான். அவைமட்டுமின்றி நந்தவனமும் தோட்டமும் அமைக்க ஏற்பாடுகள் செய்துள்ளான்.

## தேசி விநாயகர்

தேசி என்றால் வணிகர்கள் என்பது பொருளன்றோ? அருவியூர் நகரத்தில் அமைக் கப்பட்ட மரகத விநாயகர் தேசிகளின் விநாயகர் தானே! பிள்ளையார்பட்டி விநாயகரின் திருப்பெயர்களில் ஒன்று தேசி விநாயகர். மற்றொரு தேசி விநாயகர் இன்றும் சிவபுரிப்பட்டியில் அருளாட்சி புரிகிறார். அன்றைய அருவி மாநகரத்திற்கு வடபால் இரண்டுகல் தொலைவிலுள்ளது — சிங்கம்புணரிக்குக் கிழக்கேயுள்ளது — சிவபுரிப்பட்டி. அங்குள்ள 'தான் தோன்றீசுவரர்' திருக்கோவிலில் இரண்டாம் பிரகாரத்தில் சோணாடு வழங்கியருளிய சுந்தரபாண்டியனின் 17-ஆம் ஆட்சியாண்டில் (கி.பி. 1233) அருவியூரைச் சேர்ந்த திரைமுருடையான் சூரிய தேவனான் தயதேவன் தேசிப் பிள்ளையாரை எழுந்தருளுவித்து அமுதுபடைக்கும் ஏற்பாடுகள் செய்துள்ளார். சிவபுரிப்பட்டி சிவன்கோவிலின் இரண்டாம் பிரகாரத்தில் இத்தேசிவிநாயகப்பெருமான் தன்னை வழிபடுவோரின் வல்வினையை நீக்கியருளுகிறார்.

## மற்றுமொரு விநாயகர் திருக்கோவில்

சகாப்தம் 1210 (கி.பி.1288)-ல் அருவியூர் பட்டணம் அழிந்துவிட்டதாகப் பழஞ்சுவடி பகர்கின்றது. ஆனால் 16-ஆம் நூற்றாண்டிலும் அவ்வூர் வணிகப் பெருமகனார் ஒருவர் திருப்பணி செய்ததை திருவாடானை வட்டம் ஆனந்தூர் திருமச்சடை ஈசுவரர் கோவில் கல்வெட்டு கூறுகிறது. சகாப்தம் செழிய நாராயணபுரத்துக் கிழவன் திருமேத்தளியாண்டான் ஏகப்பெருமான் விநாயகனாகிய அழகிய பிள்ளையாரை (நவப்பிரதிட்டை)ப் புதிதாக எழுந்தருளுவித்துள்ளான். அவனுக்கு முதல் மரியாதை கொடுக்க மக்கள் மனமுவந்து இசைந்துள்ளனர்.

### அன்னைக்கு ஆலயம்

அகில முழுவதும் ஈன்று காக்கும் அன்னைக்குத் தனிக்கோவிலெடுக்கும் பழக்கம் சோழ நாட்டில் தோன்றி பாண்டி மண்டலத்திலும் பரவியது. அன்னையின் ஆலயம் ''திருக்காமக் கோட்டம்'' எனப்படும். சிவபுரிப்பட்டியில் அருளாட்சி செய்யும் ''அறம் வளர்த்த நாயகிக்கு'' திருக்காமக் கோட்டத்தைக் கட்டியவர், அருவியூரான குலசேகரப்பட்டினத்து விளங்குகுடிக் கிழவன் உய்ய நின்றாடுவானின் தந்தை உய்ய நின்றாடுவானாவான். இதனை அக்காமக் கோட்டத்திலுள்ள வீரபாண்டியனின் 1257-ஆம் ஆண்டுக் கல்வெட்டு குறிக்கிறது.

### ஆலயத்தைச் செப்பனிடல்:

திருக்கானப்பேர் கூற்றத்து பெரும்பாலூரான இராசராச நல்லூரில் கலி 4440 தாரண வருடம் கார்த்திகைப் பத்தாம்நாள், அருவிமாநகரைச் சார்ந்த அமராபதிக்காட்டத்தி, அழகிய சொக்கனார் இருவரும் மற்றும் சிலருடன் ஏதோ காரணத்தால் அழிந்துவிட்ட ''திருவிருந்தருளும் ஈசுவரமுடையார்'' ஆலயத்தை செப்பனிட்டு, புதிதாகக் குளம் தோண்டி, நித்ய பூசைக்கும் ஏற்பாடு செய்துள்ளனர். இத்திருக்கோவில் திருவாடானை வட்டம் இராதானூரிலுள்ளது.

### தட்சணா மூர்த்தி

சிவாலயத்தின் தெற்குச் சுற்றில் தென்முகக் கடவுளாகிய தட்சணாமூர்த்தியைக் காணலாம். கல்லால நிழற்கீழமர்ந்து சனகாதிமுனிவர்க்கு அறமுரைத்த அப்பெருமானை ஆலமர்செல்வன் எனக் குறிக்கும் பழந்தமிழ் நூற்கள். சோணாடு வழங்கியருளிய சுந்தரபாண்டியன் காலத்தில் (கி.பி. 1224) அருவியூரான குலசேகரப்பட்டினத்தைச் சார்ந்த வணிகர் ஒருவர், சதுர்வேதமங்கலமான மட்டியூரில், தட்சணாமூர்த்தியின் திருவுருவத்தை எழுந்தருளுவித்து, அப்பெருமான் முன் இரு அணையா விளக்குகள் எரிக்கச் சிவப்பிராமணர்களிடம் பொன்கொடுத்து ஒப்பந்தம் செய்துள்ளான் என அங்குள்ள கல்வெட்டொன்று அறிவிக்கிறது.

### நால்வரின் திருவுருவங்கள்

பரமன் உறையும் பகுதிகள் தோறும் சென்றும் பாக்கள் பல பாடியும் பக்தி நெறியைப் பரப்பியவர்கள் நாயன்மார்கள். அவர்களில் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி சுவாமிகள், மாணிக்கவாசகப் பெருமான் ஆகிய நால்வரும் ''சமயக்குரவர்கள்'' எனப்படுவர். அவர்கட்கு ஆலயத்தில் சிறப்புவழிபாடுகளும், விழாக்களும் நடைபெறும்.

### திருஞானம் பெற்ற பிள்ளையார்

மூன்றாம் வயதில் அன்னையின் அருட்பாலுண்டு ஞானம் பெற்றவர் ஞானசம்பந்தப் பெருமான். பொற்றாளமும், கைத்தாளமும் கொட்டி அம்மையப்பரைப் பாடி நாளும் தமிழையும் இசையையும் வளர்த்தவர் சம்பந்தப் பெருமான். ''ஆளுடைய பிள்ளை'' என்ற அருமைத் திருப்பெயரையுமுடையவர். இவரது திருப்பெயரைக் கொண்ட அருவியூர் வியாபாரி ''புற்றிடங் கொண்டான், திருச்சிற்றம்பலமுடையானான ஞானசம்பந்தன்'' சதுர்வேதமங்கலத்து உருத்திரகோடீஸ்சுவரர் திருக்கோவிலில் ஆளுடைய பிள்ளையாரின் திருவுருவத்தை எழுந்தருளுவித்து நந்தா விளக்கெரிக்கவும் ஏற்பாடு செய்துள்ளான்.

### நற்றமிழ் பாடிய நாவுக்கரையர்

''என் கடன் பணி செய்து கிடப்பதே'' என்று எண்பதாண்டுகள் நாடெங்கும் சுற்றிச் சைவ சமயத்தை வளர்த்த பெரியவர் திருநாவுக்கரையர். இறைவனால் ''அப்பரே'' என்றழைக்கப்பட்ட பெருமைக்குரியவர். அப்பெருமானின் திருவுருவத்தை சதுர்வேதமங்கலத் திருக்கோவிலில் நிறுவி வழிபாட்டிற்கு நிலமும் வழங்கியுள்ளார், அருவியூர் வணிகர் ஒருவர். கல்வெட்டு மிகவும் உடைந்திருப்பதால் முழுமையான தகவல்கள் கிட்டாது போயிற்று.

### திருவாதவூரர்க்குத் திருவுருவம்

திருப்பத்தூர் வட்டம் (ப.தே.தி.மா) வேலங்குடி தற்போதுசுண்டைக்காடு, வேலங்குடியென அழைக்கப்படுகிறது. அவ்வூரில் மூன்று தெரு வணிகர்களுக்குமுரிய உத்திரபதீசுவரர் திருக்கோவிலுள்ளது. இத்திருக்கோவிலில் கல்லும், கல்நெஞ்சும, கண்ணும் கசிந்துருகுமாறு திருவாசகம் பாடிய திருவாதவூர் அடிகளுக்கு திருவுருவத்தைச் செய்து வைத்தவர் ஆறு (வழி) நகரத்தாராய அருவியூர் நகரத்தாரே யாவர். இந்நிகழ்ச்சி சகாப்தம் 1385-ல் (கி.பி.1463) நிகழ்ந்ததாக அத்திருக்கோவிலின் சிதைந்த கல்வெட்டொன்று சான்றுரைக்கிறது.

### திருக்குளம் தோண்டல்

நகரத்தார் தாங்கள் குடியமருமிடங்களில் ஊருணியும், குளங்களும் அமைத்துச் சமுதாயத்தொண்டுகள் செய்வது வழக்கம். நாடெங்கும் பரந்து கிடக்கும் செட்டிகுளங்களும், செட்டி ஊருணிகளும் ஊர்களும், இத்திருப்பணிக்குச் சான்றுகளாக இன்றும் நின்று விளங்குகின்றன. சிங்கம்புணரியில் சிதைந்த நிலையிலுள்ள செட்டிகுளத்தை இன்றும் காணலாம். மரகத ஊருணி, ஆலகுளம் ஆகியவற்றை பழைய அருவியூர் பகுதியில் பார்க்க முடிகிறது. சிவபுரிப்பட்டி அம்மன் கோவிலுக்கெதிரில் ஒரு குளம் காணப்படுகிறது. ஊராரின் நீர்வேட்கையைத் தணிக்கும் ஊருணியாக இன்றும் விளங்குகிறது. கவனிப்பாரின்மையால் கரைகள் உடைந்து சிதைந்துள்ள அத்திருக்குளத்தின் பெயர் ''பொற்பதிக்கு நாயகன்''. கோச்சடையவர்மன் வீரபாண்டியனின் எட்டாம் ஆட்சியாண்டில் (கி.பி. 1261) அருவியூர் ''விளங்குகுடிகிழவன் உய்ய நின்றாடு வானால்'' இப் ''பொற்பதிக்கு நாயகன்'' அமைக்கப்பட்டது.

## நந்தவனமமைத்தல்

"பூவோடு தூபம் மறந்தறியேன்" என்றார் அப்பர் பெருமான் "பூக்கொண்டு தும்பிக்கையான் பாதம்" நம்பிக்கையோடு நாளும் பணிவது நம் பழக்கம் சிவபுரிப்பட்டியில் "பொற்பதிக்கு நாயகன்" திருக்குளத்தை அமைத்தவர் நந்தவனமும் அமைத்துள்ளார். நாளும் பொழுது புலர்வதற்கு முன் அன்றலர்ந்த மலர்களைப் பறித்து இறைவனுக்குச் சூட்டுவர். அதற்காக நந்த வனங்களை அமைத்தனர். காரைக்குடி வட்டம் சாக்கோட்டையிலுள்ள ஈசுவரர்க்கு கேரள சிங்கவளநாட்டு, அருவியூரான குலசேகரப்பட்டினத்து பேரூர் கிழவன் செல்வன் உடையான் கி.பி. 1275-ல் வைகாசி மீ 25உ நந்தவனம் அமைத்த செய்தியை சாக்கோட்டைக் கல்வெட்டொன்று கூறுகிறது.

## நந்தா விளக்குகள்

ஒளிமயமாய் விளங்கும் ஈசனது திருக்கோயிலில் கருவறையிலும், ஏனையமூர்த் தங்களின் முன்பும் திருச்சுற்றிலும் பிறவிடங்களிலும் திருவிளக்குகளை அமைத் தனர் நம் முன்னோர்கள். அவை என்றும் அணையாமல் எரிந்து கொண்டிருந்தமையால் நந்தா விளக்குகளெனப் பட்டன. இவ்விளக்கிற்கு நெய்யளிப்பதற்காக சாவாமூவாப் பேராடுகளும், பொன்னும், காசுகளும், நிலமும் வழங்கப்பட்டன. திருப்பத்தூர் திருத்தளிநாதர் திருக்கோவிலிலுள்ள பாணலிங்க நாயனார் முன் இரண்டு நந்தா விளக்குகளை எரிக்க அக்கோவில் சிவப்பிராமணர்களிடம் அறுபது வராகன்களை அளித்துள்ளார், அருவியூரான குலசேகரப்பட்டினத்து "ஸ்ரீ கைலாயமுடையான் ஆடுநாண்டரான வைரவன்". இது நிகழ்ந்தது கி.பி. 1283 ல் ஆகும்.

சகாப்தம் 1452-ல் (1530) விக்ரத வருடத்தில் வீரப்பிரதாப அச்சுதராயர் காலத்தில் அருவியூரான குலசேகரப் பட்டினத்தைச் சார்ந்த ஒருவர் ஒரு நந்தா விளக்கு வைத்த செய்தி திருப்பத்தூர் கல்வெட்டொன்றால் தெரிய வருகிறது.

சதுர்வேதமங்கலம் உருத்திர கோடீசுவரர்க்கு அருவியூர் வியாபாரி ஒருவர் ஒரு நந்தா விளக்கு வைத்த செய்தி அவ்வூர் சிதைந்த கல்வெட்டால் தெரிய வருகிறது.

புதுக்கோட்டை மாவட்டம் திருக்குளம்பூர் திருக்குரம்பாண்ட நாயனாருக்கு அருவியூரான குலசேகரப்பட்டினத்து இருஞ்சேறையுடையானும் அவன் தம்பி கற்பகப்பெருமானும் இரண்டு நந்தா விளக்குகளெரிக்க திருவிளக்குப் புறமாக நிலமளித்துள்ளனர். எம்மண்டலமும் கொண்டருளிய குலசேகரப்பாண்டியனின் (கி.பி. 1300) கல்வெட் டொன்று கூறுகிறது இச்செய்தியை.

## அணிகள்

புதுக்கோட்டை மாவட்டம் திருவரங்குளத்திலுள்ள கல்வெட்டொன்று கூறும் செய்தி: "ஸ்வஸ்தி ஸ்ரீ உடையார், திருவரங்குளமுடைய நாயனார்க்கு, வெள்ளித் திருக்கை எடை நூற்றிப்பதின் கழஞ்சு. இது செய்வித்தான் அருவியூரான குலசேகரப்பட்டினத்து, பரவையூருடையான் சிராமன் பட்டபிள்ளை தன்மம். ஏனோ காலம், அரசு குறிக்கப்படவில்லை.

## திருவிழாக்கள்

ஆலயங்களின் தினசரிப் பூசை நடைபெறுவதுடன் திருவிழாக்களும் நடைபெறும். இதனையே "சிறப்பொடு, பூசனை செல்லாது" என்று வள்ளுவரும் குறிப்பிட்டார். திருவிழா உற்சவம், மகோற்சவம் என இருவகைப்படும். உற்சவம் மாதந்தோறும், முக்கிய நாட்களில் நடைபெறும். பாண்டிய மன்னன் கோனேரின்மை கொண்டானின் 19-ஆம் ஆட்சியாண்டில் மட்டியூரான சதுர்வேத மங்கலத்தில் பங்குனிப் பெருவிழா இனிதே நடைபெற அருவியூரான குலசேகரப்பட்டினத்து மட்டப்படை திருச்சிற்றம்பலமுடையான் உமைபொருபாகன் நிலம் விலைக்கு வாங்கிக் கொடுத்துள்ளான். அந்நிலத்தின் வருவாயைக் கொண்டு பங்குனிப் பெருவிழா நடந்திருக்கிறது.

## திருமடைப்பள்ளிப்புறம்

உணவளித்து உலகு புரக்கும் இறைவனுக்கு உணவளிக்க விரும்புவது அடியவருள்ளம். ஆகவே ஆண்டவனுக்கு அறுசுவை உணவுகளைச் சமைக்க திருமடைப்பள்ளியை அமைத்தனர் ஆன்றோர் அம்மடைப்பள்ளியைக் கட்டவும், பழுது பார்க்கவும், காக்கவும் வேண்டியயேற்பாடுகளைச் செய்தனர். அதற்காக நிரந்தர வருமானம் வருவதற்காக நிலங்களும் அளித்தனர். அந்நிலத்திற்கு — தானத்திற்கு — திருமடைப்பள்ளிபுறம் எனப்பெயர். பாண்டிய மன்னன் ஸ்ரீ வல்லபன் ஆட்சிக் காலத்தில் இருவர் திருமடைப்பள்ளிபுறமாக நிலமளித்துள்ளனர். கி.பி. 1071-ல் சிவபுரிப்பட்டியிலுள்ள அபிமுக் தேசுவரர்க்கு அருவியூர் நானாதேசிப் பெருந்தெருவில் வாழ்ந்த வியாபாரி அரியஹூருடையான் தில்லைநாயகன் தருணேந்துசேகரன், மோசி சாத்தன் பிரான் வாமனன் என்பானிடமிருந்து நிலம் விலைக்கு வாங்கி அளித்துள்ளான்.

கி.பி. 1081-ல் அருவியூரான தேசியுய்ய வந்த பட்டினத்து வியாபாரி மருதூருடையான், திருச்சிற்றம்பலமுடை யான் திருவேங்கடத்தாழ்வான் திருபசேகர சதுர்வேத மங்கலத்து ஸ்ரீ தான் தோன்றீசுவரமுடைய நாயனார்க்கு இவ்வூருக்கு (சிவபுரிப்பட்டி) மேற்கே பலகை தெரிப்பானான தாயக்குடை ஏரி, குளமும் குளவாயும் இப்படலைச் சுற்றுமுற்றும் திருமடைப்பள்ளிப்புறமாக அளித்துள்ளான்.

**திருமடத் திருப்பணி** சைவத் திருமடங்கள் சைவத்தையும், தமிழையும் காத்து வளர்த்து வருகின்றன. பண்டைக் காலத்தில் இத்திருமடங்கள் சைவசமய அடியார்கள் தங்குவதற்குரிய வனாக இருந்தன. புகலூரில் முருகநாயனார் திருமடத்தில் நாவுக்கரச பெருமான் வந்து தங்கியதை ''புன்னாக மணங்கமழும் பூம்புகலூர் வந்திறைஞ்சிப் பொருவில் சீர்த்தி மின்னரும் புரிமுந்நூல் முருகனார் திருமடத்தில் மேவுங்காலை'' என்று சைவத்திருமுறை கூறுகிறது. திருப்பத்தூரில் திருஞானசம்பந்தர் பெயரால் திருமடமொன் றிருந்ததைத் திருப்பத்தூர் கல்வெட்டொன்று குறிக்கிறது. கி.பி. 1417-ல் பராக்கிரமபாண்டியனின் ஆறாவது ஆட்சியாண்டில் ''அரிவியூரிலிருக்கும் வியாபாரி கோவலூருடையான் அழகிய நாயகன் உய்யவந்தான் திருமடம்'' என்று ஒரு திருமடம் அமைத்துள்ளான். அது என்றும் சிறப்புடன் விளங்க நிலமும் அளித்துள்ளான்'' என்று சிவபுரிப்பட்டிக் கல்வெட்டொன்று கூறுகிறது.

கி.பி. 1558 சீவல்லபனின் 24-ஆம் ஆட்சியாண்டில் கேரள சிங்க வளநாட்டு அருவியூரான தேசி உய்ய வந்த பட்டணத்து வியாபாரி திருநல்லூருடையான், அழகிய மணாளன், உடைய நம்பியான் அளகை மீனன், சிவபுரி ''அழகிய மணவாளன் மடத்திற்கு'' மடப்புறமாக நிலமளித்துள்ளான்.

**அருவியூர் நகரத்தாரின் சிறப்பியல்புகள்** அருவியூர் நகரத்தார்கள் பசும்பொன்முத்து ராமலிங்க மாவட்டம், புதுக்கோட்டைமாவட்டம், மதுரை மாவட்டம், ஆகிய மாவட்டங்களில் மிகச்சுருங்கிய அளவினராய் வாழ்ந்து வருகின்றனர். அருவியூர் நகரத்தாரில் அருவியூர் வடக்கு வளவு நகரத்தார், அருவியூர் தெற்குவளவு நகரத்தார் என இரு பிரிவினர் உள்ளனர். இப்பிரிவு எப்போது தோன்றியது என்பதற்கு குறிப்புகள் கிடைக்கவில்லை. இரு பிரிவினர்களிடையேயும் பெண் கொடுக்கல் வாங்கலில்லை. வடக்கு வளவினர் சைவ உணவினர். தெற்கு வளவினர் அவ்வாறில்லை. இருப்பினும் இருவரும் சகோதர பாசத்துடன் பழகி வருவது குறிப்பிடத்தக்கது. முன்னோர் வழியே பின்னோர்களாய இன்றைய நகரத்தார்களும் அறப்பணிகளைச் செய்து வருகின்றனர்.

**அருவியூரார்களின் சிறப்புகள்:**

1) தாய், தந்தை, ஆசிரியர் ஆகியவர்களிடம் பக்தியும், மரியாதையும் உடையவர்கள்.
2) சைவ மதத்தைப் பின்பற்றி வருகின்றனர்.
3) விநாயக பூசை செய்வார்கள்.
4) வணிகத்தில் நேர்மையும், நாணயமும்மிக்கவர்கள்.
5) பொன், மணி, முத்து, நவதானிய வணிகம் செய்வார்கள்.
6) தற்காலத்தில் பிறதுறைகளிலும் ஈடுபாடு கொண்டுள்ளனர்.
7) திருமண ஒப்பந்தத்தில் நகை முதலிய விவரங்களைக் குறிக்கும்போது ''கப்பற்பாய்'' எனக் குறிப்பது இம்மரபினர்க்கு மட்டுமுரிய சிறப்புரிமையாகும்.

---

**துணை நின்ற நூல்கள்:** 1] டாக்டர் சி. ஜெயபாரதி M.B.B.S., அருவியூர் நகரைக்கண்டு பிடித்து வெளியிட்ட குறிப்புகள் 2] பெரிய புராணம் 3] தேவாரம் 4] தென்னிந்தியக் கல்வெட்டுகள் — தொகுதி 4-6 5] புதுக்கோட்டைக் கல்வெட்டுகள் 6] Annual Report on Epigraphy 1918-1930 7] Cholas—A.K. Neelakanda Sastri 8] Pandyas — A.K. Neelakanda Sastri 9] Temple Complex — Dr. A.V. Jayachaudan 10] கட்டுரை ஆசிரியரால் படி எடுக்கப்பட்ட கல்வெட்டுகள்.

---

# 'அவன் விதி' - ஒரு பார்வை

**பாவலர்மணி. ஆ. பழநி**

திரு. மிகயீல் ஷோலகவ் அவர்களின் உணர்ச்சிப் படைப்பான 'அவன் விதி' யை ஒரு குறும் புதினம் என்பதா? சற்றே அளவிற்கதிமாக எழுதப்பட்ட சிறுகதை என்பதா? [illegible] நிகழ்ந்த போது நிலவிய சராசரி ருஷ்யக் குடிமகனின் வாழ்க்கை வரலாறு என்பதா? [illegible] அப்பெயருக்குப் பொருத்தமாகவே அமையும்.

சில கதைகள் வாழ்க்கையின் நிழலாக இருக்கும். இது [illegible] போல இருக்கலாம். அந்நிழல் அம்மலரை விடப் [illegible] மலரின் மென்மையும் மணமும் நிறமும் அந்நிழலுக்குள் [illegible] அசலாக முடிவதில்லை. ஆனால் என்ன வியப்பு! இக்கதை [illegible] மாறியிருக்கிறது. இந்த வியப்பைச் செய்தது எது? யார்? [illegible] செய்தவர் மிகயீல்ஷோலகவ்.

இக்கதைக்கு 'அவன் விதி' என்று தலைப்பிடப்பட்டுள்ளது. அவன் விதி என்றால் அந்திரேயின் தலைவிதியா? தலை விதித்தத்துவத்தை ஆழக்குழி தோண்டிப் புதைத்த ருஷ்ய மக்கள் இலக்கியத்திற்கு இப்பொருள் பொருந்தாது வேறு என்ன பொருள்? நாடு புரட்சிக் காலத்திலும் பின்னரும் புதிதாக அமைத்துக் கொண்ட விதியை—அக்கால கட்டத்தின் விதியை - விதியை எதிர்த்து வெற்றி கொண்ட மக்களின் புரட்சி விதியை எடுத்து இயம்புகிறது என்று சொல்லலாம். செர்மானியரின் சூழ்ச்சி விதிகளால் சிதறுண்டு போன அந்திரேயின் வாழ்வில் கப்பிக் கொண்ட வெறுமையைத்தலையணை நனைய அழுத துயரத்தை வான்யா என்ற சிறுவனை மகனாக ஏற்றுக் கொள்வதன் வாயிலாக இன்பமானதாக ஆக்கிக் கொள்ள அந்திரேய் தானே அமைத்துக் கொண்ட புதுவிதியை வலியுறுத்த அவன் விதி என்று தலைப்பிடப் பட்டதாகக் கொள்ள வேண்டும்.

எல்லாரையும் இழந்து அனாதையானவன் அந்திரேய். பெற்றோரை இழந்து அனாதையானவன் வான்யா. இரண்டு அனாதைகள் ஒன்றாகிப் பாசத்தை பொழிந்து கொண்டால் வாழ்க்கையில் பிடிப்பும் இன்பமும் மலரும் என்ற விதியை எடுத்து விளக்குவதனாலும் அவ்விதியை அந்திரேய் ஆக்கிக் கொள்வதனாலும் இதுவே கதையின் தலையாய குறிக்கோளாகக் காட்டப்படுவதனாலும் 'அவன் விதி' என்பதற்கு அவன் படைத்துக் கொண்டவிதி எனப் பொருள் கொள்வதே சிறப்பு.

புறநானூற்றில் உள்ள ஒரு கருத்தை இங்கு எடுத்துக் காட்டுவது பொருத்தமாக இருக்கும். 'ஒரு வீட்டில் சாப்பறை ஒலிக்கின்றது. மற்றொரு வீட்டில் மங்கல முழவு ஒலிக்கின்றது. திருமணம் புரிந்து கொண்டவர்கள் மலர் மாலைகளை அணிந்து கொள்கின்றார்கள். பிரிவுக்கு ஆளானவர்களோ அழுத கண்ணீரோடு நிற்கிறார்கள். இவ்வாறு உலகத்தைப் படைத்தவன் பண்பில்லாதவன். ஆகவே துன்பம் செறிந்த இவ்வுலக வாழ்க்கையை இன்பம் நிரம்பியதாக ஆக்கிக் கொள்பவனே உலகியல் அறிந்தவன்' என்று புறநானூறு எடுத்துக்காட்டுகின்றது.

இக்கதையில் நாம் என்ன பார்க்கிறோம்? கண்ணீர் வெள்ளத்தால் சூழப்பட்ட அந்திரேயின் வாழ்க்கைப்படகு தள்ளாடுகிறது. மூழ்கி விடுமோ? என்று நாம் அஞ்சுகிறோம். ஆனால் நெஞ்சுரம் மிக்க அந்திரேய் சிறுவன் வான்யாவைத் துடுப்பாகப் பயன்படுத்தி மகிழ்ச்சிக் கரைக்கு வாழ்க்கைப் படகை இட்டுச் செலுத்துகின்றான். ஆம் புறநானூறு கூறும் உலகியல் அறிவு வாய்ந்தவனாக அந்திரேய் கம்பீரமாக எழுந்து நிற்கின்றான். தன் உலகியல் அறிவால் புதிய விதியைப் படைத்துக் கொள்கிறான். அவ்விதி வாழ்க்கை வாழ்வதற்கே என்பது. இழப்புகள் கோடி கோடியாக எதிர் வந்தாலும் அவற்றை எல்லாம் மிதித்துக் கொண்டு முன்னேறிச் செல்லும் புதிய விதி. ஆம். அதுதான் 'அவன் விதி'.

'இன்பம் துளியளவு; துன்பமோ கடலளவு' இந்த வாக்கியத்தையே வாழ்க்கையாக்கிக் கொண்டு விட்ட ஒரு மனிதனைக் காட்டு என்று கேட்டால் நாம் தயங்காமல் அந்திரேயைக் காட்டி விடலாம். அந்த அளவுக்குத் துன்பத்தால் துளைக்கப்பட்டவன். 1922-ஆம் ஆண்டுப் பஞ்சம் அவனைக் குபானுக்குத் துரத்துகிறது. பெற்றோர்களையும் உடன் பிறந்தவர்களையும் பறித்துக் கொள்கிறது. இரண்டாவது உலகயுத்தமோ மனைவி மக்களைக் கவர்ந்து கொண்டது மட்டுமில்லாமல், குடியிருந்த வீட்டையும் தண்ணீர் தேங்கிக் கிடக்கும் குட்டையாக மாற்றி விட்டது. இது போதாதென்று அவனைச் செர்மானியரின் கைதியாக்கிச் சித்திரவதைகளுக்கு உள்ளாக்கி விட்டது. இந்தப் பாலைவன வாழ்க்கையில் ஒரு பசுஞ்சோலையை-இனிய நீரூற்றை அவன் சந்தித்தது இளைப்பாறியது உண்டு என்றால் அது இரினாவாகத்தான் இருக்க முடியும்.

இரக்கமற்ற சமுதாயச் சூழல்களால் முரட்டுத்தனத்தின் மொத்த உருவமாக மாறிவிட்ட அந்திரேயிடம் கனிவையும் அன்பையும் சுரக்கச் செய்தவள் இரீனாதான். குடிப்பதையும் தள்ளாடுவதையும் வாழ்க்கையாகக் கொண்டவனை குடும்பமென்றும், குழந்தையென்றும் நெகிழச் செய்து, வாங்கிய ஊதியம் முழுவதையும் அப்படியே தன்னிடம் கொண்டு வந்து தருமாறு செய்தது இரீனாவின் விட்டுப்பிடிக்கும் உளவியல் அணுகுமுறைதான். கல்லைப்பிசைந்து கனியாக்க முடியுமா? முடியும் என்று காட்டியவள் இரீனா. அந்திரேய் என்ற பாறைக்குள்ளிருந்து இக்கதை முழுவதும் இனிய நீரூற்று பொங்கி வழிவதை இக்கதையைப் படிப்பவர்கள் உணர்வார்கள். அந்த நீரூற்று இரீனாதான். இந்தக் கதையில் இரீனா நாலைந்து பக்கங்களில்தான் வருகின்றாள். ஆனால் கதை முழுவதும் அந்திரேயின் செயல்களில் உந்து சக்தியாக இருந்து அவளே இயக்குகிறாள் என்பதை மறக்கமுடியாது.

இரீனா சராசரியான ஒரு பெண்ணுக்குரிய அழகைக் கூடப் பெற்றவள் இல்லை. அந்திரேய் செர்மன் மேஜரைப் பற்றிக் கூறும் பொழுது 'பெண்பிள்ளையினரைப் போலப் பருத்த பின் பக்கத்தை உடையவன்' என்பான். ஆகப் பெண் பிள்ளை பருத்த பின் பக்கத்தை உடையவளாக இருப்பது அழகு என்று எண்ணுகிறான். அதே போன்று பெண் பிள்ளை எடுப்பான மார்பினை உடையவளாக இருப்பதும் அழகு என்பதை அறிவோம். இவ்விரு அழகுகளையும் ஒரு சேரக் காணவேண்டுமானால் பெண்ணைப் பக்க வாட்டிலே பார்க்க வேண்டும். இரீனாவைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது அந்திரேய் 'பக்கவாட்டில் அவளைப் பார்த்தால் அப்படிப் பிரமாதமாக ஒன்றும் காணோமே என்று தோன்றும். ஆனால் அண்ணே! நான் அவளைப் பக்க வாட்டில் பார்க்கவில்லையே! நேருக்கு நேராக அல்லவா பார்த்தேன். என் கண்களுக்கு அவளைவிட அழகி ஒருத்தி இந்த உலக முழுவதிலும் இருந்தது மில்லை; இருக்கப் போவதுமில்லை' என்று குறிப்பிடுகின்றான்.

பிரமாதமாக ஒன்று மில்லாதவள் உலகத்திலில்லாத அழகியானது எவ்வாறு? அவன் நேருக்கு நேராகப்பார்த்தது இரீனாவின் உடல் அழகை அன்று; அவள் உள்ளத்தின் அழகை: அங்கு ஊற்றெடுத்துப் பெருகி வரும் பண்பு வெள்ளத்தை, முகச்சுளிப்புச் சிறிதுமில்லாத அன்பின் முழுமையை; அரவணைப்பின் இயல்பை. அதனால்தான் அவளை விட அழகியொருத்தியுமில்லை என்று அறுதியிட்டுக் கூறுகின்றான்.

சம்பள நாளன்று குடித்து விட்டு வரும் அந்திரேயை அவள் நடத்தும் விதம்; அவள் செய்யும் பணிவிடை; எரிச்சலைத் தோற்று விக்காத எச்சரிக்கையான இளஞ்சிரிப்பு அவனுள் இருந்த மிருக குணத்தை வெளியேற்றி விடுவது மட்டுமில்லை; அவனே எல்லாம் என்று நம்பும் அளவுக்கு அவனை மாற்றி விடுகின்றன. படையில் சேர்ந்து இரயிலேறும் நேரத்தில் அவளுடைய உள்ளுணர்வு 'அந்திரேய்! நாம் இனி ஒரு போதும் இந்த உலகில் ஒருத்தரை ஒருத்தர் மீண்டும் பார்க்க மாட்டோம்' என்று வெளிப்பட்ட நேரத்தில் அவனுள் இருந்த மிருகம் அவளை எட்டித் தள்ளி விடுகிறது. அந்த 'மிருக'த்தின் ஆட்சி ஓரிரு வினாடிகள்தாம். பிறகு அவனே இந்தத் தவற்றுக்கு வருந்தி 'எனது கடைசி வாழ்நாள் வரையும், சாகும்வரையும், வாழ்வின் இறுதிக்கணம் வரையும் என்னை நான் ஒரு போதும் மன்னித்துக் கொள்ளவே மாட்டேன். அந்தக் குற்றத்திற்கு மன்னிப்பே கிடையாது என்னுள்ளத்தில் என்று கதறுகின்றான். தன்னைத்தானே மன்னித்துக்கொள்ள முடியதாவனாகத் தத்தளிக்-கின்றான். மன்னிக்க முடியாத தவற்றைப் புரிந்தவனும் அந்திரேயினுள்தான் இருக்கின்றான். மன்னிக்க முடியாத குற்றம் இது என்று குற்றம் சாட்டுபவனும் அவனுள்தான் இருக்கின்றான். என்னுடைய தவற்றை மன்னிக்க மாட்டாயா என்று இரக்கத்தோடு கேட்பவனும் அவனுள்தான் இருக்கின்றான். இது மன்னிக்கக் கூடிய தவறு அன்று என்று தீர்ப்பு வழங்குபவனும் அவனுள்தான் இருக்கின்றான். ஒரு முகங்கொண்ட அந்திரேய் பல முகங் கொண்ட அந்திரேயாக மாறியது எவ்வாறு? அங்கேதான் இரீனாவின் பண்புருவாக்கத்தைப் பார்க்கிறோம். அவளுடைய பண்பு நலன்கள் அந்திரேயிடம் இடமாற்றம் செய்யப்பட்ட விந்தையைச் சந்திக்கிறோம்.

அந்திரேயின் வாயிலாக ஷோலகவ் வெளிப்படுத்தும் நாட்டுப்பற்றும் மொழிப்பற்றும் நம்மை வியப்படையச் செய்கின்றன. செர்மன் காவல் முகாம் தலைவன் முல்லரைப் பற்றி அந்திரேய் இவ்வாறு கூறுகின்றான். 'என்னவோ வோல்கா கரையிலேயே பிறந்து வளர்ந்தவனைப் போல நமது மொழியைப் பேசுவான் தன்னால் முடிந்த வரையில் வாய்க்கு வந்தபடி எல்லாம் அவன் திட்டும்போது எங்களுக்கு அப்பாடா என்றிருக்கும். எதனால் என்கிறாயா? அந்தச் சொற்கள் நம் சொந்த மொழிபோல ஒலிக்கும். ஏதோ நம் ஊரிலிருந்து வந்த காற்றைப் போல இதமாக இருக்கும்...... அவன் அப்படித்திட்டுகிற போது நான் கண்களை மூடிக்கொண்டு மாஸ்கோ பீர்க்கடையில் தண்ணி போடுவது போல நினைத்துக் கொள்கிறேன்'.

பெருங்கோபத்தை மூட்ட வேண்டிய வசவுகள் சொந்தக் காற்றைச் சுவாசிப்பது போல மாறிவிடுகின்றன. தண்ணீர் போட்டு வரவேண்டிய போதையை வசவைத் தாங்கிய தாய் மொழியே உண்டாக்கி விடுகின்றது. தாய்மொழி ஒரு மனிதனின் வாழ்வில் எத்தகைய இடம் பெறுகிறது என்பதனைக் கூறுவதோடு மட்டும் இந்நிகழ்ச்சி முடிந்து விடவில்லை. உண்மையான தாய்மொழிப்பற்று எப்படி இருக்கும் — இருக்க வேண்டும் என்பதையும் எடுத்துக் காட்டுவதாக அமைந்துள்ளது.

இதைப் போலவே அந்திரேயின் நாட்டுப்பற்றையும் ஷோலகவ் அருமையாக எடுத்துக் காட்டுகின்றார். ஹெர்கமாண்டர் முல்லர் 'உன்னைப் புதைப்பதற்கு ஒரு கன மீட்டர் போதுமா' என்று கேட்டபோது 'எனக்கும் கண்டு மிஞ்சவும் செய்யும்' என்று விடையிறுக்கும் அந்திரேயின் குரலில் நாட்டுப் பற்றினால் ஏற்படும் துணிவின் நூறு சதவிகிதத்தையும் பார்க்கிறோம். பின்னர் முல்லர் 'ருஷ்ய இவான், செர்மானியப் படைகளின் வெற்றிக்காக வாழ்த்துக் கூறிக்குடி' என்று மதுவை நீட்டியபோது குடிக்கும் பழக்கம் உள்ளவனாக இருந்தும் 'நான் குடிப்ப-தில்லை' என்று மறுக்கும் போதும், 'எங்கள் வெற்றிக்காக வாழ்த்துக்கூறிக் குடிக்க முடியாவிட்டால் உன் சாவுக்காகக் குடி' என்று முல்லர் கூறி முடிந்தவுடன் 'வோத்கா' மதுவை இரண்டே மடக்குகளில் குடித்து விட்டுக் குவளையை வைக்கும் போதும் இரண்டாம் உலகப் போரில் செர்மனியை எப்படி ருஷ்யாவினால் வெற்றிகொள்ள முடிந்தது என்பதற்கான தெளிவான விளக்கம் நமக்குக் கிடைத்து விடுகின்றது.

போர்க் கைதியாக இருந்து செர்மானிய மேஜருக்குக் காரோட்டியாக மாறிப் போர்முனைக்கு அருகில் வந்து ருஷ்யப் படைகளின் பீரங்கி முழக்கத்தைக் கேட்ட அந்திரேய் வெளிப்படுத்தும் உணர்ச்சி மெய்சிலிர்க்க வைக்கிறது 'முதல் தடவையாக வைகறையில் நமது பீரங்கிப்படையின் முழக்கத்தைக் கேட்டேன். அந்த ஒலி கேட்டதும் எனது நெஞ்சு எப்படி அடித்துக் கொண்டது. என்பதை நீ யூகித்துக் கொள்ளலாம். உண்மையாக, அண்ணே, நான் முதன் முதலாக இரீனாவுடன் காதல் புரியத் தொடங்கின போதுகூட என் நெஞ்சு ஒரு போதும் அப்படி அடித்துக் கொண்டதில்லை' என்று தன் காதல் அனுபவத்தையும் விஞ்சிய களிப்பை அப்பீரங்கி முழக்கம் வழங்கியதாகக் கூறுகின்றான். காதலை விட உயர்ந்தது குறிக்கோள் வெற்றி என்பதையும் அவ்வெற்றியே உயர்ந்த நாட்டுப்பற்று என்பதையும் ஷோலகவ் தெளிவாகச் சித்திரித்துக் காட்டுகின்றார்.

சில நிகழ்ச்சிகளில் வெளிப்படும் உணர்வு வெளிப்பாட்டைத் துல்லியமாக எடுத்துக்காட்ட அவர் பயன்படுத்தும் உவமைகள் அவ்வுணர்ச்சிகளின் உண்மையான ஆழத்தையும் அகலத்தையும் அளந்து காட்டுவனவாக அமைந்-துள்ளன. தேர்ந்த கலைஞன்தான் இப்படிக் காட்ட முடியும். அந்தத் தேர்ச்சியை நாம் திரு. ஷோலகவிடம்

குன்றாமல் குறையாமல் காண்கிறோம். கதையுள் மூன்று உடல் நடுக்கங்கள் உவமைவாயிலாக எடுத்துக்காட்டப் படுகின்றன. முதல் நடுக்கம் அந்திரேய் போருக்குப் புறப்பட்டுச் செல்லும் வேளையில் இரயில் நிலையத்தில் அந்திரேயின் மகன் அனதோலியின் நடுக்கம். இரண்டாம் நடுக்கம் அதே இடத்தில் இரீனாவின் நடுக்கம். மூன்றாவது நடுக்கம் சிறுவன் வான்யாவின் நடுக்கம். இம்மூன்று நடுக்கங்களையும் வெளிப்படுத்தக் கையாளும் உவமைகளின் கலை நயம் நம்மை வியப்புறுத்துகின்றது.

அனதோலிய் கொஞ்சம் விவரம் தெரிந்த பையன். முழு வினைகளையும் உய்த்தறிந்து கொள்ள முடியாத பருவம். தந்தை போர் முனைக்குச் சென்றால் தன் வாழ்க்கை எவ்வாறு பாதிக்கப்படும் என்பதைச் சீர்தூக்கிப் பார்க்க முடியாத — பார்க்கத் தெரியாத நிலை. எனினும் தந்தையைப் பிரிகிறோம் என்று எண்ணியதும் அவன் உடலில் ஓர் அதிர்வு பரவுகிறது. இதனை ஷோலகவ் 'அனதோலிய் குளிரில் நடுங்குவது போலக் கொஞ்சம் நடுங்கினான்' என்கின்றார். கம்பள உடையோ, கணப்போ அந்நடுக்கத்தை மாற்றிவிடக்கூடும். புறச்சூழல்கள் என்ற கம்பளியோ தாயின் அன்புக் கணப்போ கிடைத்தால் அக்குளிர் நடுக்கம் விலகியோடி விடும். இந்த அளவினை-யுடையது தான் அவன் நடுக்கம் என்பதை வெளிப்படுத்த 'குளிரில் நடுங்குவது போல' என்ற உவமையைக் கையாளுகின்றார்.

இரீனாவின் நடுக்கம் முற்றிலும் வேறுபட்டது. வாழ்வைக் கவ்விக்குதறும் துயரங்களை எல்லாம் கண்டு தெளிந்-தவள் இரீனா. எதைப்பற்றியும் ஆழ்ந்து உள்நோக்கியறியும் ஆற்றல் உடையவள். போரினால் ஏற்படக்கூடிய அழிவுகளை முன்கூட்டியறியும் திறனுடையவள். இத்தகைய அறிவும் ஆற்றலும் தொலை நோக்கும் உடமை-யினால்தான் 'அந்திரேய் நாம் இனிமேல் இந்த உலகத்தில் ஒரு போதும் சந்திக்க மாட்டோம்' என்று உறுதியாகக் கூறினாள். இந்த உறுதி அவளுக்கு ஏற்பட்டிருக்குமானால் அவள் எப்படி நடுங்கியிருப்பாள்? ஷோலகவ் கூறுகிறார். 'அவள் உடம்பெல்லாம் பதறிற்று; மரத்தை வெட்டினால் நடுங்குமே, அது போல' என்று அடிமரத்திலே கோடரியின் வெட்டு விழுகின்றபொழுது கிளைகள், இலைகள், இலைக் காம்புகள், தளிர்கள் ஆகிய அனைத்தின் ஊடேயும் ஓர் அதிர்வு ஊடுருவிச் செல்லும். இந்த நடுக்கத்தை எந்தக் கம்பளியாலும் எந்த கணப்பினாலும் மாற்ற முடியாது. ஆம் அனதோலியின் நடுக்கம் வெறும், உடலைப் பற்றியது. சிறிதளவே மனத்தொடர்புடையது; இரீனாவின் நடுக்கம் உள்ளத்தையன்று, உயிரையே பற்றிய நடுக்கம் என்பதை வேறு படுத்திக் காட்டத்தான் இந்த உவமையைப் பயன்படுத்துகின்றார்.

சிறுவன் வான்யாவின் நடுக்கம் வேறு வகையானது. முன்னைய இரண்டும் துன்ப நடுக்கங்கள். வான்யாவின் நடுக்கம் இன்ப நடுக்கம் பெற்றோரையும் உற்றாரையும் இழந்து, அடுத்த வேளை உணவுக்கே வழியின்றிப்பிறர் முகம் பார்த்து வாழ்ந்து கொண்டிருந்த சிறுவன் வான்யாவிடம் 'நான் தானடா உன் அப்பா' என்று கூறியதும் சிறுவன் வான்யா அந்திரேயைக் கட்டிக் கொள்கின்றான். சிறுவனின் உள்ளக்களிப்பால் விளைந்த நடுக்கத்தை 'அவன் உடம்பு முழுவதும் காற்றில் புல் சிலுசிலுப்பது போல நடுங்கிற்று' என்கிறார் ஷோலகவ். காற்றினால் புல் அசைந்து நடுங்குவது புல்லின் வளர்ச்சிக்குத் தேவையான ஒன்று; நன்மை பயப்பதும் கூட. காற்றினால் புல் இன்புறுத்தப்பட்டாற் போல அந்திரேயினால் இன்புறுத்தப்பட்ட வான்யா நடுங்கினான் என்பதைத்தெளிவாக எடுத்துக் காட்டுகின்றார். இம் மூன்று நடுக்கங்களையும் நாம் ஒப்பிட்டுப் பார்த்தால் ஒரு சிறிய நிகழ்ச்சியைக்கூட ஷோலகவ் எவ்வளவு உன்னிப்பாகக் கவனிக்கிறார் என்பதையும் அவற்றைக் கலை நுணுக்கத்தோடு வெளிப் படுத்துகின்றார் என்பதையும் அறிய முடியும்.

இந்தக் கதையில் மிகையீல் ஷோலகவ் தன்னை ஒரு பாத்திரமாக்கிக் கொள்கின்றார். அந்திரேயின் வாழ்க்கை முழுவதையும் கதை வடிவில் கேட்பது அவர்தான். அந்திரேயும் வான்யாவும் அவரிடமிருந்து விடைபெற்றுச் செல்கின்றனர். சிறுவன் வான்யா தன் ரோஜாக் கைகளை ஆட்டி விடை பெறுகின்றான். 'அவ்வளவு தான் ஒருவனவிலங்கின் கூரிய நகங்கள் சுரீரென்று பாய்ந்தது போலத் துடித்துப் போனேன்' என்கிறார் ஷோலகவ் ஏன் இப்படித் துடிக்க வேண்டும்? இது தான் துடிப்புக்குக் காரணம்—

தன் பெற்றோர்களில் இருந்து தன் குடும்பம் வரை பஞ்சத்தினாலும் போரினாலும் சின்னாபின்னப்படுத்தப் பட்டதைத் துயரம் பொங்கக் கூறிக்கொண்டு வந்த அந்திரேய் சிறுவன் வான்யாவினால் தன் வாழ்வில் ஒரு புதிய அத்தியாயம் பூத்ததையும் மகிழ்ச்சியோடு கூறுகின்றான். என்றாலும் அவனுடைய உள்ளத்தில் ஒரு உறுத்தல் உள்ளது. அந்த உறுத்தலை இவ்வாறு வெளிப்படுத்துகின்றான்:

'என்னெஞ்சில் எங்கோ ஓரிடத்தில் நல்ல அடிபட்டிருக்கின்றது. அது கட முடா பண்ணுகின்றது. அதில் ஏதோ ஒரு பிஸ்டனை மாற்ற வேண்டும். அவ்வளவுதான், சில நேரங்களில் நெஞ்சில் குத்துவாளைச் செருகியது போல வலிக்கின்றது. என்றாவது ஒரு நாள் உறங்கும் போதே இறந்து மகனைக் கதிகலங்க அடித்து விடுவேனோ என்கிற அச்சம்தான் என்னை வேதனை செய்கிறது'.

'நான் இழந்தேனே, எனக்கினியவர்கள், அவர்களைக் கிட்டத்தட்ட ஒவ்வொரு நாளும் கனவிற் பார்க்கிறேன். ஒரு முள் கம்பிதான் எங்களைப் பிரிக்கின்றது. அந்த முள் கம்பியை அகற்ற முயல்கின்றேனோ இல்லையோ உடனே அவர்கள் அப்பால் போய் விடுகிறார்கள். அவர்கள் கொஞ்சம் கொஞ்சமாகக் கரைந்து மறைவது

போலத் தோன்றுகிறது. இன்னொரு வேடிக்கை என்ன தெரியுமா? பகல் நேரம் எல்லாம் மனத்தைக் கட்டுப்படுத்தி வைத்திருக்கின்றேன். ஆனால் இரவில் சில நேரங்களில் விழித்துக்கொண்டு பார்த்தால் எனது தலையணை கண்ணீரால் நனைந்து ஈரமாக இருக்கின்றது' என்று தன் உள்ளத்தை உறுத்திக் கொண்டிருக்கும் அந்தச் செய்தியை வெளிப்படுத்துகின்றான். இந்தச் செய்திகள் இப்போது கதையைக் கேட்டுக் கொண்டிருக்கும் ஷோலகவ் நினைவில் வருகின்றன. அந்தச் செய்திகள் தாம் வன விலங்கின் கூரிய நகங்களாக மாறிப்பாய்கின்றன.

கள்ளங்கபடமற்ற சின்னஞ்சிறு வான்யா இனியேனும் மகிழ்ச்சியாக வாழ்வானா? துயரவெள்ளத்தால் மொத்துண்டு கரையொதுங்கிய அந்திரேயின் வாழ்வில் மகிழ்ச்சித் தளிர் அரும்புமா? இந்தக் கேள்விகள் ஷோலகவின் உள்ளத்தில் அரும்பிய உடனேயே அவருக்குக் கண்ணீர் பொங்குகிறது. ஆனால் சாமர்த்தியமாக சிறுவன் வான்யா அறிந்து கொள்ளாதவாறு முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொள்கின்றார். இந்தக் கதை முழுவதையும் ஷோலகவ் தான் அந்திரேய் வாயிலாகச் சொல்கின்றார். ஒரு வகையில் பார்த்தால் சொல்பவரும் ஷோலகவ்தான்; கேட்பவரும் ஷோலகவ்தான் தானே படைத்த பாத்திரத்தின் வாழ்க்கைச் சோகத்தைத் தானே தாங்க முடியாதவராகத் திணறுகிறார் ஷோலகவ். கதை கூறுவோர் தம் பாத்திரங்களையும் நிகழ்ச்சிகளையும் ஓரளவு வரையறுத்துக் கொண்டே பிறகுதான் எழுதுகிறார்கள். ஆனால் சில நேரங்களில் சில பாத்திரங்கள் அவர்களுடைய வரையறுப்பையும் மீறிக் கொண்டு வளரத் தொடங்கி விடுவது உண்டு அப்படி வளருகின்ற பாத்திரங்கள் அவலப் பாத்திரங்களாக இருக்குமேயானால் அதன் வீழ்ச்சி அவலத்தில் படைப்பாளியும் சிக்கிக்கொண்டு அழுவது தவிர்க்க முடியாத தாகிவிடும்.

இங்கே அந்திரேய், வான்யா இருவரும் சேர்ந்து வாழ்ந்து மகிழ்ச்சியில் திளைப்பார்களா? பிரிந்து சென்று துயரத்தில் மூழ்குவார்களா? முடிவு செய்ய முடியாத ஒரு ஊசலாட்டமான நிலை. பெரும்பாலும் பிரிவு வெகு விரைவிலேயே இருக்கும் என்பது போலத்தான் அந்திரேயின் உட்டல் நிலையும் மனநிலையும் இருக்கின்றன. அவனுடைய கனவுகளும்கூட அதைத்தான் எடுத்துக் காட்டுகின்றன. ஆனாலும் ஷோலகவ் கூறுகின்றார் வான்யா காணாதவாறு கண்ணீரை மறைத்துக் கொண்ட ஷோலகவ் கூறுகின்றார். 'திக்கற்றுப்போன இரு ஜீவன்கள், போர் என்னும் பெரும் புயலினால் முன்பின் அறியாத பகுதிகளில் ஒதுக்கப்பட்ட இரண்டு மணல்மணிகள் அவர்களுடைய வருங்காலம் எப்படியிருக்கும்? எனக்கென்னவோ இந்த ருஷ்யன் திடமான மன உறுதி வாய்ந்த மனிதன். தன் பொறுப்பை இறுதிவரை நிறைவேற்றுவான் என்றும் இந்தப் பையன் தந்தையின் அரவணைப்பில் தாய் நாட்டின் பொருட்டுத் தேவை ஏற்பட்டால் எத்தகைய இடரையும் பொறுத்து, எந்தத் தடையினையும் கடந்து முன்னேறும் ஆற்றல் வாய்ந்த ஆண்மகனாக மலர்வான் என்றும் நம்பத்தோன்றுகிறது'

நம்பத்தோன்றுகிறதாம்; ஷோலகவ் கூறுகிறார். இந்த ஆறுதல் மொழிகளும் நம்பிக்கை வாக்கியங்களும் வாசகர்களுக்கு வழங்கப்பட்டவை என்று தானே நினைக்கிறீர்கள்! இல்லவே இல்லை. தன்னால் படைக்கப்பட்ட அந்திரேயின் மேல் பாய்ந்த அடுக்கடுக்கான துன்ப அலைகளை எல்லாம் வென்று கரையேறி அவன் வான்யாவின் பிஞ்சுக் கைகளைப் பற்றிக் கொண்டு புதுவாழ்வு மலரும் என்று நம்பிக்கையோடிருக்கின்ற வேளையில் அவன் இன்னும் நீண்ட நாள் இருப்பது எளிதில்லை என்பதனைச் சொல்ல நேர்ந்ததனால் ஏற்பட்ட துயரத்தைத் தாங்க மாட்டாத ஷோலகவ் தன்னெஞ்சிற்குச் சொல்லிய ஆறுதல் மொழிகள் தாம் அவை.

பாத்திரங்கள் அழுதால் வாசகனும் அழுவான் என்பதற்கு எத்தனையோ எடுத்துக்காட்டுகள் உள்ளன. பாத்திரங்களின் அழுகையைத் தாங்க மாட்டாமல் படைத்தவனே அழுவான் என்பதற்கு 'அவன்விதி' ஒரு நல்ல எடுத்துக்காட்டு.

# சித்தர் பரிபாஷை

புலவர். அ. பாண்டியன்

**சித்தர்** ''எந்த ஒருவனைக் கண்டவுடன் நம்முடைய குரங்கு மனம் சற்று அமைதி அடைகின்றதோ, யாரைக் கண்டபொழுது நம்முடைய கவலைகளை மறந்து ஓரளவு அமைதி அடைகின்றோமோ, யாருடன் இருக்கும் பொழுது காரணம் இல்லாமலும் ஒருவகையான ஆனந்தம் பெருக்கெடுக்கின்றதோ, யாரைக் கண்டவுடன் காணாததைக் கண்டதுபோன்ற உள்ளுணர்வு உண்டாகிறதோ அவனே சித்தன்'' என்பார் பேராசிரியர் அ.ச. ஞானசம்பந்தன் அவர்கள்.

**சித்தர் செயல்** சித்தர்கள் தம்மை உயர்த்திக் கொண்டதோடு நில்லாமல் உலகமக்களையும் உயர்த்துவதற்குப் பணிகள் பல செய்தனர். மக்களின் மன இருளைப்போக்கி ஞான ஒளிபரப்பச் சிந்தனைச் செல்வத்தை வாரிவழங்கினர். உடல் நோய்களைத் தீர்க்கும் மூலிகைகளைக் கண்டறிந்து மருந்து செய்யும் முறைகளைத் தெரிவித்து நூல்கள் இயற்றினர். கோள்களின் நிலை, காலமாறுபாடு, சுடர்களின்

தோற்றம் ஆகியவற்றை விளக்கிச் சோதிட நூல்கள் எழுதினர். ''நிறைமொழி மாந்தர்களாக'' விளங்கிய அவர்கள் மறை மொழிகளை, மந்திரம் என்ற பெயரில் வழங்கினர். மனித ஆற்றலை ஒருமைப்படுத்தவும், கூர்மையாக்கவும், வெளிப்படுத்தவும் மாந்திரிகங்களை வெளியிட்டனர். தெய்வங்களுக்கு முறைப்படி பூசைகள் செய்ய பூசைவிதிகள் பற்றிய பாடல்களைப் பாடித்தந்தனர். ஆத்மசக்தி, யோகநிலை ஆகியவற்றை விளக்கி இலக்கியம் படைத்தனர் இவையாவும் கலந்த தொகுதியே, ''சித்தர் பாடல்கள்'' என்ற பெயரைப் பெற்றுள்ளன.

**சித்தர் பாடல்கள்** சித்தர் பாடல்கள் படித்தவுடனேயே மிக எளிதில் விளங்குவன போல் தோன்றும் ஆனால் அவற்றின் உட்பொருளை — உண்மைப் பொருளைத் தெளிவாகவும், திட்ட வட்டமாகவும் அறிந்து கொள்ள முடிவதில்லை. ஏனெனில்,

1. சித்தர் பாடல்களில் குறியீடுகள், உருவகப் படிமம் ஆகியவற்றால் ஆன 'பரிபாஷைகள்' மிகுதியாக உள்ளன.

2. அகராதிகள் சொற்களுக்குக் கூறும் நேர் பொருள் அமையாமல் சுற்றிவளைத்து யூகித்து அறியுமாறு பொருள் அறியும் முறையைப் பின்பற்றிப் பாடியுள்ளனர்.

3. சித்தர் பாடல்களில் விடுகதை, புதிர், உள்ளுறை, இறைச்சி, குறிப்பு முதலியவை ஒன்றோடொன்றும் பின்னிப் பிணைந்துள்ளன.

4. சொல்லில் வெளிப்படுத்த முடியாத—சொற்கட்டுக்குள் அடங்காத உணர்ச்சி வெள்ளம், சித்தர் உள்ளத்தில் பெருக்கெடுத்துப் பீறிட்டு எழுந்துள்ளது. சொற்பொருளைக் கடந்து உணர்ச்சிநிலைக்குச் சென்று சித்தர்களின் உள்ளக்கருத்தைப் புரிந்து கொள்ளுவது கடினமான காரியமே.

5. இலக்கண இலக்கிய மரபுகளுக்கோ, சாத்திரக் கோட்பாடுகளுக்கோ, தத்துவக்கட்டுகளுக்கோ, உட்பட்டுப் பாடல்களை இயற்றவில்லை. இவை போன்ற இன்னும் பல காரணங்களால் சித்தர் பாடல்களுக்குப் பொருள் காணும் முயற்சியோ உரை எழுதும் பணியோ தோன்றி வெற்றிபெற வில்லை.

தமிழறிஞர் பேராசிரியர் ந.மு. வேங்கடசாமி ஐயா அவர்களைத் தமிழன்பர் சிலர் சித்தர் பாடல்களுக்கு உரை எழுதித் தருமாறு வேண்டினர் என்றும், அதற்கு அவர் ''அந்தப்பணி மிகவும் அரியது; அருள் உணர்வும், தெய்வ ஆற்றலும் உடையவரால் மட்டுமே அப்பணி கைகூடும்'' என்று கூறி மறுத்து விட்டார் என்றும் கூறுகின்றனர். காரணம், சித்தர் பாடல்களில் அமைந்துள்ள பரிபாஷைகளே ஆகும்.

**பரிபாஷை** சித்தர்களுக்கே உரியசிறப்பு மொழி பரிபாஷை. இதனை எல்லோராலும் எளிதில் புரிந்து கொள்ள இயலாது. மொழிப்புலமையை மட்டும் வைத்துக் கொண்டு பொருள் அறிந்து கொள்ளலாம் என்பது தவறு. இதற்கு, ஆன்மிகப் பயிற்சியோடு, சித்தர்கள் தொடர்பும் பெற்றிருத்தல் வேண்டும். அவனரு-ளாலே அவன்தாள் வணங்குதல்போல் சித்தர்களின் அருளால்தான் அவர்களது பாடல்களின் பொருள்களை அறிந்து கொள்ள முடியும்.

'பரி' என்றால், குதிரை 'பாஷை' என்றால் மொழி. குதிரை என்றால் ஓடும் குதிரை. ஓடும் குதிரை பிராணவாபு அதாவது பிராணவாயுவாகிய மூச்சு. இவ்வுயிர் 'மூச்சு—வாசி' எனவே பரி என்பது வாசி. பரிபாஷை என்பது, வாசியோகம் தொடர்பான நுட்பமான செய்திகளைக் குறிப்பிடும் மறைவான சொற்களாகும். அரிய இரகசியப் பொருளான ஞானச் செய்திகளை எல்லோருக்கும் வெளிப்படையாக எடுத்தியம்பல் கூடாது. அது எதிர் விளைவுகளுக்கும் வாய்ப்பாகும். மெஞ்ஞான அனுபவங்கள் முதிர்ச்சி அடைந்த பின்னர், தக்கோரால் தரம் தெரிந்து திறம் அறிந்து நேர்முகமாக விளங்கப்பட வேண்டும் என்ற நல்ல நோக்கத்துடன்தான் அரிய பல கருத்துக் கருவூலங்களை பரிபாஷையில் பொதிந்து வைத்துள்ளனர். எனவே இங்கு பரிபாஷை என்பதற்கு ''ஆன்மிக மறைமொழி'' என்று பொருள் கொள்ள வேண்டும். பரிபாஷை உத்தியை, சித்தர்கள் மருத்துவம், தத்துவம் ஆகிய துறைகளில் மிகுதியும் கையாண்டுள்ளனர்.

**மருத்துவம்** ஒரு மருந்தினை உருவாக்கப் பயன்படுத்தும் மூலிகைச் சாற்றினைக் கூறும்பொழுது, ''இரு குரங்கின் கைச்சாறு'' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. வெளிப்படையாகப் பொருள் காண்-பவர்கள், இரண்டு குரங்குகளின் கைகளை நசுக்கி எடுத்த நிணச்சாறு என்று தவறாகக் காண்பர். குரங்கிற்கு ''முசு'' என்று ஒரு பெயர் உண்டு. இரு குரங்கு — முசுமுசு இதனுடன் கைச்சாறு என்பதனைக் கூட்டினால் ''முசுமுசுக்கை'' என்னும் மூலிகையைக் கொண்டு ஆக்கும் சாறு என்று அறிதல் வேண்டும்.

**காய்ச்சல்**

''கண்ணன் நடுமுக்கன் கரியமால் தன்தொடையும்
நன்னு மலையாளி நாகரமும் பண்ணவே
திக்குக் கசாயம் இட்டுக் கொட
பொக்குப் பொக்கென்ற சுரம் போம்''

கண்ணன் — மிளகு. நடுமுக்கன் — சுக்கு. கரியமால் தொடை — துளசிச் செடித்தண்டு நன்னு மலையாளி — நல்ல திப்பிலி நாகரம் — அதிமதுரம், (இவைகளை) பண்ணவே நன்றாகத்தட்டி. திக்குக் கசாயம் இட்டு — எட்டில்

ஒருபாகமாகச் சுண்டவைத்துக் கொட — காலை மாலை குடிக்கக் கொடுத்தால், — பொக்குப் பொக்கென்ற சுரம் போம் — இருமலோடு கூடிய கடுமையான முறைக் காய்ச்சலும் முழுமையாய் நீங்கிப் போகும்.

**காலரா**

''ஆனைக் கன்றின் ஒரு பிடியும்
அரச விரோதி இளம்பிஞ்சும்
கானக் குதிரை இளந்தோலும்
கையில் கனிந்த கனிப் பருப்பும்
தாயைக் கொன்ற பூச்சாற்றில்
தானே அரைத்து உருட்டிடவே''

இதன் பொருள்:- அத்திமரத்தின் இளஞ்செடித்தழை ஒருபிடி, கோவைச் செடியின் பிஞ்சு ஒருபிடி காணம் என்ற 'கொள்ளு'வை கொட்டியின் நீக்கிய மேல்தோல் ஒருபிடி, நெல்லிக்காயின் உள்ளே இருக்கும் பருப்பு ஒருபிடி, ஆகிய இவற்றை வாழைப் பூச்சாறு இட்டு நன்றாக மிளகுபதமாக அரைத்து உருட்டி, ஐந்து நிமிடங்களுக்கு ஒரு மாத்திரையாக வாயில் போட்டு சாப்பிட்டு வந்தால், காலரா நோய் கொஞ்ச நேரத்தில் குணமாகும்.

**தத்துவம்**

''வழுதலை வித்திட பாகல் முளைத்தது
புழுதியை தோண்டினேன் பூசணி பூத்தது
தொழுதுகொண் டோடினர் தோட்டத்துக் குடிகள்
முழுதும் பழுத்தது வாழைக் கனியே''.

இப்பாடற்கு வெளிப்படையான பொருள்:-
கத்தரிக்காயை விதைத்தேன், பாகற்காய் முளைத்தது. புழுதியைத் தோண்டினேன், பூசணிபூத்தது. இதைக்கண்டு தோட்டத்துக் குடிகள் தொழுது ஓடினர். வாழைக்கனி பழுத்தது என்பதாகும். ஆனால் இதன் பரிபாஷைப் பொருள்:

| | |
|---|---|
| வழுதலை வித்திட | — யோகப் பயிற்சி செய்ய |
| பாகல் முளைத்தது | — வைராக்கியம் தோன்றியது |
| புழுதியைத் தோண்டினேன் | — தத்துவ ஆராய்ச்சி செய்தேன் (அகற்றினேன்) |
| பூசணி பூத்தது | — சிவத்தன்மை எய்தியது |
| தோட்டத்துக்குடிகள் | — இந்திரியங்கள் முதலியன |
| தொழுது கொண்டோடினர் | — (அச்சிவத்தின் தன்மை கண்டு) அஞ்சி அகன்றனர். |
| வாழைக்கனி | — ஆன்மலாபம் |
| முழுதும் பழுத்தது | — முழுதும் முற்றிக் கனிந்தது. |

இவ்வரிய தத்துவப் பொருளை எளிய சொற்களில் குறிக்கும் முறை குறிப்பிடத்தக்க ஒன்றாகும்.

**திறவு கோல்கள்**

''வாழைப் பழந்தின்றால் வாய்நோகு மென்று சொல்லத்
தாழைப் பழந்தின்று சாவெனக்கு வந்ததடி

(அழுகுணிச்சித்தர்)

''நாட்டுக்கா லிரண்டுவிட்டு நடுவுக்கா லூடுபோய்
ஆட்டுக்கா லிரண்டினுள்ளே யமர்ந்திருப்ப தெக்காலம்

(பத்திரகிரியார் புலம்பல்—143)

''வெட்டாத சக்கரம் பேசாத மந்திரம் வேறொருவர்க்
கெட்டாத புட்ப மிறையாத தீர்த்த மினிமுடிந்து
கட்டாத லிங்கங் கருதாத நெஞ்சங் கருத்தினுள்ளே
முட்டாத பூசை யன்றோ குருநாதன் மொழிந்ததுவே''

(பட்டினத்தார்—50)

வாழைப்பழம், தாழைப்பழம்
நாட்டுக்கால், நடுவுக்கால், ஆட்டுக்கால்
வெட்டாத சக்கரம், பேசாத மந்திரம்
எட்டாத புட்பம், இறையாத தீர்த்தம்
கட்டாத லிங்கம், முட்டாத பூசை

இந்தச் சின்னச்சின்ன சொற்களெல்லாம் சித்தர்களின் பரிபாஷைகளே! சித்தர்கள் நமக்காகச் சேமித்து வைத்திருக்கும் — செல்வப் பெட்டகத்தின் கருத்துக்கருவூலங்களின் திறவுகோல்களே இந்தப் பரிபாஷைகள்தாம்.

**வாழ்க சித்தராய்**

தமிழ் இலக்கியங்களில், மற்ற எந்தத்துறை இலக்கியங்களுக்கும் இல்லாத தனிச் சிறப்பு ஒன்று உண்டென்றால், அது சித்தர்கள் பயன்படுத்தியுள்ள மறைபொருள் எனும் பரிபாஷையே ஆகும். பரிபாஷைகளின் உண்மைப் பொருளை உணர்ந்து மகிழ்ந்து, 'சித்தர் நெறியே வாழ்க்கை நெறி' யெனத்தெரிந்து வாழ்க! தெளிந்து வாழ்க! சிறந்து வாழ்க! சித்தராய் வாழ்க!

**பார்வை நூல்கள்:** சித்தர்கள் ஓர் அறிமுகம். சித்தர் சிந்தனைகள். சித்தர்களும் சமூகப்பார்வையும். சித்தர் சிவவாக்கியர் — தனது ஆய்வேடு. சித்தர் கண்ட செம்பொருள். திருமந்திர ஆராய்ச்சி. பதினெண் சித்தர் ஞானக் கோவை.

# அடிகளார் சொல்கிறார்...

பேராசான் ஜீவாவால் 'செங்காவிச்சிங்கம்' என்றும், 'இந்திய தேசிய உணர்ச்சிக்கு வித்திட்டவர்' என்றும்போற்றப்பட்ட சுவாமி விவேகானந்தருக்குப் பின்னர் மதத்தைச்சமூக முன்னேற்றத்திற்கு ஒரு கருவியாகப்பயன்படுத்தி வருபவரும் — பிற மடாதிபதிகளெல்லாம் மடத்தையும், மதத்தையும் கட்டிக் கொண்டு தங்கள் வாழ்நாட்களை வீணே கழித்துக் கொண்டிருக்கும்போது அறிவியல், தொழில் நுட்ப முன்னேற்றத்தைப் பயன்படுத்தி குன்றக்குடி கிராமத்திலும், சுற்றியுள்ள கிராமங்களிலும் ஒரு செழுமைப்புரட்சியை முன்னெடுத்துச்செல்பவரும்—மதக்கலவரங்கள், சாதிக் கலவரங்கள் எங்கெங்கு நடந்தாலும், அங்கங்கு 'பிரசன்னமாகி' மோதிக்கொண்டிருக்கும் மக்களிடையே சகிப்புத்தன்மையையும், சகோதரத்துவத்தையும், சமாதானத்தையும்உருவாக்கப்பாடுபடுபவருமான தவத்திரு. குன்றக்குடி அடிகளார் மதச்சார்பின்மை குறித்து FRONT LINE எனும் ஆங்கில ஏட்டிற்கு அளித்த பேட்டியிலிருந்து சில பகுதிகளை தமிழாக்கி இங்கே தருகிறோம்.

❊ செக்யூலரிசம் (*SECULARISM*) எனும் ஆங்கிலப் பதத்திற்கு 'மதத்தோடு' உறவற்றிருத்தல் என்பதே தக்க விளக்கமாகும் இதைச் சிலர் 'சகிப்புத் தன்மை' என்றும் கூறுவர். அவ்வாறு கூறுவதிலும் எனக்கு உடன் பாடில்லை. சகிப்புத்தன்மை என்பது எதிர்த்து நிற்கத் திராணியில்லாத போது எழும் இயல்பாகும். ஆனால், நாம் 'செக்யூலரிசம்' என்பதைப் பின்வரும் வகையில பயன்படுத்துகிறோம்:

'செக்யூலரிசம்' என்பது —பிறமதங்கள் பால் வெறுப்புணர்ச்சி கொள்ளலாகாது என்பது மட்டுமின்றி 'பிறமதங்களை ஏற்றுக்கொள்வதும், அம்மதங்களிலும் சிறந்த, போற்றத்தக்க குணங்கள் உள்ளன என்று நம்புவதுமாகும். இந்து மதத்தில், இவ்வகையான 'செக்யூலரிசம்' நீண்ட காலமாகவே ஒரு பண்பாடாக வளர்ந்து வந்திருக்கிறது. சீக்கிய மதத்தை உருவாக்கிய குருநானக், கபீர்தாசர், விவேகானந்தர் தமிழ் நாட்டைச் சேர்ந்த இராமலிங்கர், தாயுமானவர் இவர்களை எடுத்துக்கொள்ளுங்களேன் இவர்களனைவரும் 'செக்யூலரிஸ்டுகளே' தீவிரசைவதுறவியான திருநாவுக்கரசர்கூட ''அறுவகைச்சமயத்துஅவரவரைத்தோற்றுந் தகையன''—என்றுஏற்றுக்கொள்கிறார். பல நூற்றாண்டுகளுக்குமுன் பாகமாணிக்கவாசகர், '' தென்னாடுடைய சிவனேபோற்றிஎந்நாட்டவர்க்கும்இறைவா போற்றி'' என்றுபாடியுள்ளார். இங்ஙனம், 'செக்யூலரிசம்', நமது பாடாகவும், நாகரிகமாகவும் இருந்து வருகிறது. இத்தகைய 'செக்யூலரிசத்தை' இந்தியாவில் நீண்ட காலமாகவே நாம் வளர்த்து வருகிறோம். ஆனால் சமீப காலங்களில் அரசியல், சமூகப்பொருளாதாரப் போட்டிகளின் காரணமாக, இக்கொள்கைக்குக்குந்தகம் ஏற்பட்டுள்ளது. இது நன்றன்று

❊ இந்தியா போன்ற நாடுகளில் பொதுவாழ்வில் மதம் தலையிடவே கூடாது. மசூதிகள், சர்ச்சுகள், கோவில்கள் இன்ன பிற வழிபாட்டுத்தலங்கள், ஆகிய வற்றோடு மதம் நின்றுவிட வேண்டும். மதம் தெருவுக்கு வரலாகாது. இது ஒரு உன்னதமான கொள்கையாகும். இதைத்தான் காந்திஜி சொல்லியிருக்கிறார்.

❊ நமது நாட்டில், வயல்களிலிருந்தும் சிலைகள் கண்டெடுக்கப்பட்டுள்ளன. பஞ்சலோகச் சிலைகளும் கூடக் கண்டெடுக்கப்பட்டுள்ளன. ஆனால் அந்த இடத்தில் ஒரு கோவில் இருந்து அது இடிக்கப்பட்டது என்று கூறுவதில்லை. எங்காவது சிலைகள் கண்டெடுக்கப்பட்டால் அங்கே கோவிலிருந்தது என்று கூற முடியாது. அயோத்தியில் கிடைத்த தூண்களில் இந்து அடையாளங்கள் இருந்ததாக அவர்கள் கூறுகிறார்கள். கோவிலை இடித்தவர்கள் இந்துப்பண்பாட்டின்மீது ஆர்வமுடையவர்களாக இருந்ததால் தான் இந்தத்தூண்களை விட்டு விட்டார்கள் என்று நாம் கூறினால் நீங்கள் ஏற்றுக் கொள்வீர்களோ, என்னவோ? உலகத்தில் பிறமதங்களை இந்துமதத்தின் தூண்களே தாங்கி நிற்கின்றன. வேறெந்த மதமும் இவ்வாறு செய்வதில்லை. ஆகவே, இந்துத் தூண்களின்மேல் ஒரு மசூதி நிற்கிறது என்றால் அது குறித்து ஒரு இந்துவுக்குப்பெருமை தானே...! மேலும், உலகமனைத்தையும் தாங்குவதற்குரிய போதிய வலுவோடு இந்து மதம் திகழ்கிறது என்று பெருமிதத்தோடு சொல்லிக்கொள்ளலாம் என்று கூட நமக்குத் தோன்றுகிறது. அவ்வாறு சொல்வதில் தவறு ஏதும் இருப்பதாக நாம் கருதவில்லை. இது நமது கருத்து. இரண்டாவதாக, பாபர் தனது உயிலில், இந்து வழிபாட்டுத்தலங்களுக்கு இடையூறு செய்யவேண்டாம் என்றும், இந்துக்களைக் கொடுமைக் குள்ளாக்க வேண்டாம் என்றும் தன் மகனுக்கு அறிவுறுத்தி உள்ளார்.

இவ்வாறாகப் பாபரும், அக்பரும் ஒரு பரந்த மதக் கண்ணோட்டமுடையவர்களாக இருந்திருக்கிறார்கள். அவர்கள் மதச்சார்பற்ற பிடிவாத குணமற்ற ஆட்சியாளர்களாக இருந்திருக்கிறார்கள் என்று வரலாறு நிறுவுகிறது. ஆகவே, அவர்களது வாழ்நாட்களில் ஒரு கோவிலை இடித்து விட்டு, அந்த இடத்தில் மசூதியைக் கட்டுவதான ஒரு செயல் நடந்திருக்கு மென்று நம்மால் நம்ப முடியவில்லை.

நன்றி: **Front Line**



# ஸையத் ஹஸிம் அலி சொல்கிறார்...

ஹஸ்மெனியா, அலிகார் பல்கலைக்கழகங்களின் துணைவேந்தராகப் பணி புரிந்தவர் ஸையத் ஹஸிம் அலி. இவர் சிகாகோவில், இந்திய முஸ்லீம்கள் ஆலோசனைக்குழு நடத்திய கருத்தரங்கில் வாசித்த உரையிலிருந்து சில பகுதிகளை இங்கு தருகிறோம்:-

❋ இந்தியாவில் ஊழல் மலிந்த, சீர்கேடுற்ற, ஒழுக்கமற்ற, நேர்மையற்ற, குறுகிய ஜாதி எண்ணமுடைய அரசியல் ஏதேனும் ஒரு மதத்தோடு இணைக்கப்பட்டு, பெருமளவுக்கு மதம் அவமதிக்கப்பட்டுள்ளதால் நான் புனித நூல்களிலிருந்து மேற்கோள்கள்தரப்போவதில்லை. "நாங்கள்", "அவர்கள்" என்று சிந்திப்பது, பிரச்னைகளைத் தேசிய மட்டத்தில் வைத்துப் பார்ப்பதை விடுத்து வரலாற்றுக்கு முந்திய காட்டுமிராண்டிகளின் பார்வையில் வைத்துப்பார்க்கும் அளவுக்கு இந்தியாவைக் கீழிறக்கி இருப்பதால் நான் "அவர்கள்" "நாங்கள்" என்ற சொற்களைக்கையாளப் போவதில்லை. முஸ்லீம்கள், கல்வி அறிவு அற்றவர்கள், உணர்ச்சி மயமானவர்கள், சண்டைக்காரர்கள், நட்பற்றவர்கள், அதீதமான ஆதிக்க மனப்பான்மையினர் என்று பிறர் முத்திரை குத்தும்போது, நான் கோபப்பட்டுள்ளேன் என்பதால் நான் பல்வேறு மதத்தினரை இவர்கள் இத்தன்மையர் என்று முத்திரை குத்தப்போவதில்லை. பல்வேறு மட்டங்களில் அரசில் பணியாற்றிய நீண்ட அனுபவம் எனக்குண்டு. நான் எல்லா மதங்களையும் சார்ந்த மக்களோடு நெருக்கமாகப்பழகியுள்ளேன். ஆகவே எந்த மதத்தைச் சார்ந்தவரையும் இவர் இத்தன்மையர் என்று முத்திரை குத்துவது முற்றிலும் சரியானதன்று என்று கண்டுள்ளேன். எல்லா மதத்தினரிடையேயும் மானுடத்தின் உன்னதத்தையும் நான்தரிசித்து இருக்கிறேன்; பூமியின் கசடுகளையும் நான் கண்டிருக்கிறேன்.....

❋ இந்தியாவில் நிகழும் மோசமான செயல்களுக்கெல்லாம் முஸ்லீம்களைக் குற்றம் சொல்வதை நான் எங்ஙனம் ஏற்றுக் கொள்வதில்லையோ அங்ஙனமே முஸ்லீம்களுக்கு ஏற்படும் எல்லாப்பிரச்னைகளுக்கும் இந்துக்களைக்குற்றம் சுமத்தும் வழக்கமான பாணியை நான் கைக்கொள்ளப் போவதில்லை நான் முதலில் முஸ்லீமா, அல்லது இந்தியனா என்ற மூடத்தனமான கேள்விகளுக்குள் செல்லாமல் ஒரு முஸ்லீம் என்றும் இந்தியக்குடிமகன் என்றும் நின்று பேசப்போகிறேன்...

❋ சுய ஆய்வு, சுய விமர்சனம் என்ற முறையில் பிரச்னையை அணுகுவதால் ஏற்படும் அபாயம் என்னவென்று நான் அறிவேன். ஓர் இந்து முஸ்லீமையோ, ஒரு முஸ்லீம் இந்துவையோ விமர்சித்தால் அவர் மதவாதி எனப்படுவார் அவர்கள் தம்மையே விமர்சித்துக்கொண்டால் முஸ்லீம் ஆதரவாளர், இந்து ஆதரவாளர், காட்டிக் கொடுப்பவர், தேசிய முஸ்லீம் சிறுபான்மையினர் வாக்குக்கு வலை விரிப்பவர். இத்யாதிப்பட்டங்களுக்கெல்லாம் ஆளாவர். முஸ்லீம்கள் தங்களது கொள்கைகளை [ஏதும் இருந்தால்] ஈவு இரக்கமின்றி நேர்மையுடன் ஆய்வு செய்யவில்லை என்றால் இந்நோய் தீராது என்று ஒரு முஸ்லீம் என்கிற முறையில் நான் உணர்கிறேன். மதக்கலவரங்களின் போது இந்துக்களின் தவறான செய்கைகளைக் கண்டித்து ஏராளமான இந்துப் பத்திரிகையாளர்கள், எழுத்தாளர்கள், நீதிபதிகள் எழுதினர். இத்தகைய விமர்சனங்கள், முஸ்லீம்களின் தவறான செய்கைகளைக் கண்டித்து முஸ்லீம்களால் சொற்ப அளவே எழுதப்பட்டன. இந்திய ஜனாதிபதியிலிருந்து சாதாரண மனிதர்வரை முஸ்லீம்களின் பண்டிகைகளில் கலந்துகொண்டு அவர்களை மகிழ்ச்சிப்படுத்துகின்றனர். இவ்வாறு இந்துப்பண்டிகைகளில் முஸ்லீம்கள் கலந்து கொள்வது என்பது அரிதே. சிறுபான்மையினர் மனப்பான்மை அல்லது விலகி நிற்கும் மனப்பான்மை முஸ்லீம்களை ஒரு கூண்டிற்குள் தள்ளிவிட்டது...

❋ ஒவ்வொருவரும் எந்த அளவுக்கு மதவாதிகள் என்பதைக் கண்டறிய எளிய சோதனைகளே போதுமானது. இச்சோதனைகள் எம்மதத்தினருக்கும் பொருந்தக் கூடியவை.

1] கவாஸ்கர் செஞ்சுரி அடித்தால் மகிழ்வீர்களா? அல்லது அசாருதீன் அடித்தாலா?

2] விபத்துக்குள்ளானவர் அல்லது கலகத்தால் பாதிக்கப்பட்டவர் தம் மதத்தினர் என்று அறிந்தபின் தான் வருந்துவீர்களா?

3] உங்கள் அமைப்பில் புதிதாக ஒருவர் இணையும் போது அவர் உங்கள் மதத்தவர் இல்லை என்றால் அதற்காக மகிழ்ச்சியற்றிருப்பீர்களா?

அப்படியானால் நீங்கள் ஒரு மதவாதி.

❋ சிறுபான்மையினர் நலன்களைப் பாதுகாப்பதிலும், தனித்துவத்தைக் காத்துக் கொள்வதிலும் முஸ்லீம் தலைவர்கள் முனைந்து செயல்படுகின்றனர். இதனால் இந்துமதவாதிகள் முஸ்லீம்கள் பிரிவினைவாதிகள் என்றும் சட்டத்தை மதியாதவர்கள் என்றும் கூற இடமுண்டாகிறது. இந்தியாவைக் கூறுபோட்டவர்கள் என்று அவர்கள் முஸ்லீம்களைப்பழிக்கின்றனர். ஆனால், ஒரே மதத்தைச் சேர்ந்த மக்கள் தங்களது மொழிகள் வேறுபடும்போது ஒன்றாக வாழ விரும்பாமையால் இந்தியாவிலும், பாகிஸ்தானிலும் பல பிரிவினைகள் ஏற்பட்டுள்ளன என்பதை அவர்கள் மறந்து விடுகின்றனர். தெலிங்கானா, ராயலசீமா, விதர்பா, கிழக்கு உத்தரப்பிரதேசம் போன்ற பகுதிகளில் வாழும் மக்கள் தமக்கு நீதி கிட்டவில்லை என்று உணர்வதால் மொழிகூட இணைப்பு சக்தி இல்லை என்பது நிருபணமாகி உள்ளது.

❋ முஸ்லீம்கள் இந்தியக் குடிமக்கள். ஒவ்வொரு குடிமகனும் தேசத்திற்குப் பணிவுடையவர்களாக இருக்கவேண்டும் என எதிர்பார்க்கப் படுகின்றனர். முஸ்லீம்கள் இந்திய அரசியல் சாசனத்தைப் படிக்க வேண்டும். இஸ்லாமியக் கொள்கைகளான சமத்துவம், சமூகநீதி, பொருளாதார நீதி, நீதித்துறைச்சுதந்திரம் போன்றவை ஏற்கனவே அதில் இடம் பெற்றிருப்பதை அறிய வேண்டும். இஸ்லாமிய நாடுகளின் சாசனங்களோடு ஒப்புநோக்கி அந்நாடுகளில் எல்லாக்குடி மக்களுக்கும் வழங்கப்பட்டுள்ள உரிமைகளை நேர்மையுடன் ஆராயவேண்டும்.

❋ எல்லா நவ இந்தியர்களும் இந்து. முஸ்லீம், கிறிஸ்தவப் பண்பாடுகளின் கூட்டுக்கலப்பின் பிரதி நிதிகளாக விளங்குகின்றனர். ஒன்றாக இருந்து உண்ணுதல் கைகுலுக்குதல் போன்றவை இந்துப் பண்பாட்டுக்கூறுகள் அல்ல. இந்தக் கூட்டுக்கலப்பே நமது பெருஞ்சொத்து. வெறுப்புணர்வைப் பரப்பும், வன்முறையைப் போதிக்கும் குறுகிய எண்ணமுடைய மதவாதிகளைக் குறித்து இந்துக்கள் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். மிகப் பெரும்பான்மை இந்துக்கள் கடவுள் பக்தியும் சகிப்புத்தன்மையும் உடையவர்களே.

❋ குர்—ஆனின் படி ஒரே கடவுள், நீதி மதிப்பு ஓங்கும் அமைப்புகுறித்த தனது செய்தியை, அந்தந்தப் பகுதி மக்களின் மொழியில் பேசும் தூதர்களின் மூலம் அனைத்து மக்களும் அறியச்செய்தார். கடவுளைப் பணிபவர்கள், பணியாதவர்கள் என்றுதான் மக்களைக் குர்-ஆன் பாகுபடுத்துகிறது. உலகில் முன்னரேஉள்ள புனித நூல்களிடமும் முந்தைய போதகர்களிடமும் ஒரு முஸ்லீம் நம்பிக்கை கொள்ள வேண்டும்.. குர்-ஆனின் இப்போதனை ஒதுக்கப்பட்டு வருகிறது.

❋ இந்தியாவில் உள்ள புனித நூல்களை ஏற்கவும் மதிக்கவும் மறுப்பது, பிறமதத்தவரை 'காபிர்கள்' என்பது போன்ற போக்குகளால் முஸ்லீம்களுக்கு மகத்தான தீங்குகள் உண்டாகின்றன. இப்போக்குகள் குர்-ஆனில் போதிக்கப்படவில்லை.

*நன்றி:* **New Thinking Communist**



# பாரதியார் சொல்கிறார்...

நாம் பாரத புத்திரர்கள், ஆரியர்கள் ஹிந்துக்களும் மஹமதியர்களும் கலந்த மஹாஜாதி. நம்மில் 'ஹிந்து தர்மம்' என்று வழங்கப்படும் ஸநாதன தர்மத்தைச் சேர்ந்தவர்களே பெரும்பகுதி, ஓர் சிறு பகுதி மகமதியர். இவர்களும் மதக்கொள்கைமட்டில் அரபி தேசத்திற் பிறந்த மஹமதின் மார்க்கத்தை அனுசரிப்பவர்களாயினும் ஜாதியில் நம்மவர்களே; நம்முடன் இரத்தக் கலப்புடையவர்கள். இவர்களில் பெரும்பான்மையோர் அதிஸமீப காலத்திலேதான் ஸநாதன தர்மத்தைக் கைவிட்டு மஹமதிய மார்க்கத்திலே சேர்ந்தனர். ஹிந்துக்களிலும் மஹமதியர்களிலும் கல்விச் செருக்கில்லாதவர்கள் இப்போது கூட பரஸ்பரம் ஸகோதர உணர்ச்சியுடன் கூடிவாழ்கின்றார்கள். ஸநாதன தர்மத்தவர்களிலே படித்தும் விவேகமில்லாத சிலர்தான் மஹமதியர்களை மிலேச்சர் என்கிறார்கள். இவர்கள் மிலேச்சர் என்ற பதத்தின் உண்மைப்பொருள் அறியாதவர்கள். இங்கிலீஷ் படித்த ஓரிரண்டு மஹமதியர்கள் நேற்றுத்தான் இங்கிலாந்திலிருந்து அரபி தேசத்தின் வழியாக வந்திறங்கியவர்கள் போல நடித்துக் கொள்கிறார்கள். இவ்விரு திறத்தினரும் பாரத மஹாஜாதி என்ற நன்செயிலே தோன்றியிருக்கும் களைப் பூண்டுகள்.

# முன்னோர்கள் முட்டாள்களா?

**R.K. சுந்தரராசன்**

ஓஸோன் திரை கிழிகிறது; சுற்றுச் சூழல் மாசு படுத்தப்படுகிறது; எதிர் காலத்தில் பூமி வாழத்தகுந்த கோளமாக இருக்குமா? என்று உலகம் முழுதும் கேள்விகள் எழுப்பப்பட்டு சுற்றுச் சூழலைப்பாதுகாக்க வேண்டும்; இயற்கையோடு இயைந்த வாழ்வு வாழ வேண்டும் என்ற எண்ணம் தலையெடுத்து வருகிற காலமிது.

நம்நாட்டில் இயற்கையோடு இயைந்த வாழ்வு வாழப் பட்டு வந்தது. ஆனால் இன்று நம் முன்னோர்கள் காட்டிய வழிமுறைகளைச் சிறிதும் நாம் நினைப்பதே இல்லை. ஓரிருவர் அங்கொன்றும் இங்கொன்றுமாகக் கடைப்பிடித்தால் நவநாகரீக நச்சுப்பிசாசுகளின் ஏளன நையாண்டிப் பேச்சுக்குப் பயந்து, முன்னோர் காட்டிய உணவு முறைகளைக் கூட மாற்றி வருகின்றனர். "நீர் கருக்கி, நெய்யுருக்கி, மோர் பெருக்கி" என்று அன்றே சொன்னதை எண்ணிப் பார்ப்பதே இல்லை தம் புஞ்சையில் விளைந்த கேழ்வரகு, கம்பு விற்று பூஸ்ட், மால்ட்டோவா வாங்கும் விவசாயக்குடும்பங்கள் பல உண்டு.

வீட்டில் யாருக்கேனும் நீர்க்கடுக்கிறது என்றால் உடனே டாக்டரிடம் போக முற்படுகின்றனர். வீட்டி-லுள்ள பெரியவர்கள் வாயில் வெந்தயத்தைப் போட்டு நீராகாரத்தை வயிறு முட்டக்குடி, கால் விரலில் சுண்ணாம்பைப் போடு என்றால் யாரும் கேட்ப-தில்லை. பட்டறிவால் உருவாக்கிய நல்ல பழக்க வழக்கங்களை ஏற்க மறுக்கும் இன்றைய தலை-முறையினர், முன்னோர்களை முட்டாள்களாகவே எண்ணி விடுகின்றனர்.

பட்டறிவால் உயர்ந்த நம் முன்னோர்கள் கடைபிடித்த சில வாழ்க்கை முறைகளைப் பின்பற்றினால் நன்மை உண்டாகும். வீடுகளைச் சுற்றியும், கோவில் நந்த-வனங்களிலும் ஊர்களைச் சுற்றியும் அவர்கள் பல வகைத்தாவரங்களை வளர்த்ததன் மூலமாக—அந்தத் தாவரங்களின் இலைகள் வளி மண்டலத்திலுள்ள கார்பன்-டை-ஆக்ஸைடை உறிஞ்சி சூரிய ஒளியில் ஸ்டார்ச்சு தயாரித்ததால் - சுற்றுப்புறத்தூய்மை காத்-தனர்;குடியிருப்புப்பகுதிகளைச் சுற்றிமுருங்கை,அகத்தி, பசலை,லட்சகொட்டைக்கீரை அரைக்கீரை, வெந்தயம், மல்லி, முளைக்கீரை போன்ற கீரை வகைகளை வளர்த்தனர். இவை உணவாகவும் மருந்தாகவும் பயன்பட்டன. சோற்றுக் கற்றாழையும் விளக்-கெண்ணையும் கண்ணுக்கு நல்ல மருந்தாகப் பயன் பட்டன. எண்ணெய் தேய்த்துக் குளித்து விட்டு வெந்தயக்களி, வெள்ளப்பூடு பால் கஞ்சி சாப்பிட்டோ, அல்லது பூடு, இஞ்சி இட்ட எலுமிச்சஞ்சாறு குடித்தோ உடல் சூட்டைத்தணித்தனர். குழந்தைகளை எண்ணெய் தேய்த்துக்குளிப்பாட்டி அன்று தூதுவளை வேப்பிலை, கண்டங்கத்திரிக்காய்இலை, தும்பைஇலை இவற்றில் ஏதாவது ஒன்றை விளக்கெண்ணையில் வேகவைத்துப் புகட்டி குழந்தைகளின் வயிற்றுமப்பு, மாந்தத்தைப் போக்கினர். எண்ணெய் தேய்த்துக் குளிப்பதால் சூரிய ஒளிபட்டு, எர்க்காஸ்டிரால் உதவி யால் வைட்டமின் டி உண்டாகிறது என்று இன்று கூறப்படுகிறது. அந்நாட்களில் குழந்தைகட்கு எண்ணெய் தேய்த்து இளம் வெயிலில் சிறிது நேரம் போட்டு எடுத்துப் பின்னர் குளிப்பாட்டும் வழக்கம் இருந்தது. இப்படி இயற்கையே, உணவே மருந்தாகப் பயன்பட்டு வந்தது. மேலும் சில தாவரங்களும் அவற்றின் மருத்துவக்குணங்களும் பின்வருமாறு:

1) வாழைத்தண்டு, நெருஞ்சி,மல்லி, நன்னாரி,சீரகம், வெள்ளரி விதை-சிறுநீர்க்கோளாறு.
2) சுண்டை வற்றல், நெல்லி வற்றல்-குடல் சுவர் பலப்படல், தாது உப்புக்கள், வைட்டமின் குறை-யைப்போக்குதல்.
3) வேம்பு, துளசி, வில்வம். அருகு — ஆண்டவன் பெயரால் மருந்தாகப் பயன்படல்.
4) லட்சகொட்டைக்கீரை — இடுப்பு வலி
5) வேலிப்பருத்தி, வாகராட்சி இலை — மூட்டுவலி
6) மொசுமொசுக்கை — தலை சுற்றல்
7) சுக்கு, ஏலம், எலுமிச்சை, கிராம்பு — வாத, பித்தக் குறைகள்
8) துளசி. தூதுவளை, ஆடுதொடா — இருமல், சளி
9) வேப்பங்கொழுந்து, மிளகு, பூடு — குழந்தைகளின் சளி, மப்பு
10 கடுக்காய்ப் பூ — வயிற்று உளைச்சல், கடுப்பு

இத்தாவரங்களை இனம் காணவும் வளர்க்கவும், பயன்படுத்தவும் இன்றைய தலை முறையினரைப் பழக்குவதன்மூலம் சுற்றுப்புறத்தையும்பாதுகாக்கலாம்; நம் உடல்நலத்தையும் பாதுகாக்கலாம்.

**The Physician heals, Nature makes well — Aristotle.**



# ஊர்

மூன்றாவது நாளாக அவர் அவனை அங்கே பார்த்தார்.

சில நாட்களுக்கு முன் நிகழ்ந்த வெறியாட்டத்தின் மௌன சாட்சியாகக் கருகி நின்றிருந்த அந்த மரத் தடியில் அவன் நின்றிருந்தான், அவனும் கூட ஒரு சாட்சிதான் போலும்,அவரால்எளிதில் யூகிக்கமுடிந்தது அவனது தோற்றம் யூகத்தை ஆமோதித்தது.

வாரப்படாத தலைமுடி. நாட்கணக்கில் தொடர்ந்து அணிந்திருந்ததால் அழுக்கேறிக் கசங்கிய ஆடைகள். சாம்பல் மேட்டில் புரண்டு வந்தவனைப் போல் கை, கால்களில் புழுதி. பத்து-பதினோரு-வயது மதிக்கத் தக்க அந்தப்பையனின் கண்களில்-அந்தப் பருவத்துக்கு உரிய-உலகைப் பற்றிய பரவசமும் குறும்பும் ஒளியும் காணவில்லை. மாறாக, கலக்கமும், சோகமும் மிரட்சியும் ஏக்கமும் அந்தக் கண்களில் படர்ந்திருந்தன. அவனது கண்களைப் பார்த்ததும் அவருக்கு ரோஜாப்பூக்கள் பறிக்கப்பட்டு முட்கள் மட்டுமே எஞ்சியிருக்கிற ஒரு செடி நினைவுக்கு வந்தது. வாழ்க்கை ஒரு ரோஜா செடிதான். அதன் இனிமையும் குதூகலமும் அன்பும் பாசமும் அழகிய இதழ்கள் தான். ரோஜா என்றால் முட்களும் இருந்துதானே ஆகவேண்டும். துக்கம், நஷ்டம், சண்டை, வஞ்சகம்...... வாழ்க்கைக்கு எந்தப் பூச்செடியைக் காட்டிலும் பொருத்தமான உவமை ரோஜாச் செடிதான்...... அவர் தன் உவமையைத் தானே மெச்சிக் கொண்டார்.

'இவன் யார்? ஏன் இங்கே வந்து நிற்கிறான்? ஊரி லிருந்து கடிதம் ஏதும் வரும் என்றா? எந்த ஊரிலிருந்து? யாரிடமிருந்து? அப்பா? அம்மா? வேறு உறவினர்கள்? .....'

சிந்தனை அதன் தடத்தில் ஓடிக்கொண்டே இருக்க, அவரது கை அடுக்கி வைக்கப்பட்டிருந்த தபால்களுக்கு முத்திரை குத்திக்கொண்டேஇருந்தது.அவரது கண்கள் அந்தப் பையனிடமிருந்து விலகி அந்த அஞ்சல கத்தின் சுவர்களில் படிந்திருந்த கரியைப் பார்த்தன. மானுட நாகரிகத்தின் முகத்தில் பூசப்பட்ட கரியாக அவருக்கு அது தோன்றியது. சுவரில் கரியை அப்பி யிருந்த வெறித்தீ அந்த அஞ்சலகத்தின் தாழ்வாரக் கூரையை முற்றிலுமாகத் தின்றிருந்தது. ஆகாயமே கூரையாய் திறந்த வெளியில் அவரும் மற்றோரும் தபால்களைப் பிரித்துக்கொண்டிருந்தனர். அங்காங்கே நடந்த, நடந்து கொண்டிருக்கிற கலவர நிகழ்ச்சி-களைப்பற்றி அவர்கள் பேசுவதைக் கேட்ட அவரது முதிய இதயம் நொந்து துடித்தது.

'ப்ச்ச்'

கவலை தோய்ந்த முகத்துடன் அவர் தபால்களை அடுக்கிக் கொண்டார். ஜோல்னாப் பைக்குள் வைத்துக் கொண்டார். மூக்கிலிருந்து நழுவும் கண்ணாடியைச்சரி செய்து கொண்டார். தளர்ந்த நடையுடன் தனது கிழச் சைக்கிளைத் தள்ளிக் கொண்டு சாலைக்கு வந்தார். 'எல்லோர்க்கும் நான்இனிய தகவல்களையே கொண்டு சேர்ப்பேனாகவும்' என்ற வழக்கமான பிரார்த்தனை யோடு அவர் சாலையைக் கடந்து மரத்தடியில் நின்ற அவனிடம் வந்தார். அவனை நோக்கிப்புன்னகைத்தார். அவன் அவரை அச்சத்துடன் பார்த்தான்.

அந்தப் பார்வையில் நிறைந்திருந்த அச்ச உணர்வே அவரை வருத்தியது. ஒரு மனிதனைச்சக மனிதன் அச்சத்துடனும், ஐயத்துடனும், எதிர்கொள்வது...... தெரு மாறி நுழைந்த நாயைத் தெரு நாய்கள் எதிர் கொள்வதுபோல்...... இதன் பெயரா நாகரீகம்? இதுவா முன்னேற்றத்தின் அடையாளம்?

''என்ன தம்பி, இங்க மூணுநாளா நிக்குறியே என்ன வேணும்?''

''அஞ்செ''

''தம்பி, எனக்குத்தமிழ் தெரியும். மெட்ராசுல பதினைஞ்சு வருஷம் இருந்துருக்கேன். சும்மா தமிழ்லேயே நீ எங்கூடப் பேசலாம். ம் உன்னை நான் எங்கேயோ பார்த்திருக்கேன் ..... ஞாபகம் வர மாட்டேங்குது, வயசாகிப் போச்சு இல்லியா?''

அவன் கண்களிலிருந்து இன்னும் அச்ச உணர்வு மாறவில்லை.

''என்ன தம்பி வேணும்? தபாலா? எந்த ஊர்ல இருந்து? நீ எந்த ஏரியா? என் ஏரியாவா?

''ம் நிம்ம ஏரியா''

''நீ தமிழாளு தானே?''

''ம்''

''பிறகு, ஏன் தமிழ் பேசமாட்டேங்குறே...?''

''பயமா இருக்கு''

சாட்டையின் நுனியால் தீண்டப் பட்டவராய் அவர் அதிர்ந்தார். இகழ்ச்சிப் புன்னகை அவரது உதடுகளில் ஓடி மறைந்தது ..... அவர், அவன் தோள்களைத் தட்டிக் கொடுத்தார்.

''ஓ.... நீ இந்திரா காலனியில உள்ளவன் தானே... ஆமா, உங்க வீடுகளைலாம்தான் எரிச்சிட்டாங்களே... இப்ப எங்க இருக்க?''

''ஆஸ்பத்திரில''

''ஆஸ்பத்திரிலயா? அங்கு யாரு இருக்கா?''

''அம்மா''

''அம்மாவுக்கு என்ன?''

''......''

அம்மாவுக்கு என்ன? அவனுக்கே தெரியாது யார் சொல்லுவார்கள்? டாக்டர்களா? நர்சுகளா? அவர்-களிடம் கேட்கவா முடியும்? அதுவும் அவர்கள் இருக்கிற பரபரப்பில்?எத்தனை பேர்களுக்கு அவர்கள் மருத்துவம் பார்க்க வேண்டியிருக்கிறது? வரண்டா முழுதும் ஆட்கள். ஒரு அடி இடைவெளிதான் கால்தடுமாறினால் யார் மேலாவது தான் விழவேண்டும். அவ்வளவு நெரிசல். நல்லவேளையாக அம்மாவுக்குப் பக்கத்திலே அவனையும் படுக்கவைத்திருந்தார்கள் ஆம்புலன்ஸில் கொண்டு வருகிறபோதே சுயநினைவு வந்தும், கண்களை மூடிக்கொண்டு படுத்திருந்ததால் அம்மா-வுக்குப் பக்கத்தில் இடம் கிடைத்தது. இல்லையென்றால்

சந்திரகாந்தன்

அப்பாவைத் தேடிக் கொண்டிருப்பது போல் அம்மா-வையும் தேட நேர்ந்திருக்கும்... அம்மா கண் விழிக்கிற போதெல்லாம் அப்பாவைப் பற்றிக் கேட்கிறாள். அப்பாவைக் கூட்டிக் கொண்டு வா, ஊருக்குப் போய் விடலாம் என்கிறாள். கண் விழிக்காத போதும் கூட அம்மா ஊரைப்பற்றித்தான், ஊருக்குப் போவதைப் பற்றித்தான் புலம்பிக் கொண்டிருக்கிறாள்......

அம்மாவுக்கு ஊரைப் பற்றிப் பேசுவதில் கொள்ளைப் பிரியம். ஒரு நாளைக்குக் குறைந்த பட்சம் ஒருமுறை யேனும். இல்லையென்றால் தலை சுக்கு நூறாய் வெடித்து விடும்.

பேச்சு எங்கோ சுற்றிக் கொண்டிருக்கும். அம்மா எப்படித்தான் சரடுபிடிப்பாளோ, தெரியாது. நைஸாகப் பேச்சை ஊரைப் பற்றிய பிரஸ்தாபத்தில் கொண்டு வந்து இணைத்திருப்பாள். எங்கெங்கோ சுற்றித் திரிந்தாலும் நதி கடைசியில் கடலில் சங்கமித்துத் தானே ஆகவேண்டும்.

பக்கத்து குடிசை ஜானின் அம்மா, எதிர்க்குடிசை மாலா-வின் அம்மா, மம்முதுவின் அக்கா, வேலப்பனின் சித்தி...... இவர்களும்கூட தத்தம் ஊர்களைப் பற்றி எப்போதாவது பேசத்தான் செய்கிறார்கள். ஆனால் அவர்களால் அம்மாவின் பக்கத்தில் கூட வரமுடியாது மாலாவே சொல்லியிருக்கிறாள். ஜானும்.

இவ்வளவுக்கும் ஜானின் அம்மாவும், வேலப்பனின் சித்தியும் தஞ்சாவூர்ப் பகுதியிலிருந்து குடிவந்தவர்கள். ஜானின் அம்மாவை விட்டு விடலாம். வயசாளி. வந்து ரொம்ப வருடங்கள் ஆகிவிட்டது. இந்த வேலப்பனின் சித்திக்கு என்ன? வந்து இரண்டு வருடம்தானே ஆகிறது? சொல்வாளா?

—நுரைத்துக் கொண்டு, சில இடங்களில் சிங்கத்தைப் போல் சீறியும், சில இடங்களில் கட்டறுந்த கன்றுக் குட்டியைப்போல் துள்ளியும் சில இடங்களில் சாது-வைப்போல் சாந்தம் மிகுந்தும் ஓடிய காவிரியைப்பற்றி

—அதன் தீண்டலில் சிலிர்த்த பூமி பசுமையாய்ச் செழித்தது பற்றி

—உயர்ந்த கோபுரங்களைத் தாங்கிய கோயில்களைப் பற்றி

—நாகஸ்வரத்திலிருந்து பிறுகிற கம்பீரமான நாதம் பற்றி

—ஜலிங் ஜலிங் என்று சதிகள் கொஞ்சும் சலங்கைகள் பற்றி......

ம்?

அம்மா சொல்லுவாளே .....

வறண்ட வைகைதான். வயற்காடெல்லாம் சூது களம் தான். குடிக்கிற தண்ணீருக்காகத் தினம் பாதயாத்திரை தான். புழுதி பறக்கிற இராமநாதபுரத்து இராஜவீதி தான். கருவாட்டுக்கவுச்சிதான் . . இவற்றையெல்லாம் அம்மா சொன்னால் இன்றைக்குப் பூராக் கேட்டுக் கொண்டிருக்கலாமே...... என்ன அலங்காரம், என்ன ஜாலாக்கு, என்ன ஜோடனை, என்ன நுணுக்கம், என்ன உயிர்த்துடிப்பு, என்ன ரஸவாதம்......

முடியுமா? மற்றவர்களால் முடியுமா? ஊதாங்குழல்களில் புல்லாங்குழலின் இனிமை சுரக்குமா?

எப்போதோ வைகையில் வெள்ளம் வந்தது பற்றி அம்மா சொல்லுகிறபோது மனசுக்குள் 'உறும் உறும்' எனப்பறை முழங்கும். சிறுமியாய் அவள்தன் சேக்காளி களோடு ஊருணியில் குதியாட்டம் போட்டது பற்றிச் சொல்லும்போது மனசுக்குள் நீர் கலங்கிச்சேறு நாறும். ஏழை நாங்கள் எல்லோரும் வாழ மாதம் மும்மாரி பொழியணும் தாயே, மாரி மகமாயீ, மாரி மகமாயீ...' என்று பாடிக்கொண்டு, வண்ண வண்ணக் கைக்குட்-டைகள் ஏந்திய கைகளை உயர்த்தியும் தாழ்த்தியும் சுழற்றியும் கால்களால் தரையில் தட்டியும் இளவட்டங்கள் ஒயிலாடுவதைப் பற்றிச் சொல்லும் போது மனசுக்குள் கெச்சங்கள் சிணுங்கும், தலை-யிலிருந்து கரகத்தை முதுகுக்கு இறக்கி மீண்டும் முதுகிலிருந்து தலைக்கு ஏற்றிநிமிர்த்துகிற கரகாட்டக் காரியின் சாகஸத்தைப் பற்றிப் பேசுகிற போது மனசுக்குள் பிரமிப்புக்கனல் தஹிக்கும். இராமேஸ்வரம் கோயிலில், விதானத்தில் கொம்புகள் முட்ட மண்டி-யிட்டிருக்கும் நந்தியைப் பற்றிச் சொல்கிற போது மனசுக்குள் பிரும்மாண்டம் உருவாகி அமுத்தும். சேதுபதி ராஜாக்கள்சிம்மாதனம் ஏறிராஜ்ய பரிபாலனம் நடத்திய இராமலிங்க விலாசம் பற்றி, அதன் வாசலில் தொடங்கி கோட்டைவாசல் பிள்ளையார் கோவிலிடம் ஒரு பெண்ணின் இடைபோல் குறுகி, மீண்டும் விரிகிற இராஜவீதி பற்றி, ஒவ்வொரு மாதமும் ஊர் மாறுகிற கோலத்தைப்பற்றி...அம்மா எதைத்தான் சொல்லாமல் விட்டாள்? கேட்பவர் மனசில் அம்மா ஊரைப்பற்றி ஒரு சிற்பக் கோவிலே செதுக்கி விடுவாள்: ஒரு சித்திரத் தொகுப்பே வரைந்து விடுவாள். அம்மாவின் நாக்கு உளி; அம்மாவின் நாக்கு தூரிகை.

இப்படித்தான் பனிவிழத் துவங்கியிருந்த தனுமாசத்து முன்னிரவில் அம்மா சுந்தரத்திடம் மார்கழி மாதத்து ஊரைப் பற்றி வருணித்துக் கொண்டிருந்தாள். அம்மாவின் சேலையைப் போர்த்துக் கொண்டு அவள் மடியில் தலை வைத்துப் படுத்திருந்த — 'இன்னஞ் சின்னப் பாப்பா, மடியில படுத்துக்க... நால்கநேகிளாஸ் படிக்கிற பயல்' — சுந்தரம் ஆர்வமாய்க் கேட்டுக் கொண்டிருந்தான்.

''இந்த மார்கழி மாசத்துல ஊரப் பாக்கணுமே அழ-குன்னா அழகு ..... அப்படி ஒரு அழகுடா .. ஊரச்சுத்தி வயக்காடா?... அப்படியே நெல்லு விளைஞ்சு கதிரு முத்தி கொஞ்சம் தாள் பழுப்பேறியும் கொஞ்சம் தாள் பச்சை வாடாமையும் — கல்யாணத்துக்கு நிக்கிற பொண்ணு கெணக்கா — நிக்கிம். அங்கன அங்கன மொளகாக் கொல்லைய வேறையா?... அதுல புடல பூசணி, சுரை, பீர்க்கு இதெல்லாம் பூப்பூவா பூத்துக்-கிட்டிருக்கும் பாரு. ப்ச்ச் அதுவும் இந்தப் பூசணிப்பூ... அது வானத்தைப் பார்த்துக்கிட்டு பீப்பீ ஊதுற மாதிரி ஜோராப்பூத்திருக்கும்... ஊருநடுவ இருக்க ஊருணியில தண்ணி தொப்பு தொப்புன்னு பால் கெணக்கா வெள்ளயாக் கிடக்கும். அதுலருந்து கிளம்புற வாடக் காத்து ஊசி மாதிரிக் குத்தும். தெனைக்கும் கோயில்ல

விடியக்கருக்கல்ல ஆம்பளைய பஜனை பாடுவாங்க... அதக் கேட்டுக்கிட்டே பொம்பளைப் புள்ளய வாசத் தெளிப்போம் .... தெருவுல எல்லை போட்டுக்கிட்டு குண்டாச் சட்டிய முழங்கால்ல வச்சுக்கிட்டுச் சாணித் தண்ணிய வீசி வீசித்தெளிச்சா ம்ஹ்ம் இங்க வீசித் தெளிக்க முடியுமா? அப்படி வீசித் தெளிச்சா எதுத்த குடிசல்லு ஒலெய்ல போய்த் தண்ணி பட்டுடுமே... சாப்பாட்டுஇலைல தண்ணி தெளிக்கிறமாதிரித்தண்ணி தெளிக்கறதே இங்கே பெரும்பாடு. ஒரு கவடுதாக்கு அகலத்துக்கா தெரு இருக்கும்? அங்க, தேரோடுற தெருக்களாக்கும் எம்மாம் பெரிய கோலம் போடுவம் தெரியுமா? தெருவே நிறைஞ்சு போன மாதிரி ..... கோலத்துல அங்கன அங்கன சாணிய உருண்டையா உருட்டி வச்சு, அதுமேல பூசணிப்பூவச் செருகி வச்சா... தெருப்பூரா என்ன அலங்காரமா ஜொலிக்கும் தெரியுமா? ..''

''எதுக்காக அம்மா, அப்படிப் பூவைக்குத்தி வைப்பீங்க?''

''விடிஞ்சு வெயில் வந்த பொறகு அந்தப் பூமடல் கூம்பிப் போயிடும்ல. அந்த இதழ்களைப் பிச்சி சாணி உருண்டைல போட்டு எருவாத் தட்டிப் பத்திரமா வச்சிருந்து .....''

''அடுப்பு எரிப்பீங்களா''?

''முந்திரிக் கொட்டைத் தனமாக் கேள்வி கேக்காதே அத அடுப்பு எரிக்கக் கூடாது. அது தெய்வக் குத்தம். தை பொறந்து பொங்கலன்னிக்கோ, பொறகு ஒரு நாளோ குப்பிப் பொங்கல்ன்னு கொண்டாடுவோம். அன்னிக்கு அந்தஎருவையெல்லாம் ஊருணித்தண்ணில போடுறது... சமைஞ்சு வீட்டுல உட்கார்ற வரைக்கும் நானே குப்பி கொட்டியிருக்கேன். பொதுவாப் பொம்பளைப்புள்ளகளுக்குத் தான் குப்பிப் பொங்கல் குழந்தையா இருந்தாப்பசுங்களும் சேர்த்தி. நீபொறந்த வருஷம் உனக்குக் குப்பிப் பொங்கல் வைக்கணும்; கிருஷ்ணர் மாதிரி அலங்கரிக்கணும்; ராஜா வேஷம் போடணும்னுலாம் உன் அத்தை சொல்லிக்கிட்டு இருந்தா, ஆனா, அதுக்கு மின்னதான் ஒங்க அப்பா ஒத்தக்கால்ல நின்னு உன்னையும் என்னையும் இங்க கூட்டிட்டு வந்துட்டாரே ..''

தொடர்ந்து அம்மா குப்பிப் பொங்கலைப் பற்றி விஸ்தாரமாய்ச் சொல்லிக்கொண்டு போனாள். அவையெல்லாம் சுந்தரத்தின் காது மடல்களில் மோதி வெறும் அர்த்தமற்ற சப்தங்களாய்க் காற்றில் கரைந்தன. அவன் மனம் அத்தையைப்பற்றிய நினைவுகளில் அமிழ்ந்து கொண்டிருந்தது; அவள் ஆண்டு தோறும் அனுப்புகிற பொங்கல் வாழ்த்துக்களைப் பற்றிய சிந்தனையில் லயித்திருந்தது.

அவன் அத்தையை நேரில் பார்த்ததில்லை. அவள் பெயர் கல்பனா. அம்மா சொல்லியிருக்கிறாள். அவள் அப்பாவைப் போல் உயரம். அம்மா சொல்லியிருக்கிறாள். முகஜாடை கூட அப்பாவைப் போல்தான். அம்மா சொல்லியிருக்கிறாள். ஆனால் அப்பாவின் சாயலில் அத்தையைக் கற்பனை பண்ணிப் பார்ப்பது அவனுக்குச் சிரமமாய் இருந்தது. முடிமண்டிய முகமும் கடுமை நிறைந்த கண்களுமாய் ஒரு பெண் இருக்க முடியுமா? அதனால் அவன் நினைவுகளிலும் கனவுகளிலும் வாழ்கிற அத்தை வேறு சாயலில் இருந்தாள் ஒரோர் சமயம் அத்தையின் முகம் சீதா டீச்சரின் சாயலில் இருப்பதாக அவன் உணர்ந்திருக்கிறான்.

கல்பனா அத்தை வருடா வருடம் சுந்தரத்துக்குப் பொங்கல் வாழ்த்து அனுப்பி வருகிறாள். இவன் ஒரு வயது கூட நிரம்பாத குழந்தையாய்ப் பெங்களூருக்குத் தூக்கி வரப்பட்ட போதிலிருந்தே அனுப்பி வருகிறாள். ''இல்லி சுந்தரம் யாரு?'' என்று கேட்டுக் கொண்டு வந்த அம்செபேதெயிடம் அம்மா தடுக்குப் பாயில் கை சூப்பிக் கொண்டு கிடந்த சுந்தரத்தைக் காட்டினாளாம். 'இவரா சுந்தரம்'? என்று ஆச்சரியப்பட்ட அம்செபேதெ இவன் கையிலேயே வாழ்த்து அட்டையை வைத்து விட்டு, பால் மணக்கும் கன்னங்களில் முத்தமிட்டு விட்டுப்போனாராம். அம்மா சொல்லியிருக்கிறாள்.

அந்த அட்டையையும், அதற்குப் பின்னால் வந்த வாழ்த்து மடல்களையும் ஓர் ஆவணம் போலவும், ஒரு பொக்கிஷம் போலவும் பாதுகாத்து வைத்திருந்த அம்மா இரண்டு வருடங்களுக்கு முன்தான் இவனிடம் ஒப்படைத்தாள், ஏகப்பட்ட நிபந்தனைகளோடு. 'வெளியே எடுத்துப் போகக் கூடாது, பத்திரமா வச்சுக்கணும் .' இவனும் ஒரு நோட்டு அட்டைக்குள் அவற்றைப் பாதுகாத்து வைத்திருக்கிறான்.

அதுகுறித்துத்தான் அவனுக்கு எவ்வளவு பெருமை? தன் நண்பர்களை வீட்டுக்கு அழைத்து வந்து அவற்றைக் காட்டுவதில் தான் எத்தனை ஆனந்தம்? அவன் நண்பர்கள் மத்தியில் எவ்வளவு மதிப்பு? ..... வேறு யாரிடம் இத்தனை படங்கள் இருக்கிறதாம்? அப்படியே இருந்தாலும் இவ்வளவு 'பளபள' என்று பளிங்கு மாதிரி இருக்குமா? இத்தனை விதங்கள் இருக்குமா? அட்டையை விரித்தால் புஸ்ஸென்று பூப்பூவாய் மலர்கிற காகிதக் கத்திரிப்பு வேலைகள் இருக்குமா? பாதி மடிப்பைச் சேர்த்தால் ஒருபடம்; மீதிமடிப்பைச் சேர்த்தால் இன்னொரு படம் தெரியுமா? ஜிகுஜிகு என்று ஜிகினா மின்னுமா? இவை கூட இருக்கலாம் பாட்டு இருக்குமா? பாட்டு பாட்டு .. சித்திரம் சித்திரமாய் அச்சடித்தது மாதிரி அத்தை எழுதுகிற பாட்டு .. ஒரு வாழ்த்தில் சுந்தரம் என்ற பெயர் செங்குத்தாய் வருகிற மாதிரி பாட்டு இன்னொன்றில் படுக்கையாய் வருகிற மாதிரி, மற்றொன்றில் மூலைவிட்டமாய் மேலிருந்து கீழாக, பிறிதொன்றில் கீழிருந்து மேலாக, அடிகளின் இறுதி எழுத்துக்களாய், முதல் எழுத்துக்களாய், துவக்கமாய், முடிவாய் .....

''ஏம்மா, அத்தை இந்த வருஷமும் பொங்கல் வாழ்த்து அனுப்பும்ல? .''

ஊரில் பொங்கல் கொண்டாட்ட வைபோகத்தைப்பற்றி ஆலாபனை செய்து கொண்டிருந்த அம்மா சுந்தரத்தின் கேள்வியால் எரிச்சலானாள்.

''வருஷாவருஷம் அனுப்புற மாதிரி இந்த வருஷமும் அனுப்புவா... ஆங்... எங்கன விட்டேன்?...''

இந்த வருடம் அத்தை என்ன படம் அனுப்புவாள்? சாமிபடம்? குழந்தை படம்? தலைவர் படம்? நடிகர் படம்? பூ? பறவை?... பாட்டில் பெயர் எப்படி வரும்? படுக்கையாகவா? செங்குத்தாகவா?... ஆமாம், வருடா வருடம் அத்தை அனுப்புகிறாளே...... இந்த வருடம் நானும் அவளுக்கு அனுப்பணும், கடைத்தெருவுக்குப் போனால் நல்ல படங்கள் கிடைக்கும். அப்பாவிடம் வாங்கி வரச்சொல்ல வேண்டும். ம்ஹூம் அவரிடம் சொல்லக் கூடாது. மறந்து விடுவார். நானே போய் வாங்க வேண்டும். காசு? என்ன, ஐந்து ரூபாய் வருமா? உண்டியலை உடைத்துவிட வேண்டியது தான் ஒரு நல்ல படமாய் வாங்க வேண்டும். பெரிய படமாய் .. என்னபடம்? முருகன் சாமிபடம், மயில் மீது ஏறி இருக்கிறாற் போல்.. இல்லையென்றால் கிருஷ்ணர் படம், புல்லாங்குழல் ஊதிக்கொண்டு பசுவின் மேல் சாய்ந்த மாதிரி, படத்துக்குப் பின்னால் அத்தை மாதிரி நானும் பாட்டு எழுதனும். அதில் அத்தை பெயர் வரனும். கல்பனா கல்பனா... அத்தை... கல்பனா அத்தை நல்லவளாம்.. கல்பனா கல்ப கல்.. ம்ம்ம்.. கல்வி. கல்வி கல்வியில் சிறந்தவளாம். கல்பனா அத்தை நல்லவளாம். கல்வியில் சிறந்தவளாம் நல்லாவா இருக்கு?... கல்பனா அத்தை நல்லவளாம்; கல்வியில் ரொம்ப வல்லவளாம். ம்ஹூம் கல்பனா அத்தை நல்லவளாம் கல்வியில் மிகவும் வல்லவளாம் ம் இப்படியே யோசிச்சு எழுதிடனும். அத்தை படிச்சுப்பார்த்திட்டு என்னைப் பாராட்டுகிற மாதிரி எழுதனும்.

''இந்த வருஷமாவது பொங்கலுக்கு ஊருக்குப்போனா தேவலைன்னு தோணுது. ஆனா ஒங்க அப்பா ஒத்துக் கணுமே. அவருக்குத்தான் ஊர்னாவே எட்டிக் காயாக் கசக்குதே. ம்ஹ்ம்... அவர் சொல்றதுலயும் ஞாயம் இல்லாம இல்லியே எப்படி இருந்த ஊரு? எவ்வளவு அன்யோன்யமா தாயா புள்ளயா ஒன்னா மன்னா இருந்தபூமி யாருவச்ச தீயோ? எப்படித்தான் வந்துச்சோ? வந்த தடம் தெரியாம வந்ததே அந்தச் சாதித் தகராறு. எத்தனை படப்பு எரிஞ்சு கருகிச் சாம்பலாச்சு எத்தனை ஆடு, மாடு, கோழி. வாயில்லா ஜீவன்கள்லாம் செத்து மடிஞ்சுச்சு, எவ்வளவு பொணம், எவ்வளவு ரத்தம், ஏன் எதுக்குன்னே யாருக்குமே தெரியுறதுக்கு மின்னமேயே காட்டு வெள்ளம் வந்து நாசம் பண்ணின மாதிரி. அதோட ஊரை விட்டு வந்தவர்தானே எம் பொணம் கூட இந்த மண்ணுக்கு வராதுன்னு வைராக்யமா வந்தவர்தானே அவரு? ஊருக்குப் போறதப்பத்தி அவருட்ட வாயைத் தெறக்க முடியுமா? எனக்கு என்னமோ எங்கட்ட கூட அந்த ஊர்ல, வைய ஆத்தங் கரைல எரியனும்தான் ஆசையா இருக்கு ..

சாத்தியிருந்த தகரக்கதவுபடீரெனத்திறந்துஅம்மாவின் பேச்சைத் தடைபடுத்தியது. சுந்தரத்தின் கவனமும் வாசலுக்குத் திரும்பியது.

வாசலில் ஜானின் அம்மா நின்றிருந்தாள். அவள் முகமெங்கும் வியர்வை. இந்தக் குளிரில் வியர்வை? அவளது வெளிறிய உதடுகள் எதையோ சொல்ல முடியாமல் துடித்துக் கொண்டிருந்தன. அவளது மெலிந்த தேகம் நடுங்கிக் கொண்டிருப்பது இருபத்தைந்து வாட்ஸ் பல்பின் வெளிச்சத்தில் நன்றாகவே தெரிந்தது. திறந்திருந்த வாசல் வழியே முற்றத்தில் ஆட்கள் அங்கும் இங்குமாய்ப் பரபரத்து அலைவதும் தெரிந்தது.

''என்ன, ஜான் அம்மா?''

அம்மா தீ சுட்ட பதற்றத்துடன் எழுந்தாள்.

''ஊரு ஊரும்பியே ஊரை நோக்கி ஓடுங்கடின்னு விரட்டுறனுகடி கடைத்தெருவுலாம் ஒரே கலவரமாம்டி கண்ல கண்ட தமிழ் ஆளுகளைலாம் வெட்டுறாங்களாம்; குத்துறாங்களாம்டி தமிழ் ஆளுக கடைகளைலாம் சூறையாடுறாங்களாம் ஒரு கூட்டம் தீ வட்டிகளைத் தூக்கிக்கிட்டு நம்ம காலனிப் பக்கம் வருதாம். அவுங்க வர்றதுக்குள்ள எடுக்கறத எடுத்துக்கிட்டு தப்பிச்சுப் போயிடுவோம்னு ஒரு வேனை வச்சுக் கிட்டு ஆளுகளை ஏத்திக்கிட்டு இருக்காங்க கிளம்புடி .''

ஜானின் அம்மா தொடர்ந்து சொல்லிக் கொண்டிருந்தாள். சுந்தரம் வேகமாக வெளியே ஓடிவந்தான்.

குடியிருப்பின் வாசலில் ஒருவேன் உறுமியபடி புறப்படத் தயாராய் நின்று கொண்டிருந்தது. கீழே நின்று கொண்டிருந்த நான்கைந்து பேர்கள் வேனில் ஏறுபவர்களைத் துரிதப் படுத்திக் கொண்டிருந்தார்கள். காலனியிலிருந்து ஆட்கள் பெட்டிகளோடும், பை களோடும் படுக்கைகளோடும் வேனை நோக்கிப் பரபரப்புடன் போய்க் கொண்டிருந்தனர். அவர்கள் முகங்களில் பீதியும் பயமும் மண்டிக்கிடந்தது. தன் அம்மாவின் பின்னால் விரைந்த மாலதி சுந்தரத்தின் தோளில்தட்டி 'நீ வல்லியாடா' என்று கேட்டுவிட்டு இவன் பதிலைக் கூட எதிர்பாராமல் வேனை நோக்கி ஓடினாள். மம்முதுவின் அக்கா தங்கள் வாப்பாவைத் தேடிப்பிடித்துக்கூட்டிக்கொண்டு வருமாறு மம்முதுவை விரட்டிக் கொண்டிருந்தாள். அவளது மாப்பிள்ளை வாப்பாவுக்காக அழுகிற அவளை வைதுக் கொண்டிருந்தான். மம்முதுவின் வாப்பா ஓர் அரைப்பைத்தியம் எங்காவது பீடி பிடித்தபடி சுற்றிக் கொண்டு திரிவார். அவரைத் தேடிக் கண்டுபிடிக்க அவகாசம் இருக்கிறதா, என்ன? .. மம்முது அழுகிற அக்காளைப் பார்த்தபடி சாமான்கள் கட்டின மூட்டையை வேனுக்கு இழுத்துக் கொண்டு போனான், அவனது கண்கள் கலங்கியிருப்பதைச் சுந்தரம் கவனித்தான்.

''அடே, சுந்தரம்... எங்கட போனே... இங்க நின்னு வேடிக்க பாத்துட்டா இருக்கே அதுக்கு நேரமாடா இது? ஓடுடா, போயி அப்பாவைக் கூட்டிட்டு வந்துருடா . நாமளும் போயிடுவோம். ஏங்க ஜான் அப்பா, கொஞ்சம் சொல்லி வண்டிய நிறுத்தி வையுங்களேன். அவரும் வந்துரட்டும் ..''

அம்மாவின் முகத்தைப் பார்க்கவே சுந்தரத்துக்குப் பயமாக இருந்தது; அவனுக்கும் அழுகை வந்து விடும் போல் இருந்தது.

"அந்தக் கும்பல் வந்துடுமேம்மா... வந்துட்டா சப்பத்தாடு பண்ணிடுவானுகளே.. நீயும் பயலும் ஏறிக்குங்க. அவரு ஆம்பளை, எப்படியும் சமாளிச்சு வந்துடுவாரும்மா.. ஏ யாரு அது, சாமான் மூடை-களை ஒரேயடியா ஏத்துறது... ஆளுகளுக்கு இடம் வேணாமா?...

"கொஞ்சம் பார்க்கலாமுங்க, ஜான் அப்பா, அடேய் ஓடுடா..."

வேனுக்குள் இருந்து ஜானும், மாலதியும் 'நீ வல்லி-யாடா, சுந்தரம்' என்று கேட்ட கேள்விக்கு "இந்தா எங்க அப்பாவைக் கூட்டிட்டு வந்துர்றேன்...." என்று சத்தமாய்க் கூவிக் கொண்டே சுந்தரம் ஓடினான்.

காலனியிலிருந்து இரண்டு சந்துகளைக் கடந்து கடைத் தெருவுக்குள் திரும்பியதும் அவன் கண்ட காட்சிகள் அவனது ஓட்ட வேகத்தை மட்டுப்படுத்தின. அந்தக் காட்சிகள் ஏற்படுத்திய அழுத்தத்தை அவனது பிஞ்சு இதயத்தால் தாங்கிக் கொள்ள முடியவில்லை, சினிமாக்களில் தான் அவன் அத்தகைய கோரக் காட்சிகளைக் கண்டிருக்கிறான்.

சாலையோரங்களில் தள்ளு வண்டியில் பழங்கள், காய்கள், பிளாஸ்டிக் பொருட்கள் இன்ன பிற பொருட்-களை வைத்து வியாபாரம் செய்கிறவர்கள் தங்கள் வண்டிகளைத் தள்ளிக்கொண்டு வேக வேகமாக ஓடி வந்து கொண்டிருந்தார்கள். அவர்களை ஒரு கும்பல் 'ஹோ' என்று இரைச்சலிட்டபடி விரட்டிக் கொண்டிருந்தது. அவர்கள் கைகளில் கத்தி, சைக்கிள் செயின், குண்டாந்தடி, உருளைக்கட்டை, இரும்புக் கம்பிகள் என்று பல்வகையான ஆயுதங்கள் இருந்தன. வண்டிக்காரர்களில் ஒருவனை அந்தக் கும்பல் எட்டிப் பிடித்ததும்... திரைப்படங்களில் அந்த மாதிரிக் காட்சி-களை விரும்பிப்பார்க்கிற சுந்தரம் கைகளால் கண்களை மூடிக் கொண்டான், கொஞ்சம் தைர்யத்தை வர வழைத்துக் கொண்டுக் கைவிரல் இடுக்குகளின் மூலம் அந்தக் கோரங்களைக்காண முயன்றான். மண்டை உடைபட்டு ரத்தம் வழிய அந்த வண்டிக்காரர் மயங்கிச் சரிந்தார். மயங்கிச் சரிந்த அவரை மிதித்துத் துவம்சம் செய்து முன்னேறிய கும்பல் அந்த வண்டியை உடைத்து நொறுக்கியது; பழங்களைச் சூறை எறிந்தது இன்னொரு வண்டிக்காரரின் தோள்பட்டையில் ஒரு வீச்சரிவாள் வேகமாக இறங்கியதும் ரத்தம் பீறிட்டது. அவரது 'ஐயோ...' என்ற அலறலை அமுக்கிக்கொண்டு எழுந்த வெறிக் கூச்சல் சுந்தரத்தின் உடலை நடுக்க முறச் செய்தது.

அந்தக் கும்பலில் இராமகிருஷ்ணனும் இருப்பதைப் பார்த்ததும் அவன் இன்னும் அதிர்ச்சிக்கு ஆளாகினான் இராமகிருஷ்ணன் அப்பாவின் கடையில் கிளாஸ் கழுவுகிற பையன். சுந்தரத்துக்கும் இரண்டு வயதுகள் மூத்தவனாய் இருப்பான். அப்பாவின் கடைக்குச் சுந்தரம் போகிற போதெல்லாம் இராமகிருஷ்ணன் ஏதாவது கேலிபேசி வம்புக்கு இழுப்பான். சுந்தரம் அவனிடம் எப்போதும் ஒரு ஜாக்கிரதை உணர்ச்சி யோடு தான் பேசுவான். அந்த இராமகிருஷ்ணன் பெரிய மனுஷனைப்போல கைலியை பெருந்தொடை வரை ஏற்றி மடித்துக் கட்டிக்கொண்டு கையில் வைத்திருந்த இரும்புத் தடியால் தள்ளு வண்டிகளின் ரிம்களை அடித்து வளைத்து அட்டகாசமாய்ச் சிரித்த படி போய்க் கொண்டிருந்தான். அவனிடம் தன் அப்பாவைப் பற்றி விசாரிக்க வேண்டும் என்று சுந்தரத்துக்கு முதலில் தோன்றியது. ஆனால் மறு கணமே அந்த எண்ணத்தை மாற்றிக் கொண்டான். 'இவனும் ஒரு தமிழ்ப்பையன்' என்று மற்றவர்களிடம் கூறி அவர்களோடு சேர்ந்து அவன் தன்னை அடிக்கக் கூடச் செய்வான்... போக்கிரிப்பயல்... எவ்வளவு ரவுடித்தனமாகப் போகிறான்...

சுந்தரம் பிளாட்பாரத்தை ஒட்டி இருந்த மரங்களின் நிழலில் பதுங்கிப் பதுங்கி அப்பாவின் கடையை நோக்கி நடந்தான். கால்களில்ஓட வேண்டும் என்று உணர்வு துடித்துக் கொண்டிருந்தாலும் எச்சரிக்கை உணர்வு கால்களைக் கட்டுப்படுத்தியிருந்தது.

எப்போதும் இரவாகி விட்டால் ஜேஜே என்று ஒளி மயமாக இருக்கிற அந்தக் கடை வீதி இருளடைந்து கிடந்தது. கரேல் என்று கிடந்த தார்ச் சாலையில் நொறுங்கிய கண்ணாடித் துண்டுகளும் துண்டு துண்டாய்க் ஏதோதோ பொருட்களும் இறைந்து கிடந்தன. பல கடைகளின் முகப்புகள் நொறுக்கப்-பட்டுச் சிதலமடைந்து கிடந்தன. நடு ரோட்டில் யாரோ ஒரு மனிதன் முனகிக்கொண்டு கிடந்தான்.

'அப்பாவின் கடையையும் இப்படித்தான் அடித்து நொறுக்கி இருப்பார்களோ? அதோ, அந்த ஆள் மாதிரி அப்பாவும் நடு ரோட்டில் விழுந்து கிடப்பா-ரோ? .. கடவுளே அப்பாவுக்கு ஒன்னும் ஆகி இருக்கக் கூடாது. '

ஏற்கனவே கண்ட காட்சிகளால் பயமும் மிரட்சியும் அழுத்தி மிதித்துத் துவைத்திருந்த சுந்தரத்தின் பிஞ்சு இதயத்தை அப்பாவின் நிலையைப் பற்றிய யூகங்களும் குதறி ரணமாக்கின. ஓடிப்போய் அவரைப் பார்க்க வேண்டும் என்ற உணர்வும் ஓடினால் ஆபத்து என்ற உணர்வும் அவன் கால்களில் பின்னிப் புரண்டு அவற்றைக் கனக்கச் செய்தன.

அடுத்த திருப்பம் தான் அப்பாவின் கடை. இங்கிருந்து பார்த்தால் ஒன்றும் தெரியவில்லை அதுவே அச்சத்-துக்குக் காரணமாயும் இருந்தது; உச்சி வெயில் வேளையில் காலடியில் ஒதுங்குகிற நிழல் போல— கடவுளின் பெயரால் — கொஞ்சம் நம்பிக்கைக்கும் காரணமாயும் இருந்தது.

ஆனால், அந்தத் திருப்பத்துக்கு வந்ததும் கடை சிதைந்து கிடந்த கோலமும், சாலையில் உருண்டு கிடந்த பாய்லரும், கண்ணாடித் துண்டுகளாய் நொறுங்கிக் கிடந்த டீ கிளாஸ்களும், மண்டை உடைந்து சாலையில் துடித்துக் கொண்டு கிடந்த அப்பாவின் தோற்றமும் அந்தத் துளியூண்டு நம்பிக்-கையையும் துடைத்து எறிந்தன. உடலின் பிற பாகங் களோடு இணைக்கும் நாடி நரம்புகள் படீரென அறுபட

இதயத்தை யாரோ பிய்த்து எடுத்த வேதனையில் எழுந்த அலறல் அச்சத்தின் காரணமாகத் தொண்டைக் குழிக்குள்ளே பந்தாய்ச் சுருண்டு கொண்டது. கண் களிலிருந்து நீர் பொங்கிப் பொங்கி வழிந்தது. உதடுகள் கோணக் கோண அவன் 'அப்பா... அப்பா' என அரற்றினான். கண்ணாடித் துண்டுகளை மிதித்துக் கொண்டு அப்பாவிடம் ஓடினான். மண்டியிட்டான். அவர் முகத்தை உற்றுப் பார்த்தான். பிளவுபட்ட மண்டையிலிருந்து வழிந்த ரத்தம் நெற்றி, கன்னங்-களை நனைத்திருந்தது. மூக்கின் வழியே மூச்சு திணறி திணறி வந்து போய்க் கொண்டிருந்தது. குப்புறக்கிடந்த அவரை அவன் கஷ்டப்பட்டுப் புரட்டிய போது வயிற்றிலிருந்தும் ரத்தம் கொட்டிக் கொண்-டிருப்பதைக் கண்டான். குத்தியும் இருக்கிறார்கள் பாவிகள்... யார்?... அந்த இராமகிருஷ்ணன் பயலே தானோ? ..

''அப்பா .. அப்பா ''

சுந்தரம் அப்பாவின் ரத்தக்கறை படிந்திருந்த சட்டை யைப்பற்றி உலுக்கினான்.

''எந்திரிங்கப்பா... அம்மா 'ஊருக்குப் போகலாம்; உங்களைக் கூட்டிட்டு வா'ன்னு சொல்லுச்சுப்பா '' அவனது வாயிலிலிருந்து சொற்கள் எச்சிலோடு குழம்பி வழிந்தன.

மூடியிருந்த இமைகள் சிரமப்பட்டு விலகின. மூக்கி லிருந்து பெருமூச்சு வெளிப்பட்டது. அவர் அவனை ஒரு கணம் பார்த்தார். ஊமைப் பார்வை. மீண்டும் இமைகள் கவிழ்ந்து கொண்டன. அப்பாவின் உதடுகள் விலகிப் பிரிந்து சேர்ந்தன.

''கடவுளே... எங்கஅப்பாவுக்கு ஒன்னும் ஆகக்கூடாது'' என்று வேண்டிக் கொண்ட சுந்தரம் மீண்டும் 'அப்பா.. அப்பா...' என அவரை அழைத்தான்.

மீண்டும் இமைகள் திறந்தன. அப்பா சுந்தரத்தைப் பார்த்தார். பார்வையில் ஓர் ஒளிக்கீற்று ஓடி மறைந்தது உதடுகளில் ஏதோஒலி உருவாகி உதிர்ந்ததுசாலையில் கிடந்த ரத்தம் படர்ந்த கை மெல்ல உயர்ந்தது. சுந்தரத்தின் கழுத்தில் படிந்து அவனது முகத்தை அவர் முகத்தருகே இழுத்தது. குவிவதும் விரிவதுமாய் இருந்த அவரது உதடுகள் அவன் கன்னத்தில் முத்தமிட முயன்றன.

''சுந்தரம் .. அம்மாவ...''

அப்பா சொன்னதில் இவை மட்டுமே புரிந்தன.

அவர் மீண்டும் மயக்கமானார்.

''அப்பா...''

அப்பாவைத் தூக்கிக் கொண்டு அம்மாவிடம் போகத் தனக்கு யாரேனும் உதவ வரமாட்டார்களா என்று சுற்றிலும் பார்த்தான். மனித சஞ்சாரமே இல்லாத வனாந்தரமாய்ச் சாலை இருண்டு கிடந்தது.

''அப்பா...''

அவர் காதருகே குனிந்து சொன்னான். அவரது மூக்கருகே கை வைத்துப்பார்த்தான். சுவாசக் காற்றின் உஷ்ணம் விரல்களில் சுட்டது. அப்பாவுக்கு மூச்சு இருக்கிறது. அப்பாவைக் காப்பாற்றி விடலாம். ஆனால், எப்படி?

கடவுளைத் துணைக்கு அழைத்துக் கொண்டு அப்பா-வைத்தூக்க முயன்று தோற்றான்.

செய்வதறியாமல் மீண்டும் சுற்றிலும் பார்த்தான். அவர்களது காலனியின் வானப் பரப்பில் ஒரு பெரும் புகை மண்டலம் உருவாகி உயர்வதைப் பார்த்ததும் அவன் திகைப்புக்குள்ளாயினான். ஒரு கணம் தான் திகைப்பு. மறுகணம் நிலவரம் புரிந்ததும் அவன் ஆடிப் போனான். அப்பாவைப் பற்றிய கவலையில் மையம் கொண்டிருந்த கவனம் அம்மாவைப் பற்றித் திரும்பியது. அய்யோ... அம்மாவுக்கு என்ன ஆயிற்றோ? அப்பாவைப் போல் அம்மாவையும் அந்த ஆட்கள்...? ஓர் அதிர்ச்சி மின்னல் அந்த இளையதேகம் பூராவும் ஓடி உலுக்கியது.

''கடவுளே... எப்படியாச்சும் அப்பாவைக் காப்பாத்து'' என்று ஒரு கணம் வேண்டி நின்ற அவன் மறுகணம் ''அம்மா '' என அலறியவனாய் ஓட்டமெடுத்தான்.

விளக்குகள் உடைபட்டு இருண்டு கிடந்த அந்தச் சாலையில், தூரத்தே எரியும் பெரு நெருப்பின் வெளிச்சம்பட்டு கண்ணாடித் துண்டுகள் மின்னின. அவற்றை மிதிக்காமல் ஓட வேண்டும் என்ற ஜாக்-கிரதை உணர்ச்சி அற்றவனாய், அந்தச் சில்லுகள் பாதங்களைக் கிழித்து ரத்தம் வருவதைப் பொருட்-படுத்தாதவனாய், அம்மாவைப்பற்றிய கவலைமட்டுமே நெஞ்சு முழுக்க நிறைந்திருக்க அவன் ஓடினான்.

''கடவுளே, அம்மாவும் மத்த ஆளுகளோட ஊருக்குப் போயிருக்கணும், பகவானே... ஆனா அம்மா போக மாட்டாதே... அப்பாவோட நான் வருவேன்னு நின்னிருக்குமே. அத அந்த ஆளுக அடிச்சுப் போட்-டிருந்தா... அம்மா எப்படிலாம் துடிச்சிருக்கும்... அழுதிருக்கும்...''

வானைத் தொடுகிற ஆவேசத்துடன் தீ எரிந்து கொண்டிருந்தது. அதன் செந்நிற நாவுகள் இரை தேடிக்காற்று வெளியில் துழாவுகிற ஆயிரந்தலை நாகத்தின் நாவுகளைப் போல் அங்கும் இங்குமாக அலைந்து கொண்டிருந்தன. குடியிருப்பின் புறங்களில் நின்றிருந்த மரங்களின் பசிய இலைகள் அனலால் தாக்குண்டு சுர்ரென்ற ஒலியுடன் உதிர்ந்து கொண்-டிருந்தன. இலைகளை உதிர்த்து வெறும் கிளை களுடன் நின்ற மரங்கள் அந்தப்பெரு நெருப்பின் வெளிச்சத்தில் கோரமாய் அசைந்தன. அது அவனுக்கு சினிமாக்களில் பார்த்த எலும்புக் கூடுகளின் நடனத்தை நினைவுபடுத்தி வயிற்றைக் கலக்கியது. நெருப்புப் பற்றிய கூரைகள் தரைநோக்கிச்சரிகிற போது வேட்டு வெடித்தது போன்று சப்தம் எழுந்த போதெல்லாம் அவனது இதயத்தில் இடிகள் மோதி அறைந்தன. தூரத்தில் ஓடி வருகிறபோதே சுந்தரத்தின் முகத்தை அனல் தாக்கியது. ஓடி வந்திருந்ததாலும், மனம்

முழுக்க அச்சம் ஆக்கிரமித்திருந்ததாலும், அனலின் தாக்குதலினாலும் அவன் உடம்பில் வியர்வை பொங்கி வழிந்து கொண்டிருந்தது. அவன் உதடுகள் 'அம்மா' 'அம்மா' என்று துடித்துக் கொண்டிருந்தன.

அந்த நெருப்புக் குளத்தில் எங்கே என்று அவன் தன் அம்மாவைத் தேடுவான்? தீ தீ தீ .. ஜான் வீடு, மம்முதுவின் வீடு, வேலப்பனின் வீடு எல்லா வீட்டிலும் தீ. அவனது, இவனது என்று அடையாளம் தெரியாமல் எல்லா வீட்டையும் தீ தின்று கொண்டிருந்தது. இதனுள்ளா அம்மா இருப்பாள்? இதற்குள் அகப்பட்டுக் கொண்டிருந்தால் அம்மா என்ன ஆகியிருப்பாள்? கடவுளே அம்மா இதனுள் சிக்கி இருக்கக் கூடாது. ஜானின் அம்மா அம்மாவையும் கட்டாயப் படுத்தி வேனில் ஏற்றியிருக்க வேண்டும்... ஆனால் அம்மா ஏற மாட்டாளே? எனக்காகவும் அப்பாவுக்காகவும் காத்திருந்து அவள் அவர்கள் கைகளில் சிக்கியிருப்பாளோ? இந்தக் கேள்விகளை அவன் யாரிடம் கேட்பான்? கேட்க யார் அங்கே இருந்தார்கள்? பத்து நாட்கள் பட்டினி கிடந்தவன் சோற்றைப் பார்த்ததும் பாய்ந்து பாய்ந்து தின்பதைப் போல் அந்தக் குடிசைகளை விழுங்கிக் கொண்டிருந்த தீயையும் அதற்கு அனுசரணையாக எட்டுப்பக்கத்திலிருந்தும் வீசிய காற்றையும் தவிர வேறு யார் இருந்தார்கள்?

அதோ, காலனியின் வடக்கு மூலையில் .. யார் அது? குத்துக் காலிட்டு தலையைக் குனிந்து கொண்டு குளிர் காய்கிறவனைப் போல்... யார் அது?

சுந்தரம் அந்த ஆளிடம் ஓடினான். கடவுளே அந்த ஆள் அம்மாவைப் பார்த்திருக்க வேண்டும். அம்மா பத்திரமாய் இருக்கிறாள் என்று சொல்ல வேண்டும்.

அந்த ஆள் மம்முதுவின் அப்பா.

இவரை விட்டு விட்டு மம்முதுவும், அவன் அக்காளும் அத்தானும் போய் விட்டார்களா?

''மம்முதுவின் வாப்பா, மம்முதுவின் வாப்பா... அம்மாவப் பாத்தீங்களா?''

அவன் அவர் தோளில் கைவைத்து அசைத்தான்.

அவர் அண்ணாந்து இவனைப் பார்த்தார். பின்னர் தலை குனிந்து கொண்டார்.

''எங்க அம்மாவப் பாத்தீங்களா''?

''போச்சு .. போச்சு... எல்லாமும் போச்சு... எல்லாரும் போச்சு .. அம்மா—பிள்ளை, புருஷன்—பெண்டாட்டி, வாப்பா—மக்க, அண்ணன்—தம்பி, அக்கா—தங்கச்சி, மாமன்—மச்சான்... பாசம், பந்தம், நேசம், ஞாயம் .. எல் . லாம் .. போச்சு... ப்ச்ச் போச்சு... எல்லாமும் போச்சு .. எல்லாரும் போச்சு .. எங்கே போச்சு? ஏன் போச்சு?''

இந்தக் கேள்விகளுக்கு அவன் பதில் சொன்னால் அவன் கேள்விக்குத் தான் பதில் சொல்லுவேன் என்பது போல் அவர் அவனைப் பார்த்தார். அவன் நெருப்பைப் பார்த்துக் கொண்டிருந்தான். வீட்டுக் கூரையை எரிக்கிற தீ, துணிமணிகளை எரிக்கிற தீ, பாடப்புத்தகங்களை எரிக்கிற தீ அவன் ஆசையோடு பாது காத்து வைத்திருந்த அத்தையின் வாழ்த்துக்களையும் எரித்திருக்குமோ? ..... அம்மா சிக்கியிருந்தால் அவளையும் ?

''என்ன போச்சு? .. என்ன இருந்துச்சு? எங்க இருந்திச்சு .. ம்? ''

மம்முதுவின் வாப்பா எழுந்து நின்றார். கைலியின் பின்புறத்தில் ஒட்டியிருந்த தூசைத் தட்டி விட்டார். காது மடல்களில் செருகியிருந்த துண்டுப் பீடியை எடுத்து அதன் நுனியைப் பார்த்தார். தலையை ஆட்டிக் கொண்டு எரிந்து கொண்டிருந்த குடிசைகளை நோக்கி நடந்தார். நெருப்பில் பீடியைப் பற்ற வைத்தார். வாயில் வைத்து ஒரு இழுப்பு இழுத்தார். திருப்தியுற்றவர் போல் சிரித்தார். அடுத்த கணம் பீடியைத் தூக்கி வேகமாக நெருப்பினுள் எரிந்தார். பிறகு, முகத்தை மூடிக்கொண்டு குமுறிக் குமுறி அழுதார்.

எங்கே அவர் நெருப்புக்குள் பாய்ந்து விடுவாரோ என்று பயந்த சுந்தரம் அவரிடம் ஓடி அவரைப் பின்னுக்கு இழுத்தான். வீம்பு ஏதும் செய்யாமல் அவர் அவனோடு வந்தார்.

''எங்க அம்மாவைப் பாத்தீங்களா''?

இந்தக் கேள்விக்குப் பதில் தெரிந்தவர் போலவும் ஆனால் சொல்ல முடியாதவர் போலவும் அவர் அவனைப் பார்த்தார், அவரது சுருக்கம் விழுந்த கன்னங்களில் வழிந்து கொண்டிருந்த கண்ணீரில் நெருப்பு பிரதிபலித்தது.

''எங்க அம்மாவப் பாத்தீங்களா ?''

அவர் காலனியின் பின்புறத்தில் ஓடிக்கொண்டிருந்த சாக்கடைக் கால்வாய்ப் பக்கம் கைநீட்டினார். 'ஹே .. அல்லா ' என்று கூறியபடி குனிந்து தரையில் கிடந்த மண்ணை அள்ளி நெருப்பில் எறிந்தார்.

அவர் காட்டிய திக்கில் ஓடிய சுந்தரம் நெருப்புக் குண்டத்தில் தூக்கி வீசப்பட்டவனாய்த் துடித்து 'அம்மா' என்று அலறி மயங்கிச் சரிந்தான்.

அங்கே அம்மா கிடந்தாள். பிறந்த மேனியாய், காம நகங்களின் கீறல்களால் ரணப்பட்ட மேனியாய், தீயின் நாவுகளால் அங்கங்கே தீண்டப்பட்ட மேனியாய்...

சுந்தரம் அந்தப் பெரிய மருத்துவ மனையின் கேட்டருகே நின்று கொண்டிருந்தான். அன்றைக்கு அவன் அம்மாவைப்பார்ப்பதற்காக அந்தத் தபால்காரர் வருவதாகச் சொல்லியிருக்கிறார். இந்த ஒரு வாரத்தில் அவர் அவனிடம் ரொம்பவும் ஒட்டுதலாகி விட்டார். தினமும் காலையில் அஞ்சலகத்தின் எதிரில் அத்தையின் வாழ்த்துக்காகக் காத்திருக்கும் அவனிடம் 'இன்னும் இரண்டு நாளில் உறுதியாய் வந்துவிடும்' என்று சொல்கிறார். அவனைத்தன் சைக்கிளில் ஏற்றி வைத்துக் கொண்டு அவனோடு பேசியபடியே தன் பணியைச் செய்கிறார்.

அவர் என்னதான் அவனிடம் நெருங்கிப் பழகினாலும் அவன் பட்டும்படாமலும் தாமரை இலைத் தண்ணீர் போல ஒட்டாமலே பழகினான். அவர் காட்டுகிறபரிவும் கனிவும்அன்பும் ரணப்பட்டிருந்த அவனது இதயத்துக்கு இதமாக இருந்தன. ஆயினும் அச்சம். அவரிடம் மட்டும் தானா இந்த அச்சம்? அங்கே நடமாடுகிற ஒவ்வொரு மனிதரிடமும் அதோ, மருத்துவ மனைக்குள் நுழைகிற, வெளியேறுகிற டாக்டர்கள், நர்சுகள், நோயாளிகள், பிறர்... இவர்களிலிருந்து யாரேனும் ஒருவர் திடீரென்று தன்னை அடித்துவிடக் கூடும் என்கிற அச்சம் கொடிய மிருகங்கள் உலவுகிற ஓர் அடர்ந்த காட்டுக்குள் ஒற்றையாய் இருட்டு நேரத்தில் சிக்கிக் கொண்ட அவஸ்தை அவன் தனது ஒவ்வொரு அடியையும் பதறிப்பதறித்தான் எடுத்து வைத்தான், ஏதோ முட்செடிகளாகப் படர்ந்து கிடக்கிற நிலத்தின் மீது நடக்க நேர்ந்தவன் போல். ஒவ்வொரு நிமிடத்தையும் எச்சரிக்கையோடு தான் கடந்து வந்தான். திடுமென ஏதேனும் பயங்கரம் நிகழ்ந்து விடும் என்று அவனுக்குள் தோன்றிக் கொண்டே இருந்தது.

அம்மாவுக்குச் சரியாகி விட்டால் ஊருக்குப் போய் நிம்மதிச் சுவாசத்தை அனுபவிக்கலாம். ஆனால், அவளால் இன்னும் எழக்கூட முடியவில்லை. எழ முயல்கிற போதெல்லாம் 'கடவுளே.'' என்று அலறிச் சாய்ந்து விடுகிறாள். உடம்பெங்கும் தீப்புண்கள் சொத சொத வென்று இருக்கிற அம்மாவப் பார்ப்பதே ஒரு கொடிய அனுபவமாய் இருந்தது. அதை விடப்பெரிய கொடிய அனுபவம், அவள் கண் விழிக்கிற போ-தெல்லாம் அப்பா எங்கே என்று கேட்பது.

அப்பா எங்கே? அவனும் தினமும் அவரைத் தேடவே செய்கிறான். அவரது கடை இருந்த இடத்தில், அவனுக்குச் தெரிந்த மருத்துவமனைகளில், அரைப் பிரேதங்களாக மனிதர்கள் வரிசையாகக் கிடத்தப்-பட்டிருக்கும் தாழ்வாரங்களில்... ம்ஹூம்.. அப்பா குறித்து ஒன்றுமே தெரியவில்லை... அப்பா என்ன ஆனார்? யூகக்குகைகளில் அவன் தேடிப் பார்த்தான், வெளியேறும் வழிகிடையாத இருட்குகைகள். ஆனாலும் அப்பா உயிரோடுதான் இருக்கிறார் என்று அவன் திடமாக நம்பினான். அம்மாவுக்குச் சுகமாகி, அப்பாவும் வந்து எல்லோரும் ஊர்போய்ச் சேருகிற சுபமுடிவே நிகழும் என்று அவன் நம்பினான். இந்தத் துயரம், வேதனை எல்லாம் தற்காலிகம் தான் என்றும், அவை யெல்லாம் சுபத்தை நோக்கிப் போகிற கரடுமுரடான பாதைகள்தாம் என்றும் அவன் எண்ணினான். அவன் கேட்டகதைகளிலும் பார்த்த சினிமாக்களிலும் அப்படித் தானே ஆகியிருக்கிறது.. அது போலவே அவர்கள் மூவரும் ஊர் போய்ச் சேரத்தான் போகிறார்கள்.

ஊரைப் பற்றிய நினைப்பு அத்தையைப் பற்றிய நினைப்பாகப் பரிணமித்தது. அவனளவில் ஊர் என்றால் அத்தை. அத்தை என்றால் வாழ்த்து. விதம் விதமான, சுந்தரம் என்ற பெயர் வருகிற, பாட்டு எழுதிய வாழ்த்து. அவள் இத்தனை ஆண்டுகளில் அனுப்பிய வாழ்த்துக்களில் ஒன்றுகூட இப்போது இல்லை. அவன் தன் இதயத்துக்கருகே போற்றி வைத்திருந்த அந்த பொக்கிஷங்களில் ஒன்றுகூட இப்போது இல்லை ஒரு தாய்ப்பறவை தன் குஞ்சுகளைச் சிறகுகளால் அணைத்துக் கொள்வது போல் அவன் பத்திரப்-படுத்தியிருந்த வாழ்த்துக்களில் ஒன்றுகூட இப்போது இல்லை.

அப்பா என்ன ஆனார் என்று தெரியவில்லை. அது துக்கம்தான் ஆனால் அவர் வந்துவிடுவார். என்ற நம்பிக்கை இருந்தது. அம்மாவின் உடல்நிலை மோசம் தான். அது சோகம்தான். ஆனால் அவள் சுகமாகி விடுவாள் என்ற நம்பிக்கை இருந்தது. ஆனால் எரிந்து கருகிச் சாம்பலான வாழ்த்துக்கள் ? தினமும் அப்பாவைத் தேடுவது போல் அத்தனை கவனத்துடன், ஒரு சாம்பல் மேடாகிக் கிடந்த அந்தக் காலனிப் பகுதியில் அவன் தேடுகிற போதெல்லாம் அவனது உடம்பிலும் உடைகளிலும் சாம்பல் தூசாய்ப் படிகிற அந்த வாழ்த்துக்கள்?... திருவிழா மறுநாளில் காகிதக் குப்பைகளை மட்டும் காற்றுப் பந்தாடிக் கொண்டிருக்க ஜன சஞ்சாரமற்று வெறிச்சௌக் கிடக்கிற கோயில் பொட்டலின் வெறுமையைப் போல் அங்கே நிலவிய கொடூர வெறுமை தன் கூரிய நகங்களால் அவன் இதயத்தைக் கீறிக் கிழிக்க அழுது கொண்டே அவன் தேடுகிற போது கிட்டாமல் ஏய்ப்புக் காட்டுகிற அந்த வாழ்த்துக்கள் ? இரும்பே உருகி உருக்குலைந்து கிடக்கிற போது கேவலம் காகிதத்தால் ஆன வாழ்த்துக்கள் ?

கிடைக்கும் என்றுதான் அந்தத் தபால்காரர் அழுத்த மாகச் சொல்கிறார். அவை வெறும் காகிதத்தால் ஆனவை இல்லையாம். அவை வெறும் மையினால் எழுதப்பட்டவை இல்லையாம்... அவை அன்பால் ஆனவை. இதயத்தில் ஊறுகிற அன்பைத் தொட்டு எழுதப்பட்டவை. அன்பு தீயால் எரிவதில்லை. அன்பு நீரால் கரைவதில்லை... இப்படிச் சொல்லி விட்டு அவர் விக்குவதைப்போல் விம்முகிறார். அடைத்திருந்த மூக்கு திறந்து கொண்டதுபோல் பெருமூச்சு விடுகிறார். அவரது கோணுகிற உதட்டின் வலது ஓரத்தில் ஒரு சிரிப்பு உருண்டு தொத்தி நின்று கீழே விழுகிறது. மீண்டும் 'அன்பு நீரால் அழிவதில்லை' என்று மந்திரம் உச்சரிப்பவர் போல் திரும்பத் திரும்பச் சொல்கிறார். அவரது நடவடிக்கைகளின் அர்த்தம் சுந்தரத்துக்குப் புரிவதில்லை. அவர் தன்னைக் கேலி செய்கிறாரோ என்று கூடத்தோன்றும். ஆனால் அவர் தனது தோளில் ஆதரவாய்த் தட்டுகிறபோது அந்த ஐயமும் படத்தைச் சுருக்கிச் சுருண்டு படுத்துவிடும். ஏன் இப்படிச் செய்கிறார்? ஏன் சிரிக்கிறார் என்ற கேள்வி களே எஞ்சி நிற்கும்...

'அன்பு நீரால் அழிவதில்லை.'

'இதில் என்ன இருக்கிறது?' என்று அவன் தன்னைக் கேட்டுக்கொண்டு இருந்தபோது அந்தத் தபால்காரரும் அவருடன் ஒரு பெண்மணியும் வருவதைக் கண்டான். அது அவரது மனைவியோ?...

அவனருகில் வந்ததும் அவர் அவளைத் தன்மனைவி என்று இவனுக்கு அறிமுகப்படுத்தி வைத்தார். அவனை அவளுக்கு அறிமுகம் செய்தார்.

''இவனே சுந்தர். இவன தாயி ஈ ஆஸ்பத்திரியில்—லித்தாரே.'' (இவன் தான் சுந்தரம். இவனது அம்மாதான் இந்த மருத்துவமனையில் இருக்கிறாள் )

அவள் இவனை நோக்கிக் கனிவு ததும்பப் புன்னகைத்தாள்.

''பாப்பா! .. தம்மா, நீவு சன்னாகித்தியா? நின்ன தாயி ஏகி இத்தாரே?'' (பாவம்! . தம்பி, நீ நன்றாக இருக்கிறாயா? உன் அம்மா எப்படி இருக்கிறார்?)

அருகேவந்து அவனது தலையை வருடிக்கொடுத்தாள். அவனுக்குக் கூச்சமாக இருந்தது.

''இம்து பெளிக்கே நீனு ஏனு திம்தே?'' (இன்று காலை நீ என்ன சாப்பிட்டாய்?)

அவன் ஒன்றும் சொல்லாமல் அவளது முகத்தையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தான். அது அவளது நிஜமுகத்தைத் தேடுகிற பார்வையோ என்று அவருக்குத் தோன்றியது.

அவள் தன் இடது கையிலிருந்த கூடையிலிருந்து ஆப்பிளை எடுத்து அவனிடம் நீட்டினாள்.

''ஸீபே தெகெது கொள்ளி'' (ஆப்பிள் எடுத்துக் கொள்ளுங்கள்)

அவன் தலையை ஆட்டி மறுத்தான்.

''வாங்கிக்க'' அவர் சொன்னார்.

சாலையில் விரைகிற ஒரு மோட்டார் பைக்கைப் பார்த்துக் கொண்டு ''அவன் வேண்டாம்'' என்றான்.

''அம்மாவைப் பார்க்கப் போவமா?'' அவர் கேட்டார்.

அவன் தலையை ஆட்டி ஆமோதித்தான்.

அவர்கள் அம்மா படுக்க வைக்கப்பட்டிருந்த வரண்டாவுக்குப் போனார்கள்.

அம்மா விழித்திருந்தாள். அவள் முகமெங்கும் வேதனை ரேகைகள் படர்ந்திருந்தன. தன் மகனுடன் வருகிற அவர்களை அவள் ஐயத்துடன் பார்த்தாள். சற்று அருகில் வந்ததும் அவள் அவரைத் தெரிந்து கொண்டாள். தபால்காரர்,அவள் அவரதுமனைவியோ?.

''நமஸ்காரம்''

இருவரும் சொன்னார்கள்

அவர்களைக் கையெடுத்துக் கும்பிட முயன்று அம்மா தோற்றாள்.

''உங்களுக்கு என்னைத் தெரியுதுங்களா?'' அவர் கேட்டுவிட்டு அவள் பதிலை எதிர்பாராமல் தன்னைச் சுய அறிமுகம் செய்து கொண்டார்.

''தபால்காரர், இது என்னோட சம்சாரம்.''

''தெரியும். வாங்க''

அம்மாவின் தலைமாட்டில் அந்தஅம்மாள் அமர்ந்து கொண்டாள். அவரும் அவனும் அவளது கால்மாட்டில் வரண்டாச் சுவரில் சாய்ந்து நின்றுகொண்டார்கள்.

''நிம்மகே கஷ்டக் கொட்டவர தேவரு கண்டிப்பாகி தண்டனெ கொடுத்தாரே... ஈக எங்கித்திரே? டாக்டர்களு சன்னாகி நோடுத்தாரா?'' [உங்களுக்குத் துன்பம் இழைத்தவர்களைக் கடவுள் நிச்சயம் தண்டிப்பார். இப்ப எப்படி இருக்கிங்க? டாக்டர்கள் நன்றாகப் பார்த்துக் கொள்கிறார்களா?] அந்த அம்மாள் அம்மாவின் கையை எடுத்துத்தன் மடியில் வைத்துக்கொண்டு ஆறுதலாய்ச் சொன்னாள்.

அம்மா புன்னகைத்தாள். அவளது கண்கள்கலங்கின.

''பேகவே உஷாராகி விடுத்திரே... பேஜார் மாடபேடி தேவன் ஒப்ப இத்தானே.அவன்நோடுகொள்த்தானே'' [சீக்கிரம் குணமாகி விடுவீர்கள். கவலை வேண்டாம். கடவுள் ஒருவர் உண்டு அவர் பார்த்துக்கொள்ளுவார்.] சொன்ன அம்மாள் கூடையிலிருந்து ஆப்பிள்பழங்களை எடுத்து அருகே வைத்தாள்.

''இதெல்லாம் எதுக்கு .?'' அம்மா முனங்கினாள்.

''சும்மா தெகெது கொள்ரீ. நான் வேறயாரில்ல நிம்ம ஹக்கா ஹங்கே.'' [சும்மா எடுத்துக் கொள்ளுங்கள் நான் வேறு யாருமில்லை. உங்கள்அக்கா போலே]

அப்போது பக்கத்தில் படுக்க வைக்கப்பட்டிருந்த ஒரு பெண் அம்மாவிடம் கேட்டாள்:

''இவங்க யாரு?''

அம்மா பதில் சொல்ல யோசித்துக் கொண்டிருந்த போது அவர் சொன்னார்.

''சொந்தக்காரங்கன்னு வச்சுக்குங்களேன்''

''சொந்தமா?''

கேட்டுவிட்டு அவள் மீண்டும் கண்களை மூடிக்கொண்டாள்.

அவள் கேட்ட கேள்வியும் தாம் சொன்ன பதிலும் தபால்காரரின் சிந்தனையை எங்கெங்கோ இழுத்துச் சென்றன.

மனிதனுக்கு மனிதன் அன்பும், ஆதரவும், கனிவும் பரிவும் காட்டுவதற்கு ஏதாவது முகாந்தரம் இருந்து தான் ஆகவேண்டுமா? சொந்தம், இனம், மொழி, . இவற்றின் அடிப்படையில்தான் நேசம் பிறக்க முடியுமா? பிணைப்புக்குக் காரணமாகக் கருதப்படுகிற இவையே பேதத்துக்கும் காரணமாகி விடுவது ஒரு வகையில் வேடிக்கைதான்... வேதனையும் தான்... பேதத்துக்கும் பிணைப்புக்கும் காரணமாகிற இவைகளின் துணை இல்லாமல்... மனிதனுக்கு மனிதன் என்கிற உறவு எப்போது முகிழ்க்கும்?... எத்தனை கவிஞர்கள், எத்தனை பிரசங்கிகள், எத்தனை போதகர்கள் அவர்கள் சொன்னவையெல்லாம் வெறும் ஆசைகள் தாமா?...

புத்தகங்களில் படித்ததையெல்லாம் தான் நம்பியதையும், அவைகள் உருவாக்கிக் காட்டுகிற உலகத்தைத்தன் கண் முன்னே கண்டு விடுவோம் என்ற முனைப்புடன் தான் உழைத்ததையும், அந்த நம்பிக்கையும் முனைப்பும் எண்ணற்ற சூறாவளிகளால்

அலைக்கழிக்கப்பட்டது. நாடி தளரத்தொடங்கிய பிறகு, அந்த நல்லெண்ண தீபம் சுடர் விட்டுப் பிரகாசிக்கா விட்டாலும், சிம்னி விளக்குச் சுடர் போல், தூரத்து நட்சத்திரத்தின் மினுக்கம்போல் ஒளி கசிந்து கொண்டிருப்பதும், இதோ,இங்கேவரண்டா முழுதிலும் படுக்க வைக்கப் பட்டிருக்கிற மனிதர்களின் துக்கத்தையும் சோகத்தையும் துடைத்து எறியத்தனக்குள் ஒரு கரம் உயர்வதும், அந்தக் கரத்தை இயலாமை என்கிற மாயக்கயிறு பின்னுக்கு இழுப்பதும், மழையில் நனைந்த மக்களுக்காக கோவர்த்தன மலையைக் குடையாக்கிப் பிடித்த கிருஷ்ணனைப் போல் தன் இதயத்தையே இந்தப் பாவப்பட்ட மக்களுக்காக குடையாக்கிப் பிடிக்கும் உத்வேகம் எழுவதையும் கேவலம், ஒரு செங்கலைக் கூடத் தூக்கிப் பிடிக்க முடியாத யதார்த்தத்தின் கருணையற்ற உதையும் அவரது சிந்தனையில் கோலமிட்டுக் கொண்டிருந்தன ..

அந்த வழியே போன நர்ஸ் ஒருத்தி நடப்பதற்கு இடைஞ்சலாக நின்றமைக்காக அவர்களை எரிப்பார்வை பார்த்தாள். தபால்காரர் கிளம்பத்தயாரானார். ''நாங்க கிளம்புறோம். அம்மா தைரியமா இருங்க. இவன் அப்பா இங்கேதான் எங்கேயோ இருக்கார். நிச்சயம் உங்களை வந்து சந்திப்பார். எனக்குத் தெரிந்த போலீஸ்காரங்க இருக்காங்க. அவங்க மூலமா அவரைக்கண்டு பிடிச்சிருவோம்... எல்லாம் நல்லபடியா முடியும். தைரியமா இருங்க''

அவர் சொல்லுவது போல ஆக விரும்புபவள் போல் அம்மா புன்னகைத்தாள்.

''அம்மா ஓகி பருத்தினி'' அந்தப் பெண்மணியும் விடை கேட்டுக்கொண்டாள்.

''ஆயித்து'' அம்மா கன்னடத்தில் அவளிடம் 'வாங்க' என்றாள்.

மூன்று பேரும் மருத்துவமனையை விட்டு வெளியே வந்தனர். வரண்டாவில் நடந்து வரும் போது யாருடைய காலையும் இடித்து விடாமல் நடக்க வேண்டும் என்பதற்காக அவரும், அவரது மனைவியும் வழுக்குப் பாறையில் நடக்கிற எச்சரிக்கையோடு நடந்தது அவனுக்கு விநோதமாக இருந்தது

சாலைக்கு வந்ததும் வேறு உலகத்துக்கு வந்தது மாதிரி இருந்தது. படுக்க வைக்கப்பட்டிருக்கிற மனிதர்களின் உலகம், உள்ளே. நடந்தும், ஓடியும், வாகனங்களில் பறந்தும் பரபரப்பாய் இயங்கிக்கொண்டிருக்கிற மனிதர்களின் உலகம், வெளியே.

அந்த அம்மாள், சுந்தரத்தின் கையைப் பிடித்துக் கொண்டு கொஞ்சுகிற பாவனையில் சென்னாள்.

''தம்மா, நீ நம்ம மனைஹே பருத்தியா .. அம்மா, உஷாரான மேல நீவு எல்ரு நம்ம மனைஹே கண்டிப்பாக பருபேக்கு'' [தம்பி, நீ எங்க விட்டுக்கு வாயேன். அம்மா குணமான பின்னால் நீங்க எல்லோரும் எங்க வீட்டுக்கு அவசியம் வரணும்.]

சுந்தரம் அவள் முகத்தையே பார்த்துக் கொண்டு நின்றான்.

''சரி, நீவு மனைஹி ஓஹி .. நாவும் மத்து சுந்தரு போலீஸ் நஞ்சப்பாவ நோடி பருத்தி வி'' [சரி, நீ வீட்டுக்குப் போ. நானும் சுந்தரும் போலீஸ் நஞ்சப்பாவைப் பார்க்கப் போறோம்.] அவர் அவளை வீட்டுக்கு அனுப்பினார்.

அவள் புறப்பட்ட பிறகு, அவனும் அவரும் எதிர்த் திசையில் அப்பாவைத் தேடிப்புறப்பட்டார்கள்.

அவனைக் காணவில்லை.

ஏற்கனவே இலைகளை உதிர்த்து விட்டு கருகி மொட்டையாய் நின்றிருந்த அந்தமரத்தின் இன்னொரு பகுதியையும் யாரோ வெட்டி எடுத்து விட்டது போல் அவருக்குத் தோன்றியது. வழக்கமாக இந்நேரம் அங்கே வந்து நின்று விடுகிற அவனைக் காணாததால் அவன் வராமைக்கான காரணங்களை யூகிக்க முயன்று அவரது மனம் துணுக்குற்றது.

'அவன் அம்மா?... நேற்று பரவாயில்லாமல் தான் இருந்தாள். நேற்று அவன் அப்பாவைத் தேடுகிற முயற்சியில் தோல்வியுற்றதைப் போய்ச் சொல்ல நம்பிக்கைப் பிடிமானம் நழுவி... இருக்காது. இருக்கக் கூடாது...'

''ஏனு தொட்டாரே. அவன நோடியே நிம்ம கன்னு அம்மரத்தரவே நோடுத்தாயிதே''(என்ன பெரியவரே. அவனைத் தேடி உங்கள் கண் அந்த மரத்தடியையே சுத்துதே.)

உடன் வேலை பார்ப்பவர்களின் கேலிப்பேச்சு அவரது காதுகளில் விழுந்து கொண்டுதான் இருந்ததுஇன்னும் கொட்டகைகூடப்போட்டுத் தராமல் நிர்வாகம் இழுத்தடித்துக் கொண்டிருப்பதைப் பற்றி அவர்கள் பேசிக் கொண்டிருந்ததும் அவருக்குக் கேட்கவே செய்தது. அவர் எந்தப் பேச்சிலும் கலந்து கொள்ளாமல் தபால்களைப் பிரித்துக் கொண்டிருந்தார். நேற்று, மருத்துவமனைக்கு அவனை அனுப்பிவிட்டு அவனுக்காகத் தான் ஒரு வாழ்த்து அட்டை வாங்கியதையும், அவன் அப்பா கிடைப்பாரா; அவன் அம்மா பிழைப்பாளா?; அப்பாவும் அம்மாவும் இல்லையென்றால் அவனது எதிர்காலம் என்ன? என்பது பற்றியெல்லாம் தன் மனைவியோடு விவாதித்ததைப் பற்றியும் அவரது மனம் எண்ணிக் கொண்டிருந்தது. 'அப்படி ஏதும் துரதிருஷ்டவசமாக நடந்து விட்டால் அவனை நம் வீட்டுக்கு அழைத்துக் கொண்டு வந்து விடுங்கள். இங்கே இருந்து விட்டுப் போகட்டும். அவன் என்ன பெரிய சுமையா?... புண்ய காரியமாயும் இருக்கும் தன்மனைவி சொன்னதை அவர் அசை போட்டுக் கொண்டிருந்தார். காலம் முழுதும் நிறைய நிறையப் பேசிவிட்டு ஒரு தபால்காரனாகவே ரிடையராகப் போவதற்காகத் தன்னை அடிக்கடி நோகும்படி பேசுகிற அவளிடமே இப்படி ஒரு மறுபக்கம் இருப்பதையும் அது அவ்வப்போது வெளிப்படுவதையும் பற்றிக்கூட அவர் வியப்போடு யோசித்தார். நடைமுறைக் காரியங்களில் 'பக்கா ரியலிஸ்டாக' இருக்கிற பெண்கள் மானுட நேயம் என்று வருகிறபோது ஐடியலிஸ்டாக இருக்கிற

முரண் அவருக்கு ஆச்சரியம் அளித்தது. கூடவே அவனுக்காக வாங்கியிருந்த வாழ்த்து அட்டையில் கன்னடத்தில் முகவரி எழுதப்போன போது அவன் ஆங்கிலத்தில் எழுதுமாறு சொன்ன புத்திசாலித் தனமும் நினைவுக்கு வந்தது. அந்த வாழ்த்து அட்டையில் கல்பனா என்று எழுதுவது பொய்க்-கையொப்பம் இடுவது ஆகாதா என்று தான் தயங்கியதையும் தருமன்—அசுவத்தாமன் இறந்தான் என்று பொய் சொன்னதை அவள் நினைவு படுத்தியதையும் நினைத்துக் கொண்ட அவர் தனக்கு அப்படி ஒரு மனைவி அமைந்தமைக்காகக் கடவுளுக்கு நன்றி கூறிக் கொண்டு எழுந்தார்.

இன்னும் அவன் வரவில்லை. வந்தால் அந்த வாழ்த்தை அவனிடம் கொடுத்து விடலாம். அதைக் கண்டதும், பாலைவனத்தில் அலைய நேர்ந்தவன் தண்ணீரைக் கண்டதும் மகிழ்வதுபோல் அவன் முகத்தில் மகிழ்ச்சி பூப்பதைக் காணலாம். ஆனால் அவனைக் காண வில்லையே... என்னாயிற்று?...

இதே கேள்வியோடும், அந்தக் கேள்விக்கான யூகமான பதில்களோடும் தனது கடமையை முடித்து விட்டு மருத்துவமனைக்கு விரைந்தபோது சுந்தரம் மருத்துவ மனையிலிருந்து வெளியேறிப் போய்க் கொண்டிருப் பதைக் கண்டார்.

சைக்கிளில் அவனை வேகமாகப்பின் தொடர்ந்தார்.
''சுந்தர்...''

அவனை அழைத்துவிட்டு அவனிடம் கொடுப்பதற்காக அந்த வாழ்த்து அட்டையை எடுத்துக் கொண்டு சைக்கிளை விட்டு இறங்கினார். ஆனால் அவன் முகத்தைப் பார்த்ததும் அதிர்ந்து போனார்.

இவரைப் பார்த்ததும் அவன் தேம்பித் தேம்பி அழுவானான்.
''ஏன்... ஏன்? ''
''...''
''சுந்தர், அம்மாவுக்கு...''
அவன் கண்களிலிருந்து நீர் கொட்டியது
''அம்மா அம்மா... செத்துப்போச்சு ..''
''என்ன? ..''
அவனை இடது கையால் அவர் தன்னோடு சேர்த்துக் கொண்டார். ஏதாவது ஆறுதலாய்ச் சொல்ல வேண்டும் என்று வார்த்தைகளைத் தேடினார். அது, வார்த்தை-களினால் மாற்ற முடியாத சோகம் என்பதையும் அவர் அறிவார்.
அவன் அவரை விலக்கிக்கொண்டு மேலே நடந்தான்.
''நீ எங்க போற?''
''ம்... ஊருக்கு...''
இவரைத் திரும்பிப் பார்க்காமல் பதில் சொல்லிவிட்டு அவன் வேகமாக நடந்தான். அவர் சைக்கிளைத் தள்ளிக் கொண்டு அவனைத் தொடர்ந்தார்,
''ஊருக்கா?''
''...''
''ஊருக்காப் போகப்போறே?''
''ம்''
''முன்னே போயிருக்கியா?''
''ம்ஹூம்''
''ரூட்டாவது தெரியுமா?''
''ம்ஹூம்''
''பின்னே எப்படிப் போவே?''
'' ''
அவனது வேகமான நடைக்குத்தோதாகச் சைக்கிளைத் தள்ளிக் கொண்டு நடப்பது அவருக்குச் சிரமமாக இருந்தது.
''ஊருக்குப் போற ரூட் தெரியாதுங்றே எப்படிய்யா போவே? .''
'' ''
''உன்னை என் சம்சாரம் வீட்டுக்குக் கூட்டிட்டு வரச் சொன்னா, நீ வந்து எங்க கூட இருந்துக்கலாம்''
''...''
''ராத்திரிப் பூரா வீட்ல உன் பேச்சுத்தான். என் சம்சாரத்துக்கு உன்மேல பிரியம் அதிகம். அவ உனக்கு அம்மா மாதிரி இருப்பா...வா...போகலாம்...''
''...''
அவன் இன்னும் வேகமாக நடந்து கொண்டிருந்தான்.
''வா போகலாம்''
அவன் தலையை உலுக்கி மறுத்தான்.
''ஏன்?''
'' . ''
''ஏப்பா வர மாட்டே?''
''...''
''வாய்யா ஏன் மாட்டேங்றே ?''
''நீங்களும் ஒரு கன்னட ஆளு ''
சொல்லிவிட்டு அவன் வேகமாக ஓடினான்.
தான் அணிந்திருந்த ஆடைகளை உருவி நடுத்-தெருவிலே நிர்வாணமாக்கி அந்த ஆடைகளைக் கொண்டே தன் முகத்தில் யாரோ அறைந்தது போல அதிர்ந்து நின்ற அவரது கண்ணாடியில் பனி படர்ந்தது; அவர் கையிலிருந்து நழுவி விழுந்த வாழ்த்து மடலைக் காற்று அடித்துக் கொண்டு போனது ..

★

'ஒழிவறு நோயிற் சாவார்
ஊக்கம்ஒன் றறிய மாட்டார்
அழிவறு பெருமை நல்கும்
அன்னை! நின் அருள்பெறாதார்.'
—பாரதியார்

# அந்தக் கடிதம்

## ஆ. சந்திரபோஸ்

'அன்பார்ந்த இயக்கத்தலைவருக்கு ..'

—ஒருநாள் இரண்டு நாளல்ல. பதிமூன்று நாட்களாக அந்தக் கடிதம் ஒரு வரிக்கு மேல் நகரவே இல்லை. எழுத முடியாதவர் அல்ல. நேரம் கிடைக்காமலும் இல்லை. அது முடியாத முடிவும் அல்ல. தீர்மானித்த விஷயந்தான். இன்று எவ்வாறேனும் முடித்து விட்டுத் தான் தூங்கச் செல்ல வேண்டும். என்று திட்டமிட்டிருந்தார். பார்வையாளர்கள் எல்லோரும் கூட சந்தித்து விட்டுப் போய்விட்டார்கள்.

......கட்சி பூரணத்வம் இல்லாத நிலையில் ஜனங்கள் நம்மை அங்கீகரித்தார்கள். அந்த அங்கீகாரத்திற்கு நன்றிக்கடன் செலுத்துவதோடு மட்டும் ஒரு கட்சி நின்றுவிடக் கூடாது. தன்னை மிகப்பெரும் இயக்கமாக வளர்த்துக் கொள்ள வேண்டும். பின்பு, ஆட்சியில் இருந்தாலும் போனாலும் அந்த வலிமையில் நிற்கும், கட்சி, செய்தோமா?

நம்மை சேர்ந்த உயர்மட்டக்குழுவினர் சம்பாதித்து குட்டி முதலாளிகளானதையும், அதிகாரம் முழுக்கக் கையிலெடுத்து அதிகாரிகளைப் பின்னுக்குத் தள்ளி நிர்வாக சீர்குலைவுக்கு நம்மவர்கள் வித்திட்டதையும் நாம் எங்கே தடுத்து நிறுத்தினோம்?

தேசிய வளர்ச்சியை நாம் கண்டு கொண்டதும் கிடையாது; தேசியத்துயரங்கள் நம்மைப் பாதித்ததும் கிடையாது. நம்மைச் சுற்றி நாம் போட்டுக் கொண்ட 'வடிவம்' என்ற கட்சிக்கு என்ன பொருள். அல்லது என்னதான் பொறுப்பு?

நம்மை ஆதரித்த ஜனங்கள் நம்மீது சந்தேகம் கொள்கிறார்கள். அவர்களது சந்தேகத்தை அகற்றும் பணியை செய்யாமல், நமது பின்னடைவை இன்னும் புதிய புதிய ஜிகினாக்கள் ஒட்டி நியாயப் படுத்தவே முயன்றோம். இவற்றோடு எனக்கு சற்றும் உடன்பாடில்லை. உடன்பாடு இல்லை என்பதை எல்லா கட்சி அரங்கங்களிலும் வெளியிட்டிருக்கிறேன்.

—அதைப்பற்றியெல்லாம் எவரும் கண்டு கொள்ள வில்லை. என்னை சரிக்கட்டுவதில்தான் எல்லோரும் முனைப்பாக இருந்தீர்கள். ஒரு கட்சி, சமூக வளர்ச்சிக் கேற்ப தன்னையும் வளர்த்துக் கொண்டு, தன் அணியினரையும் வளர்த்து, தான் சார்ந்த சமூகத்தையும் ஈர்க்கும் மகா சக்தியாக பரிணமிக்க வேண்டும் என்பதை காலமும் உங்களுக்கு சொல்லி அலுத்துப் போய் விட்டேன்......

—ஆம், மனதில் உள்ளவை எழுத்துக் கோர்வையில் மிகவும் சரியாகவேதான் வருகிறது. நிறுத்தப்பட்டிருந்த கடிதம் இவ்வாறுதொடர என். கோமதி நாயகம் எம்.எல்.ஏ. மற்றும் தலைமை குழு உறுப்பினர் என்று அச்சிடப்பட்ட லெட்டர் பேடில்தான் அவர் எழுதினார்.

'......முப்பது ஆண்டுகளுக்கு முன்னாள் நாம் முதன் முதலில் சந்தித்துககொண்ட மேடை என் நினைவுக்கு வருகிறது. அது என் கல்லூரி இலக்கிய விழா. நான் தான் செயலாளர். தமிழ் இலக்கியத்தில் நான் மூன்றாம் ஆண்டு மாணவன். நான் உங்களை அழைத்துக்கடிதம் எழுதுகிறேன். என் அழைப்பை மதித்து நீங்கள் மேடையில் தோன்றுகிறீர்கள்......

—சே, கடிதம் நகரத் தொடங்கி விட்டதே! அவருக்கு சந்தோஷம். இதெல்லாம் கூட எழுதவேண்டுமா?

பேனாவை மூடி வைத்து விட்டார். கல்லூரி வாழ்க்கை இதமானது. நினைக்க மட்டுந்தானா? வட்ட நிலவைப் போல். வானவில்லைப் போல. அந்த சுகம் எத்தகைய வாழ்க்கை எல்லையிலும் இல்லை.

—அந்த மேடைதான், தன் அரசியல் பிரவேசத்தின் தோற்றுவாய். இன்ன கட்சிக்காகத்தான் இனிபாடுபட வேண்டும் என்ற முத்திரையைப் பதித்துக் கொண்ட நாள் அது.

அன்று அந்த மேடை இலக்கியத்துக்காகப் போடப் பட்டதுதான் என்றாலும், அரசியல்தான் பேசப்பட்டது. 'மாணவர்கள் தங்களது பொறுப்புகளை உணர்ந்து செயல்பட வேண்டும். அரசியலில் ஈடுபடக் கூடாது. என்று சிலதலைவர்கள் கூறுகிறார்கள். அவர்களுக்கு நானொன்று கூறிக் கொள்கிறேன். வகுப்புகளைப் புறக்கணித்துவிட்டு தேச விடுதலைக்காகப் போராட வாருங்கள். காந்தியடிகள் அன்று அறை கூவல் விடுத்தார். மாணவ சமுதாயம் சமுத்திரமாய்க் கொந்தளித்து எழுந்தது. அது சமூகத்தின் நிலையை உணர்ந்து கொண்ட மாணவப் பொறுப்பு. தேசம் சிக்கலில் சிக்கிக்கொண்டால் மாணவனுக்கு வகுப்பறை தேவையில்லை......!'

நாளென்ன. பொழுதென்ன. மாதமென்ன. வருஷமென்ன...... நினைவுகள்; நினைவுகள்; நினைவுகள்.

'பதினாறடி வேங்கை என்பார்கள். பதினெட்டடி வேங்கையை இன்று நான் கண்டு கொண்டேன். ஆம். சிக்கெனப்பிடித்து விட்டேன்' என்று அந்தத் தலைவர் தன்னைப்பற்றி அந்த இலக்கிய மேடையில் குறிப்பிட்ட போது... கடலலையைப்போல் கரவொலி எழுந்தது இன்னும் கூட அவர் காதுகளை விட்டு அகன்றதாய்த் தெரியவில்லை. அதுமட்டுமல்ல. கோமதி நாயகத்தின் அறைக்கே அந்தத் தலைவர் வந்து விட்டார்.

அன்று அவர் அடைந்த மகிழ்ச்சி சாதாரணமானதா? அன்று அந்தத் தலைவர் வெறும் எம்.எல்.ஏ. வாகத் தான் இருந்தார். அவர் பேசிய மொழி, அவர் கற்ற கல்வி ஞானம், புதிய வரலாறு படைக்க அவர் விடுத்த அழைப்பு கோமதி நாயகத்தை மட்டுமா தட்டி எழுப்பியது?

ஒரு நாள்......

இப்படிச் சொன்னார் தலைவர்! ''தம்பி உன்னிடத்தில் நான் ஒரு பொறுப்பை ஒப்படைக்கப் போகிறேன்''

''உத்தரவிடுங்கள் தலைவர்''

''தலைவர் என்று சொல்லாதே!''

''என் உடன் பிறவாச்சகோதரன்தான் நீங்க. ஆனாலும் எனக்குத் தலைவனல்லவா. உத்தரவிடுங்கள்''

''உன்னை எம்.எல்.ஏ. வாக ஆக்கப் போகிறேன், கட்சியின் முக்கியப் பொறுப்பையும் உன்னிடத்தில் ஒப்படைக்கப் போகிறேன்.

'..... மறுவார்த்தை பேசினேனா தலைவா. சிரமேற் கொண்டு அன்றுஉங்கள் உத்தரவுக்குக்கீழ்ப்படிந்தேன். நீங்கள் கொடுத்த பொறுப்பைச் செயல்படுத்துவதற்கு ஒத்துக் கொண்டேன். மானுட சமூகத்தினை ஒழுங்கு படுத்தி மேன்மைப் படுத்தும் ஒரு ஒப்பற்ற பணியாகத் தான் அந்த உத்தரவை நான் எடுத்துக் கொண்டேனே-யொழிய எனக்கு ஏதோ உயர்வு வந்து விட்டதாக அன்றும் நினைக்கவில்லை. இப்போதும் நான் அப்படி நினைக்க மாட்டேன் என்பது உங்களுக்குத் தெரியும்...

பேனா கடப்பாறையைப் போல் அவருக்குக் கனத்தது. அதிலிருந்து இங்க் வெளிவருவதாகத் தெரியவில்லை, அர்த்தமற்று, சிறுபிள்ளைகள் கிறுக்கி விளையாடும் வேலையையா தான் செய்கிறோம்?

தொண்டை வறண்டு போயிற்று.

''மாதவி'' மனைவியை அழைத்தார்.

''என்னங்க''

''நீ எம்.எல்.ஏ. பெண்டாட்டிதானே!''

''ஏன் இப்படி திடீர்ன்னு சந்தேகம் வந்துட்டது?''

''என் வாழ்க்கையில் எனக்குக் கிடைத்த பெரிய சொத்து நீ தாம்மா''

''ஏங்க என்னவோ மாதிரி இருக்கிறீங்க. காபி கொண்டு வரட்டுமா?''

அவள் குறிப்பறிந்தவள்.

''கொண்டுவா தாயி''

காபி கொண்டு வந்தாள்.

''இப்படி உட்கார்''

''இல்லை. ஏதோ வேலையா இருக்கிறீங்க. நான் ஏன் தடை செய்யணும்?''

''வேற ஒன்னும் இல்லம்மா. எங்க தலைவருக்கு நான் ஒரு கடிதம் எழுதுறேன். சுமார் ரெண்டு வாரமா, கடிதம் எழுதத் தொடங்கினவுடனே, என்னவோ தலையில இருக்கிற சுமை மனசுல நுழைஞ்சிட்டது மாதிரி இருக்கு''.

''மனச்சங்கடத்துல இருக்காப்போல தெரியுது. ரெஸ்ட் எடுத்துட்டு நாளைக்கு எழுதுங்களேன்''. டேபிள் பேனை அவன் முகத்துக்குநேரே திருப்பினாள்.

இதமாகக் காற்று வந்தது.

''மாதவி, உன்கிட்டே நான் ஒரு கேள்வி கேட்கணும்''.

''என்னவாம்?''

''ஒரு எம்.எல்.ஏவுக்கு பதினஞ்சு வருஷம் மனைவியா குப்ப கொட்டிட்ட. நீ அடஞ்ச சந்தோஷந்தான் என்ன?''

''ஏங்க இப்படிச் சம்பந்தா சம்பந்தமில்லாமக் கேட்கிறீங்க?'' மனைவியின் கண்கள் கலங்கின.

''உங்களுக்கு மனைவியா இருக்கிற பாக்யத்தை விடவும் என்னங்க சந்தோஷம் வேணும்?''

—மாதவி போய்விட்டாள். அவளோடு பேசிக்கொண்டிருந்தது மனதுக்கு ஒத்தடம் கொடுத்ததைப் போல் இருந்தது. இந்தக் கடிதத்தை எழுதி முடிக்கும் டானிக்-காகக்கூட அது அமையும் என்று நம்பினார். ஒரு கணவன் ஏன்ற முறையில் இந்தக் கடிதம் சம்பந்தமாக இவளோடு ஒரு விவாதம் நடத்தினால் என்ன என்று கூடத் தோன்றியது. ஆனாலும், இது கட்சி தேசம் சார்ந்த விஷயங்கள் என்று எண்ணித் தயங்கினார். ஆனாலும் என்ன எழுதுகிறீர்கள் என்று கூடக் கேட்கத் தோணாத மனைவியின் நாகரிகத்தை எண்ணி மனதுக்குள் பெருமைப்பட்டுக் கொண்டார்.

'... அரசியல் தலைமை என்பது நாடகப்பாணி அல்ல, அது யதார்த்தம் சம்பந்தமானது, அங்கே வேஷங்-களுக்கு இடமில்லை வெட்ட வெளிச்சமானது. இது எனது வரிகள் அல்ல தலைவரே! நீங்கள் என்னிடத்தில் மனம் விட்டுக் கூறியதுதான். —அது நமது முதல் வெற்றி விழா ஆட்சிக் கட்டிலில் அமர்த்திய வெற்றிக் களிப்பில் மிதந்து வந்த ஊர்வலம் அது இது ஊர்வலமா—ஜனத்திரளின் ஒட்டு மொத்தமா? .'

எழுதுவதை விடவும் அந்தக் காட்சிகள் நினைப்பதற்கு நன்றாக வருகிறது. எவரிடமாவது சொல்வதற்குக்கூட அது இலகுவாகத்தான் இருக்கும்.

''தம்பி கோமதி'' —சுற்று முற்றும் பார்த்தார் தலைவர் வெற்றிப்போதை தலைக்கு ஏற மற்றவர்கள் அமர்ந்-திருந்தார்கள்.

''இந்த வெற்றியை நீ எதிர்பார்த்தாயா?''

'இல்லை''

''மகாசமுத்திரமே பொங்கிப் பிரவகித்து வருவதைப் போல்... இவ்வளவு ஜனக்கூட்டத்தை நீ எதிர் பார்த்தாயா?''

''இல்லை''

''அதுபற்றி நீ என்ன நினைக்கிறே?''

''புதிய செயல் திட்டத்துக்கான ஜனங்களோட வரவேற்பு''.

''இந்த எதிர்பார்ப்பை நாமஎப்படி நிறைவேற்றுவது''?

'.. மற்றவர்களுக்கு கேட்காமல்என்னிடத்தில் மட்டுமே இந்தக்கேள்வியை கேட்டீர்கள். எனக்குப் பெருமையும், சந்தோஷமும் தாங்க முடியவில்லை. மதி நுட்பமும், அன்பின் வடிவமும் கொண்ட தாங்கள், என் தோள் மீது கைவைத்தபடி ஊர்வலத்தைக் கண்ணுற்றீர்கள். நான் வெறும் பிரமிப்பு மட்டும் அடையவில்லை ..

—கட்சியின் உயர் கமிட்டிக் கூட்டங்கள் வரிசை வரிசையாக அவனது மனக்கண்களின் முன்னால்வந்து போயின. ஆனாலும் தலைவர் மட்டும் மாறாத அன்புடன் அவனோடு மதியஉணவு உண்பார். அல்லது

தனியாக அழைத்துப்போய், "தம்பி நீ அறியாததா? நீ இங்கே இருக்க வேண்டியவன் அல்ல. ஐ.நா. சபையின் பொதுச் செயலாளராகப் பதவி வகிக்க வேண்டியவன். ரியலி .. நான் மிகைப்படுத்தவில்லை, நீ எழுந்து பேசினால் மந்திரியாகட்டும், எம் எல்.ஏ. வாகட்டும், கதிகலங்குகிறான்''. என்று மெய்யாலுமே அவர் தன்னைப் புகழ்ந்துரைத்த உரைகளுக்கெல்லாம் கூட நன்றிக்கடனுக்காக ஏதேனும் செய்ய வேண்டும் என்று அவன் ஒரு போதும் எண்ணியதில்லை.

'...... உனக்குப் பொறுப்புள்ள மந்திரி பதவி தருவதாக உத்தேசித்துள்ளேன் என்றீர்கள். உங்கள் அன்பான கட்டளைக்குக் கீழ்ப்படிந்து நடப்பதைத் தவிர வேறொன்றும் அறியாத நான் முதல் முறையாக அதை ஏற்க மறுத்தேன். ஏன் என்று கேட்டீர்கள். சொல்லத் தயங்கினேன். நான் என்ன சொல்ல நினைக்கிறேன் என்பது உங்களுக்குத் தெரியும், இருப்பினும் என் வாயிலிருந்து அதை வரவழைக்க வேண்டுமென்று விரும்பினீர்கள். நான் ஒரு உண்மையை சொல்லட்டுமா என்றேன். சொல் என்றீர்கள். நமக்கு லட்சியப்பற்று என்பதை விடவும் அதிகாரத்தைக் கையிலெடுக்க வேண்டும் என்ற ஆவலே மிகுந்து இருந்தது. மிகைப் படுத்தப்பட்ட உண்மைகளையும், பொய்களையும் ஒன்றாக்கி ஜனக்காட்டில் தூவினோம். நாம் நினைத்துப் பார்க்க முடியாத விளைச்சலை அறுவடை செய்தோம். நீங்கள் மலைத்தீர்கள் ....'

—கொஞ்சம் அதிகமாக எழுதிவிட்டதைப் போல் உணர்ந்தார் கோமதி நாயகம். மீண்டும் எழுதியதை முதலில் இருந்து படிக்கத் தொடங்கினார். வரிசைக் கிரமமாய் ஒன்று, இரண்டு, மூன்று என்று நிகழ்ச்சிக் கோர்வைகள்.

கட்சியின் அந்த உயர் மட்டக்குழுவில் தலைவர் எதிர் காலத்திட்டம் பற்றிய அறிவிப்புகளைவெளியிடுகிறார்

"இன்னும் இரண்டு வார காலத்துக்குள் நீங்கள் செய்ய வேண்டிய காரியம்'' —எம் எல் ஏக்களுக்கு அவர் சொல்லும் கட்டளை "சிறு பாசன அணைக்கட்டுகள் கட்ட வேண்டிய இடங்கள் குறித்த விபரம், குடிநீர் மின்சாரத் தேவை போன்ற விபரங்களை உடனே அரசாங்கத்துக்கு அளிக்க வேண்டும். இதில் அசட்டையாக இருக்கும் எம்எல்ஏக்கள் கட்சியில் இருந்து நீக்கப்படுவார்கள்.''

'...உங்கள் கட்டளை ஒரு அற்புதத்தை அல்லவோ நிகழ்த் திக்காட்டி விட்டது! கட்சியின் செயல் திட்டங்களையும், புதிய பார்வையையும் அந்தத் தலைமைக் குழுக்கூட்டம் நமக்கு ஏற்படுத்திக் கொடுத்தது. ஜனங்கள் நமக்கு நன்றி செலுத்தினார்கள், எதிர் பார்ப்புகள் இன்னமுந்தான் அதிகரித்தன. ஆனாலும் எல்லாமும் ஒரு கனவைப்போல் கலைந்து விட்டதுதான் வேதனை தருகிறது. —உங்கள் தலைமையில் நடந்த ஒரு கட்சிக்கூட்டத்தில் நான் சொன்னேன். கட்சி சிறியதா பெரியதா என்பதல்ல கேள்வி. கூட்டம் நிறைய வருகிறதா குறைவாக வருகிறதா என்பதல்ல அதன ஆன்மபலம். அதனுடைய தேசிய சர்வதேசியக் கண்ணோட்டம், மக்கள் பிரச்சனைக்காக மெய்யாலுமே உடன் நிற்பது, ஆட்சியில் இல்லாதபோது ஜனங்களுடைய பிரச்சனைக்காகப் போராடுவதும், ஆட்சி, யைக் கைப்பற்றிய பின்பு அதை நிறைவேற்றுவதும்-ஊழலற்ற, லஞ்ச லாவண்யமற்ற நிர்வாகத்தை கட்சியிலும் ஆட்சியிலும் ஏற்படுத்துவது......

—வேகமாக எழுதிக் கொண்டிருப்பதை நிறுத்தினார். ஒரு குடும்பம், தாய் தந்தை, அண்ணன் தம்பிகள், பெற்ற பிள்ளைகள் என்ற அந்நியோன்யம் விட்டு விலகிப்போவது என்பதை ஒரு குடும்ப உறுப்பினர் என்ற முறையில் அனுமதிப்பது என்பது மனோரீதியில் உறவை நாடும் ஒரு மனிதனை அலைக்கழிப்பதுபோல தன்னுடைய எதிர்காலத் திட்டம் அவரை அலைக்கழித்தது.

'தம்பி, சவுக்கியமா இருக்கிறீங்களா? மாதவி நல்லா இருக்குதுங்களா... ஒரு முறை அழைச்சிட்டு வரக் கூடாது?' என்று அன்பு பொங்க, —உலகத்தில் இது போன்று அன்பு சொரியும் முகத்தை வேறு எங்கே காண்பது என்ற உண்மைக்குப் பொருள்பட உபசரிக்கும் அந்தத் தலைவரது மனைவியின் அன்பை விட்டெல்லாம் எவ்வாறு விலகிக் கொள்வது?

உண்மையை விமர்சனம் செய்வது எளிதாகஇருக்கலாம் விலகிக் கொள்வதென்ன எளிதான காரியமா?

'......இலக்கியம், வரலாறு, நாகரீகம், தத்துவம், அரசியல்—இவைகள் எந்த மண்ணிலிருந்து வந்தாலும் அதனுடைய மேன்மை மனிதகுலம் முழுமைக்கும் சொந்தமானது கற்றுத் தெரிய வேண்டியவற்றைக் கற்றுத் தெரிய வேண்டும், நாட்டை ஆளும் தலைவர்களும் மன்றங்களின் உறுப்பினர்களும், —இவற்றை அறியாமல் கண்டு கொள்ளாமல்—ஏதோ அன்றாடம் வரும் சிலதினசரிகளை மட்டும் படித்துவிட்டு அரசியல் நடத்துவது தகாது. கட்சி சீரமைப்புக் கமிட்டியில் இதை நான் தீர்மானமாக எழுதிக் கொடுத்தேன். அந்த சீரமைப்புக் கமிட்டி ரிப்போர்ட் என்ன ஆனது? அந்த எழுத்துக்களின் ஆழம் உங்களுக்குத் தெரியாதா? அதை வெறும் கண்துடைப்புக்காக மட்டுமே நீங்கள் செய்திருப்பீர்களேயானால் யாரைச்சரிக்கட்டுவதற்காக அவ்வாறு செய்தீர்கள்?......

"அண்ணே... அண்ணே''

எழுத்து தடைபட்டது, எதிரே ஒரு கட்சிக்காரர் வந்து நின்றார். மணியைப் பார்த்தார் கோமதி நாயகம். இரவு ஒன்று.

"என்னப்பா''

"ஒன்னுமில்லேண்ணே... எங்க ஊர்ல அப்பாவி ஒருத்தரை போலீஸ் வந்து பிடிச்சிட்டுப் போயி அடி அடின்னு அடிக்கிறாங்க''.

"அவர் என்ன தவறு செய்தார்?''

"ஒரு தவறும் செய்யலே''.

"உறுதியா?''

''ஆமா''

நாளைக்காலையில் நான்வந்து அதத எஸ்ஐ யை கண்டுபேசி உள்ளே இருப்பவரை மீட்டிக் கொண்டு வர்றேன்.''

உடன் வந்தவர் கைகளை எடுத்துக் கும்பிட்டார்.

''பயம் வேண்டாம். காலம்பற எத்தனை மணிக்கு முதல்பஸ் இருக்கு''?

''பஸ்ஸா, இப்பவே டாக்ஸியோட வந்திருக்கோம் இதே வண்டியை நீங்க காலையில எத்தனை மணிக்குக் கொண்டுவரச் சொன்னாலும் கொண்டு வர்றோம் ''

''யோவ், உனக்குப் புத்தி இருக்கா, அவன் ஏழைப் பட்டவன்று வேற சொல்லுறே அவன்கிட்ட டாக்ஸி அது இதுன்னு உயிரை வாங்கிடுவ போல இருக்கே. அதெல்லாம் நமக்கு சரிப்பட்டு வராது. நீங்க அந்த போலீஸ் ஸ்டேஷன்ல காத்துக் கொண்டு இருங்க. நான் நேரே அங்கே வந்திடுவேன்...'

—கைகூப்பி நன்றி சொல்லிவிட்டு அவர்கள் போய் விட்டார்கள். அவர்களை அனுப்பிய கையோடு மீண்டும் உள்ளே வந்தார் கோமதி நாயகம். நீண்ட கொட்டாவி அடுததடுத்து, தூக்கத்தையும் மன அசதியையும் அது வெளியிட்டது. தூங்கி விட்டு நாளை மறுபடியும் இந்தக் கடிதத்தை தொடரலாமா என்று எண்ணினார். கூடாது என்ற உறுதி அவர் மனதில் முளைவிட்டது. இன்னமும் சில வரிகளில் இந்தக்கடிதத்தை முடித்து விட வேண்டியது தான் என்றும் எண்ணினார். கேள்விகளும், பதில்களும் நினைவுகளும் — நினை-வுறுத்தல்களும் வெறும் மனச் சமாதானத்திற்கே யல்லாமல் உண்மையை கூறுவதற்கு இவைகளெல்லாம் சப்பைக்கட்டுகளா... உண்மை நேரடியாகப் பேச வல்லது அல்லவா! ..

'..... நாம் பல உண்மைகளை மறைக்கிறோம். நமது பத்திரிக்கைகளும் மறைக்கின்றன. ஆனால் ஜனங்கள் கொஞ்சம் கொஞ்சமாக நம்மை விட்டு அகலத்தொடங்கி விட்டார்கள். மாற்றுக் கட்சிக் காரர்களின் பலகீனம் நம்மை ஒருபோதும் வளர்க்காது. ஒரு வளர்ச்சி போன்று தோற்றம் காட்டுவது வளர்ச்சி அல்ல. நாம் ஏமாற்றுகிறோமோஎன்றபயம் ஜனங்களிடத்தில்வந்து விட்டதோ என்று நான் அஞ்சுகிறேன். என்போன்-றோரின் அச்சத்தை நீக்குவதற்கு நீங்கள் தயாராக இல்லையோ என்கிற பயமும் சேர்ந்து என்னை வதைக்கிறது. சமீபகாலமாக ஜனங்களால் மிகவும் வெறுக்கப்படுகிற சில முடிவுகளைக் கூட நீங்கள் மாற்றிக் கொள்ள தயாராய் இல்லாதது போல் தெரிகிறது. அவ்வாறு எனில் — இந்தத்திட்டமிட்ட எதிர்மறை முடிவு கட்சியின் ஒட்டு மொத்தத்தையும், ஜனங்களின் மேன்மை குறித்த நமது கொள்கைளையும் கேள்விக் குறியாக்கிவிடுகிறதா? இல்லையா சில நேரங்-களில் தேச நலனுக்கே கூட நமது மௌனங்கள் எதிர் மறையாகிப்போய் விடுகிறதோ என்கிற எனது அச்சம் பொருள் பொதிந்தது தான் என்று நான் முடிவு செய்கிறேன். உங்களோடு உங்களாக வாழ்ந்தவன் நான், உங்களுள் ஒருவன் என்கிற இடத்திலிருந்து தற்போது வேறுபடுகிறேன். பதினைந்து ஆண்டு களாக தொடர்ந்து இந்த சட்டமன்றத்தில் உறுப்பின-ராக இருக்கிறேன். எனக்கு சொந்தமாகவீடு கிடையாது வாசல் கிடையாது. எந்த வங்கியிலும் கணக்கு கிடையாது. என் கடிதத்தின் முடிவுக்கு நான் வந்து விட்டேன். உங்களோடும், உங்கள் இயக்கத்தோடும் இனித் தொடர்ந்து காலந்தள்ள என்னால் முடியாது. நாளைய சரித்திரத்திற்கு பதில் சொல்லும் துணிச்சல் எனக்கில்லை.

எனவே உங்களை விட்டும், உங்கள் இயக்கத்தை விட்டும் என்னை விடுவித்து விடுங்கள். உங்கள் மேன்மையான அன்பால் விளைந்த இந்த சட்டமன்ற உறுப்பினர் பதவியும் எனக்கு வேண்டாம். இதிலிருந்து நான் ராஜினாமா செய்கிறேன். சொந்த முறையில் அன்புக்கும் நட்புக்கும் இலக்கணமாய் திகழும் உங்களை ஒருபோதும் மறக்கமாட்டேன்......''

அந்தக்கடிதம் முடிந்துதான் போய்விட்டது. இன்னும் எவ்வளவோ எழுதத்திட்டமிட்டிருந்தாலும் எழுத வில்லை. அதற்குமேல் பேனா அவரது விரல்களில் ஒட்டிக் கொள்ள வில்லை. கண்கள் கலங்கி கண்ணீர் பெருகியது. சுமைகள் இறக்கப்பட்டது போன்றும் ... சுமைகள் மீண்டும் மேலே ஏறியதுபோன்றும்மாறி மாறி மனதின் குடைச்சல்.

எது எப்படிப் போனாலும் மனதின் தீர்மானம். பேனாவின் எழுத்து வடிவம்.

ஆம், அந்த ராஜினாமாதான்.









# நடைவண்டி

**அய்க்கண்**

வழக்கம் போல் ஐந்து முப்பதுக்கு அலாரம் அடித்ததும் படுக்கையிலிருந்து எழுந்தார் வடிவேலு.

நேற்று வரை அவர் தென்னாட்டின் மிகப்பெரிய, ஈஸ்ட் கோஸ்ட் கெமிக்கல்ஸின் ஜெனரல் மானேஜர்; இன்று அவர், ஓய்வு பெற்ற ஜி.எம். வடிவேலுதான்! மீண்டும் படுத்துக் கொண்டார். ஆனால் நீண்ட நேரம் அப்படி சும்மா படுத்திருக்க முடியவில்லை ..

படுக்கையிலிருந்து எழுந்து ''பால்கனி''க்கு வந்து கீழே தெருவைப் பார்த்தார். அப்பொழுதுதான் விழித்துக்கொண்ட தெருவும், சுறுசுறுப்பாக நடமாட ஆரம்பித்திருந்தது பால்காரர்கள் காய்கறிக்காரர்-கள், கடைகளுக்குச் செல்பவர்கள் ஒவ்வொருவருக்கும் ஒரு வேலை ஒவ்வொருவருக்கும் ஒரு இயக்கம்-ஆனால் வடிவேலுக்கு மட்டும் வேலையில்லை ..

காலடிச் சத்தம் கேட்டுப் பின்னால் திரும்பிப்பார்த்தார். காந்திமதி நின்று கொண்டிருந்தாள். ஏதோ கேட்க வந்திருக்கிறாள்.

''என்ன, காந்தி?''

''ஒண்ணுமில்லீங்க? .. நீங்க குளிக்க வரலியா?... கீழே பிள்ளைங்கெல்லாம் காத்துக்கிட்டிருக்காங்க .'' என்று மெதுவாகச் சொன்னாள் காந்திமதி.

தினசரி முதலில் அவர்தான் குளிப்பார். அவர் குளித்த பிறகுதான் நாராயணனும், சிவப்பிரகாசமும், மாதவியும் குளியலறைப் பக்கம் போவார்கள்...

ஆனால், இனி 'வழக்கத்துக்கு' என்ன தேவை?...

''காந்தி! பிள்ளைகள் முதலில் குளிக்கட்டும் .. நான் கடைசிலேயே குளிக்கிறேன்...''

காந்திமதி கீழே இறங்கிச் சென்றாள் ..

எவ்வளவு நேரம்தான் தெருவையே பார்த்துக் கொண்-டிருப்பது? மெதுவாகக் கீழே இறங்கி, ஹாலில் வந்து உட்கார்ந்தார் வடிவேலு. அவர் வந்ததும் அங்கே நடமாடிக் கொண்டிருந்த ஒவ்வொருவரும் வெவ்வேறு இடங்களுக்கு நழுவினார்கள். அங்கே விளையாடிக் கொண்டிருந்த பிள்ளைகள் பாபுவும் குமாரும் கூட, பின் கட்டுப் பக்கம் நகர்ந்தார்கள்...

அவரே கூப்பிட்டால் அல்லது அவரிடம் ஏதாவது சொல்ல வேண்டியதிருந்தால் ஒழிய, யாரும் அவரிடம் வந்து பேசுவதில்லை .

பிள்ளைகளெல்லாம் அவரவர் அலுவலகம், கல்லூரி-களுக்கும் புறப்பட்டதும், வடிவேலு ஹாலிலிருந்து வாசற் பக்கம் வந்து தெருவைப் பார்த்துக் கொண்டு நின்றார் ..

ஏதையோ பறிகொடுத்த உணர்வு நெஞ்சில் தொத்திக் கொள்ள, உள்ளே வந்து குளித்து விட்டுச் சாப்பிட உட்கார்ந்தார். எப்போதும் அவசரமாகச் சாப்பிடும் வடிவேலு, இன்று மிக மெதுவாக, வாயையும் கையையும் அசைத்துக் கொண்டிருந்தார். சாப்பாட்டுச் சுவையிலே எந்த வித ஈடுபாடும் இல்லாமல், இயந்திரம் போல் விழுங்கிக் கொண்டிருந்தார்...

''என்னங்க, நேத்தி, உங்க ஷட்டகரோட பையன் கேசவன் வந்திருந்தான். உங்ககிட்ட போன வாரம் சொல்லியிருந்தானாமே, ஏதாவது வேலை பார்த்துத் தரச் சொல்லி? அதை ஞாபகப்படுத்தி விட்டுப்போக வந்தான். அவனுக்கு ஏதாவது ஒரு ஆபீஸ் வேலை வாங்கித் தாங்களேன்! நீங்க சொன்னால், யாரும் அவனை வேலைக்கு சேர்த்துக்கிடுவாங்க'' என்றாள் காந்திமதி.

கேசவன் அவளுடைய தங்கையின் மகன்தான். ஆனால் 'என் தங்கை மகன்' என்று அவள் சொல்-வதில்லை. 'உங்கள் ஷட்டகர் மகன்' என்று தான் சொல்வாள். உலகத்தையே அவர் மூலமாகப்பார்ப்பது தான் அவளுக்கு வழக்கம்!

வடிவேலு ஒன்றும் பதில் பேசவில்லை. அவர் எதுவும் பதில் சொல்லுவார் என்று காந்திமதியும் எதிர்பார்க்க வில்லை.

வீட்டில் மாமியாரும் மருமகளும், ரேடியோவும், புத்தக மும்மாகப் பொழுதைப்போக்கி விடுவார்கள். அவர்கள் ஹாலில்வந்து இருந்து கொள்ளட்டும் என்றுநினைத்து முன்னால் உள்ள 'ஸ்டடிரூமு'க்குள் நுழைந்தார். அங்கே நாராயணனுடைய மேஜையில் அன்றையச் செய்தித்தாள் இருந்தது. அதை எடுத்துப் பிரித்துப் பார்த்தார்

வடிவேலுக்கு ஒன்றும் புரியவில்லை. நியூஸ் பேப்பர் ஹாபிட் அவருக்குக் கிடையாது. அரசியலில் ஏ.பி.சி.டி தெரியாதவர் அவர். பத்திரிக்கை முழுக்க அரசியல் செய்திகளே அடைத்துக் கொண்டிருந்தன... செய்தித் தாளைக் கீழே போட்டுவிட்டு எழுந்து, எதிரே இருந்த புத்தக அலமாரியைப் பார்த்தார். ஏராளமான தமிழ், ஆங்கிலப் புத்தகங்கள்.

அலமாரியில் அடுக்கி வைக்கப்பட்டிருந்த புத்தகங் களின் முதுகுகளையும் அவற்றில் எழுதியிருந்த பெயர்களையும் பார்த்துக் கொண்டே வந்தார்.

திருக்குறள்' —அதை எடுத்து ஏதோ ஒரு பக்கத்தைப் புரட்டினார்...

இதெல்லாம் தமிழ்தானா? இந்தத் 'தமிழ்' எப்படி அவருக்கு இவ்வளவு நாட்கள் தெரியாமலே போய் விட்டது?..'

ஆங்கில வரிசைப் பக்கம் கண்ணை ஓட்டினார்... ஷேக்ஸ்பியர் —'அஸ் யு லைக் இட்' நாடகம் எடுத்துப் பார்த்தார்.

ஒன்றும் புரியவில்லை! ஆனால் அதே சமயம் அவருக்கு ஓர் உண்மை புரிந்தது. இலக்கியங்களைப் பொறுத்த

வரையில் அவருக்குத் தமிழும் ஆங்கிலமும் ஒன்றுதான்! அவர் உலகம் அதுவல்ல—வேறு!

ஓ! உலகத்தில் உள்ள எத்தனை விஷயங்கள் அவருக்கும் புரியாமலே போய்விட்டிருக்கின்றன?... சங்கீதம், இலக்கியம், ஓவியம், விளையாட்டு—இன்னும் எத்தனை எத்தனையோ?

அந்த ஆழமான கழிவிரக்கத்தின் மூட்டத்திலும் ஒரு மகிழ்ச்சி மின்னல் — பெருமிதப்பூரிப்பு...

பகல் முழுவதும் பங்களாவின் மேலும் கீழும்—அங்கும் இங்கும்—நடந்து, இருந்து சுற்றிக்கொண்டிருந்தார்...

கடிகாரத்தையே பார்த்துக்கொண்டிருந்தார்...

காலம் நகரவில்லை; கார்த்திகை மாதத்துக்கு மூடுபனி போல் கனமாக அவரைப் போர்த்துக் கொண்டு நின்றது...

அவருடைய—அவருக்கென்று, இருந்த உலகத்தில்—ஆபீஸ் கடிகாரம் 'டாண் டாண்' என்று பத்துத்தடவை அடித்ததும், அவருடைய பூட்ஸின் 'டக் டக்'க்கும் இணைந்து ஒலிக்க, ஆபீசுக்குள் நுழைந்து விட்டால், நிர்வாக, பொருளாதார, தயாரிப்பு சம்பந்தப்பட்ட 'பைல்'களில் மூழ்கி விடுவார். அந்தப் 'பைல்களே' அவருடைய உற்றாரும் உறவினரும், நண்பரும் பகைவரும். அந்த உலகத்தை விட்டுப் பிரிந்த அவர், தண்ணீரிலிருந்து எடுத்துத் தரையில் போடப்பட்ட மீனாகத் துடித்தார்...

பலப் பல யுகங்களாக நீடித்த அன்றையப் பொழுதின் முடிவில் அவருக்குப் புரிந்து விட்டது. இந்த உலகத்தில் அவர் வாழ முடியாது. அந்த மீன் மறுபடியும் தண்ணீருக்குள் தான் செல்ல வேண்டும்! அவர் மறுபடியும் ஏதாவது வேலைபார்க்க வேண்டும்... அவருக்கு ஓய்வு கிடையாது. ஓய்வு எடுத்துக் கொள்ள அவரால் முடியாது. பாவம், அதற்குரிய 'தகுதி' அவருக்குக் கிடையாது! அவருக்கு உழைப்பு—உழைப்பு—உழைப்பு வேண்டும். அது எந்த வேலையாக இருந்தாலும் சரி—'டிக்னிடி ஆஃப் லேபர்' அவருக்குத் தெரியும் ..

அன்றையப் பத்திரிக்கையை எடுத்து 'வான்டட்' பக்கத்தைப் பார்த்தார்...

''நகரிலுள்ள அருணா சிட்பண்ட்ஸில் வசூல் விஷயங்களை மேற்பார்வை செய்ய ஒரு பட்டதாரி தேவை—படிப்புக்கும் அநுபவத்துக்கும் திறமைக்கும் தகுந்த சம்பளம்; ஓய்வு பெற்ற முதியவர்களும் விண்ணப்பிக்கலாம் ..''

அருணா சிட் பண்ட்ஸ் முதலாளி நாச்சியப்பனை அவருக்குத்தெரியும்: வடிவேலுவின் திறமையைப்பற்றி நாச்சியப்பனுக்கும் தெரியும்: நாளைக்கு அவன் முன்னால் போய் விண்ணப்பத்தை நீட்டினால் உடனே கையைப் பிடித்து ஆபீஸில் உட்கார்த்தி விடுவான்...

வடிவேலு, நிம்மதிப் பெருமூச்சுவிட்டார்...

கீழே வீடு கலகலவென்று இருந்தது. கல்லூரியில் இருந்து, எல்லாருமே வந்து விட்டார்கள். பேச்சு, சிரிப்பு,குழந்தைகளின் கும்மாளம்,தொலைக்காட்சியின் கூச்சல்...

திடீரென்று பேரன் குமாரின் அழுகைக்குரல் கேட்டது... மாடியிலிருந்து கீழே பார்த்தார் வடிவேலு.

குமார் விளையாடிக் கொண்டிருந்த நடை வண்டியைப் பறித்துக் கொண்டு, பாபு ஓட்டி விளையாடிக் கொண்டிருந்தான். தனக்கு வண்டி வேண்டும் என்று குமார் கேட்க, பாபு மறுக்க, இருவரும் ஒருவரையொருவர் நெருங்கிக்கைகலக்க, கடைசியில் குமார்—தன் 'மூல பலத்தைப் பயன்படுத்தினான்; 'ஓ' என்று அழுது தன் கட்சிக்குப் பலம் சேர்த்துக் கொண்டிருந்தான்...

பேரக்குழந்தைகளைச் சமாதானப்படுத்த பாட்டி ஓடி வந்தாள்.

''டேய்: பாபு! நடை வண்டியை தம்பிக்குக் குடுடா!'' என்று அறிவுரை சொல்லத் தொடங்கினாள் காந்திமதி. ''ஊஹூம்... எனக்குத்தான்'' — முரண்டு பிடித்தான் மூத்தவன் பாபு...

காந்திமதி, கிட்டத்தில் வந்து பாபுவை அணைத்துக் கொண்டாள்.

''பாபுக் கண்ணா! உனக்கு எதுக்கு நடைவண்டி? உனக்குத்தான் நல்லா நடக்கத் தெரியுமே! தம்பிக்குத் தான் நடக்கத் தெரியாது: அவனுக்குத்தான் நடை வண்டி வேணும், பாபு! நடைவண்டி ஓட்டுற பருவம் உனக்குப் போயிடுச்சு; நடக்கத் தடுமாறுகிறவனுக்கு வண்டியைக் கொடுத்திடறதுதான், பெரியவனுக்கும் அழகு ''

உடனே அந்தப் 'பெரியவன்', குமாருக்கு நடை வண்டியைக் கொடுத்து விட்டான்...

அதே சமயம் உள்ளே நுழைந்தான் கேசவன்.

சட்டென்று ஓர் எண்ணம், தீப்பொறியாய் வடிவேலைச் சுட்டது — காந்திமதியின் சொற்கள் ஓர் தத்துவத்தின் உள்ளர்த்தத்தோடு, அவருடைய இதயத்திற்குள் ஆரோகணித்துக் கொண்டன ..

'கேசவன் பி.ஏ க்கு ஒரு வேலை வேண்டும்; வாழத் துடிக்கிற அந்த இளைஞனுக்கு ஒரு வேலை வேண்டும். அவருக்கு ? வேலை பார்க்கிற பருவம் அவருக்குப் போய்விட்டது; இனி அவருக்கு ஓய்வு பெறும் பருவம் ஓய்வா? அவரால் ஓய்வு பெற முடியுமா? ...முடியும்; முடியத்தான் வேண்டும். எப்படியும் குழந்தை, ரேடியோ, செய்தித்தாள், டெலிவிஷன், இலக்கியம், கலைகளோடு இணைந்து அவர் ஓய்வு பெறத்தான் வேண்டும்...

'அருணா சிட் பண்ட்ஸ் வேலையைக் கேசவனுக்குத் தான் கொடுக்க வேண்டும். அதுதான் பெரியவருக்கு அழகு'...

தீர்மானம் வலுவடைந்த முகத்துடன், பட்டதாரி இளைஞனை வரவேற்றார் ஓய்வு பெற்ற ஜி.எம்...

''வா, கேசவா! உன்னைத்தான் எதிர் பார்த்துக் கொண்டிருந்தேன். உட்கார், நாளைக்கு உனக்கு ஒரு வேலை வாங்கித் தருகிறேன்'' என்று சொல்லிக் கொண்டே கீழே இறங்கி வந்தார் வடிவேலு ..



# நிரந்தர நண்பன்

**உ. ராஜாஜி**

சுவரில் முதுகைச் சாய்த்தபடி கால்நீட்டி அமர்ந்திருக்கிறான் ராஜாராமன். எதிரே சாலையில் போகிற வருகிற வாகனங்களோ மனிதர்களோ எதுவும் மனதில் பதியவில்லை. பார்வை 'எந்த நேரமும் நான் புறப்பட்டு விடலாம்' என்கிற மாதிரி இறுக்கமாய் கயிறு கொண்டு கட்டப்பட்டிருக்கிற பெட்டி படுக்கையின் மீதும், அதற்குப்பக்கத்தில் தோளில் மாட்டிக்கொள்ளும் வசதியுடன் கூடிய அந்த தோல் பையின் மீதுமே வெறித்து நிற்கிறது.

இந்த நிமிடத்தை எதிர்பார்த்து கடந்த பத்து நாட்களாக வருத்தப்பட்டுக் கொண்டிருந்ததாலோ என்னவோ இப்போது அதுபோய் ஒரு வகையான வெறுமை உணர்ச்சியே இவனை ஆக்ரமித்திருக்கிறது.

எப்போதும் தன் பாஷையில் எதையாவது சொல்லி இவனை தொண தொணத்துக் கொண்டிருக்கும் பழனிச்சாமி கூட இந்த நிமிஷத்து இவனது உணர்ச்சிகளை புரிந்து கொண்டு எதுவும் பேச வாய் வராமல் இவனுக்கு வலது புறமாய் சுவரில் சாய்ந்தபடி சப்பணமிட்டு அமர்ந்திருக்கிறான்.

ஏதோ ஒரு நிமிஷத்தில் அமைதியின் கனம் தாங்க முடியாமல் போய் பழனிச்சாமி பக்கம் திரும்பி, "கணக்கை மாத்தியாச்சுடா!" என்று இவன் புலம்புகிற குரலில் சொன்னபோது அவன், "ஆ! ஆ!" என்றான்.

எல்லா வகையான சோகங்களையும் வெளிப்படுத்த அவனுக்குத் தெரிந்த ஒரே வார்த்தை இந்த ஆ; ஆ! தான். ஆ ஆ தவிர ஹலோ அம்மா அய்யய்யே... ஏய் என்கிற நான்கு வார்த்தைகள்! அவ்வளவுதான்! இந்த ஐந்து வார்த்தைகளைத் தவிர ஏழு வருஷத்தில் வேறு எந்த வார்த்தைகளையும் பழனிச்சாமி பேசி ராஜாராமன் கேட்டதில்லை.

இந்தக் கிராமத்திலிருக்கிற கிளை நூலகத்துக்கு ராஜாராமன் வேலைக்குவந்து ஏழுவருஷமாகிவிட்டது. வந்த முதல் நாளே பழனிச்சாமியுடன் நட்பு துவங்கி விட்டது.

முழங்கால்வரை சுருட்டி விடப்பட்ட பேண்டும் ஒன்றின் மேல் ஒன்றாக நாலு சட்டையும் அணிந்து சற்றே துருத்திக் கொண்டிருக்கும் மேல் வரிசைப்பற்களும் அசட்டுச்சிரிப்புமாய் நெற்றியில் கைவைத்து தன் முன் நின்றிருந்த உருவத்தைப் பார்த்து ராஜாராமனுக்கு ஆச்சரியமாய் இருந்தது.

பதிலுக்கு கனிவை முகத்தில் காட்டி தானும் ஒரு சலாம் வைத்து விட்டு, "என்ன?" என்று கேட்டான். ஹாரன் அடிப்பது மாதிரி ஐந்து விரல்களையும் குவித்துக் குவித்து விரித்து அந்த உருவம் என்ன சொல்கிறது என்று புரியாமல் இவன் குழம்பியபோது, லைப்ரரியில் பேப்பர் படித்துக் கொண்டிருந்த பெரியவர் ஒருவர் விளக்கினார்.

"அஞ்சு பைசாக் கேட்கிறான் ஸார். உங்களிடம்... இவன் ஒரு லூஸு ஸார். யாரைப்பார்த்தாலும் இப்படி அஞ்சுபைசாக் கேட்டுக்கிட்டேயிருப்பான்!"

சட்டைப்பைக்குள் கைவிட்டு ஒருநாலணா நாணயத்தை எடுத்து நீட்டியபோது இடவலமாகத் தலையாட்டி மறுத்து எனக்கு அஞ்சுபைஸாதான் வேணும்ங்கிற மாதிரி அவன் பழையபடி ஐந்து விரல்களையும் குவித்து நீட்டுவது கண்டு சிரித்தபடி ஒரு அஞ்சுபைசா நாணயத்தை எடுத்து நீட்டியதும் முகமலர்ச்சியுடன் வாங்கிக் கொண்டான்.

இப்போது பழனிச்சாமி அப்படி இல்லை. விலைவாசி உயர்வு என்பது பைத்தியங்களுக்கும் சேர்த்துத்தானே? பத்துப்பைசா நாலணா எட்டணா என்று யார் எவ்வளவு கொடுத்தாலும் வாங்கிக் கொள்கிறான்.

பழனிச்சாமிக்கு பணத்துக்குப் பஞ்சமேயில்லை லைப்ரரிக்கு முன்னால்மெயின்ரோடு. போகிற வருகிற பஸ்களெல்லாம் நிற்பதும் லைப்ரரிக்கு முன்புதான். எல்லா டிரைவர்கள் மற்றும் கண்டக்டர்களுக்கும் அவன் செல்லப்பிள்ளை. லைப்ரரியில் உட்கார்ந்து ஏதாவது வாரப்பத்திரிகையப் புரட்டி படம் பார்த்துக்கொண்டிருப்பான். திடீரென்று ஏதாவது தனியார் பஸ்ஸோ மருதுபாண்டியரோ வந்து நிற்கும். புத்தகத்தை அப்படியே போட்டு விட்டு விழுந்தடித்துக் கொண்டு ஓடிப்போய் டிரைவருக்கு ஒரு சலாம் வைப்பான் டிரைவரும் பதிலுக்கு சலாம் வைத்தபடி இவனுக்கு ஏதாவது சில்லறைஎடுத்து தருவார். அல்லது பையைத் துழாவிப்பார்த்து விட்டு சில்லறை இல்லாததால் ஆட்காட்டி விரலை அந்தரத்தில் சுழற்றியபடி நாளைக்கு என்பார்.

காசு கிடைத்தாலும் கிடைக்காவிட்டாலும், உங்களுடன் பேசியதே போதும் என்பது மாதிரியான மகிழ்ச்சியுடன் இவன் திரும்பி வருவான். எல்லோர் விஷயத்திலுமே அவன் இப்படித்தான்.

வேலை நேரம் முடிந்ததும் நூலகத்தைப் பூட்டிக் கொண்டு இவன் தன் அறைக்குக் கிளம்புகிறபோது பழனிச்சாமியும் கூடவே வருவான்.

அறையில் கணக்கு இருந்தால் உள்ளே வரத்தயங்கி வாசல்படியிலேயே உட்கார்ந்து கொள்வான்.

கணக்கு என்றும் கபாலம் என்றும் ராஜாராமனால் செல்லமாக அழைக்கப்படுகிற க. பாலசண்முகம் கோவை மாவட்டத்துக்காரன். நானூறு கிலோ மீட்டர் தள்ளி இந்தக் கிராமத்து உயர் நிலைப் பள்ளிக்கு கணக்கு வாத்தியாராக நியமனமாகி இரண்டு வருஷத்துக்கு முன்பு அறைக்கு வந்து சேர்ந்தான்.

கணக்குக்கு பழனிச்சாமியைப் பிடிக்காது என்பதில்லை. ஆனால் அவன் அநியாயத்துக்கு சுத்தம் பார்க்கிறவன். அதைவிட அநியாயத்துக்கு பக்திமான். எலிவளை மாதிரியான இந்த ஆறடிக்கு ஆறடி அறையில் சுவரை ஒட்டினாற்போல் தரையோடு நாலைந்து பிரேம்போட்ட

சாமிகளின் படங்களை வரிசையாக வைத்திருக்கிறான். முன்னால் ஒரு ஊதுபத்தி ஸ்டாண்டும் உள்ளங்கை அகலத்துக்கு ஒரு கந்த சஷ்டி கவசமும் உண்டு.

ஒருநாள் இவனும் கணக்கும் பேசிக் கொண்டிருந்த போது, செருப்பணியாமல் தெருப்புழுதி மணக்கும் காலோடு விடுவிடுவென்று உள்ளே நுழைந்த பழனிச்சாமியின் பாதவடிவங்கள் தரையில் விரித்திருந்த சுத்தமான வெள்ளைநிற ஜமுக்காளத்தில் தடம் பதிக்க...

கணக்குக்கு அப்படி ஒரு கோபம்வந்திருக்க வேண்டாம். மூலையில் கிடந்தத்டிஸ்கேலை எடுத்து அவன் வைத்த அடியை விட அவன் முக ஆவேசம் பழனிச்சாமியை நடுங்க வைத்துவிட்டது.

முறையிடுகிற மாதிரியான பரிதாபக் குரலில் இவனை நோக்கி, ''ஆ! ஆ!'' என்றான். கணக்கை விடவும் இவனுக்கு அதிகமாக ரௌத்ரம் வந்துவிட்டது அவன் கையிலிருந்த ஸ்கேலைப் பிடுங்கி ரோட்டில் எறிந்து விட்டு கணக்கை அதற்காக கடுமையாகக் கோபித்துக் கொண்டான்.

பழனிச்சாமிக்கும் சுத்தத்திற்கும் ஏழாம்பொருத்தம் தான்.சுலபத்தில் குளிக்கமாட்டான் தினசரி காலையில் குளிக்கப்போகும்போது அவன் அம்மா இவன் அறை-வாசல்முன் நின்று, ''ஸார்! அவனை வரச்சொல்லுங்க!'' என்பதும் அம்மா தூரத்தில் வரும்போதே பார்த்து விட்டு அறையின் ஒரு மூலையில் பதுங்கிக்கொண்டு 'நான் இல்லைனு சொல்லுங்க' என்பது மாதிரி பழனிச்சாமி இவனை நோக்கி சைகை காட்டுவதும் அடிக்கடி நடக்கிற ரஸமான நாடகம்.

இவன் அவனைத் தாஜா செய்து செல்லம் கொஞ்சி அம்மாவுடன் அனுப்பி வைப்பான். சிலசமயம் போய்க் குளித்துவிட்டு வருவான். சிலசமயம் சாதுவாக அம்மாவின் பின்னே போய் திரும்பவும் ஓடிவந்து விடுவான்.

'ஏன்டா குளிக்கலே' என்று கேட்டால் எதிரே சாலையின் சரிவில் அலையடித்து சிலுசிலுக்கும் ஏரி நீர்ப்பரப்பைக் காட்டி ஐந்து விரல்களையும் குவித்து அந்தரத்தில் ஆட்டுவான். பாம்பு கிடக்காம்!

கணக்கைத் தவிர இந்த அறையின் இன்னொரு உறுப்பினரான கொளஞ்சி இருக்கிறபோதும் பழனிச்-சாமி உள்ளே வரமாட்டான். கொளஞ்சி என்கிற கொளஞ்சிநாதன் தென்னாற்காடு ஜில்லாக்காரன். தமிழ் வித்வானுக்குப் படித்துவிட்டு படித்த படிப்புக்கு சம்பளமில்லாமல் இங்கிருந்து நாலுகிலோ மீட்டர் தூரத்திலிருக்கிற இதை விடவும் ஒருசிறிய கிராமத்தில் ஆரம்பப்பள்ளி ஆசிரியராக உத்தியோகம் அவனுக்கு.

தினம் காலை ஒன்பது மணிக்கு சைக்கிளில் போய்விட்டு மாலை நாலரைக்கோ ஐந்துக்கோ அறைக்குத் திரும்பி வருவான். ஏறக்குறைய கணக்குக்கு இங்கே உத்தி-யோகமான அதே சமயத்தில்தான் அவனும் வேலைக்கு வந்தான்.

ராஜாராமனைக் காட்டிலும் கணக்குக்கும் கொளஞ்-சிக்கும் சற்றே நெருக்கம் இருந்தது. காரணம் பக்தி. தினசரி காலையில் குளித்துவிட்டு வந்ததும் சுவரில் சாத்திவைத்திருக்கும் சாமி படங்களின் முன்பு பத்து நிமிஷத்துக்காவது கூட்டு பூஜை நடக்கும். அதிர்ஷ்ட வசமாக அந்த நேரத்தில் எப்போதாவது பழனிச்சாமி குளித்து விட்டு வந்திருந்தால் பழனிச்சாமியையும் பூஜையில் சேர்த்துக் கொள்வதுண்டு.

போதாக்குறைக்கு வெள்ளிக்கிழமை தோறும் கிழக்கே உலகம்பட்டியிலிருக்கிற முருகன் கோவிலுக்கு சைக்கிளில் கிளம்பி விடுவார்கள். உள்ளூர் முருகனை விட உலகம்பட்டி முருகன் அப்படி என்ன ஸ்பெஷல் என்று கேட்டு ராஜாராமன் அடிக்கடி அவர்களை கிண்டல் செய்வதுண்டு. அதற்காக அவர்கள் கோபித்துக் கொள்வதில்லை.

மாறாக அவன் கிண்டலில் இருக்கிற நகைச்சுவையை ரசிப்பார்கள். ராஜாராமனுக்கு இயல்பிலேயே நல்ல நகைச்சுவை உணர்ச்சி உண்டு. வெளியாகிற அத்தனை வெகுஜனப் பத்திரிக்கைகளிலும் அவனது நகைச்சுவை துணுக்குகள் வெளிவந்து கொண்டிருப்பதால் எழுத்தாளன் என்றும் அவனுக்கு இங்கே பெயர்.

மூவருக்குள்ளும் யார் யாரை அதிகம் நேசிக்கிறார்கள் என்று சொல்லிவிட முடியாதபடி நெருக்கம் இருந்தது. தான் அவர்களை நேசிப்பதை விடவும் அவர்கள் அதிகமாக தன்னை நேசித்து தன் நலனில் காட்டுகிற அக்கறை குறித்து தனிமையில் யோசித்து நன்றி-யுணர்ச்சியினால் ராஜாராமன் அடிக்கடி மனம் கரைவதுண்டு.

ராஜாராமனுக்கு குடிப்பழக்கம் உண்டு. அப்படியொன்-றும் மொடாக்குடியன் அல்லவெனினும் மாதத்திற்கு இரண்டு முறையோ மூன்று முறையோ அவனுக்கு நிச்சயம் மதுவேண்டும். அது குறித்து ராஜாராமனுக்கு என்றைக்குமே குற்ற உணர்ச்சி இருந்ததில்லை.

ஆனால் தன்னையே நொந்து கொள்கிற அளவுக்கு ராஜாராமனுக்கு இன்னொரு பழக்கமும் இருந்தது. சீட்டாடுவது! கிழக்கே பத்து மைலுக்கப்பாலிருக்கிற சிறிய நகரம் ஒன்றில் இயங்குகிற கிளப் ஒன்றில் அவன் ஐந்து வருடங்களாக உறுப்பினர். தினம் சாயந்திர மானால் அங்கே போய் இரவு ஒன்பதரை வரை ஆடி விட்டு பத்து மணிக்குப் புறப்படுகிற கடைசிப்பஸ்ஸைப் பிடித்து திரும்பி வருவதை வழக்கமாகக் கொண்டிருந்-தான்.

ஆனால் கணக்கும் கொளஞ்சியும் இந்த அறைக்கு வந்தபிறகு கதை நடக்கவில்லை. இவன் சொல்லாமலே இவனுக்கிருக்கிற அந்த கெட்ட பழக்கம் அவர்களுக்கு எப்படியோ தெரிந்து விட்டது. சம்பள நாளில் ராஜாராமன் சம்பளம் வாங்கிக் கொண்டு அறைக்கு வந்ததுமே கொளஞ்சி துணையுடன் அதிரடி நடவடிக்கை எடுத்து மொத்த சம்பளப் பணத்தையும் கணக்கு பிடுங்கி வைத்துக்கொள்வான்.

மூவரும் சாப்பிடுகிற — இவர்களது அறையை ஒட்டி-னாற்போலிருக்கும்—எஸ்ஸார் ஹோட்டலுக்குப்போய் கணக்கை சரிபார்த்து ராஜாராமன் சாப்பிட்டதற்குரிய பணத்தை கொடுத்துவிட்டு அப்படியே எண்ணெய், சோப்பு, மூக்குப்பொடி என்று வாங்க ராஜாராமன் கணக்கு வைத்திருக்கிற சேது செட்டியார் கடைக்குப் போய் கணக்குத் தீர்த்துவிட்டு வருவான்.

இரண்டு கடைகளுக்கும் கணக்குத் தீர்த்த பிறகு ராஜாராமனின் சம்பளப் பணத்தில் நானூறோ ஐநூறோதான் மிஞ்சும். அதை, வாரவிடுமுறையில் மனைவியும் குழந்தைகளும் வசிக்கிற — இங்கிருந்து நூறு கிலோ மீட்டருக்கு அப்பாலிருக்கிற — சொந்தக்-கிராமத்துக்கு ராஜாராமன் பஸ் ஏறுகிற கடைசி நிமிஷத்தில்தான் கொடுப்பான்.

ஆமாம்! மூவரில் ராஜாராமனுக்கு மட்டும் கல்யாண மாகி மனைவி குழந்தைகள் என்று இருந்தார்கள். ஏறக்குறைய சமவயதினர்களான கணக்கையும் கௌஞ்சியையும் விட இருபது வயது மூத்தவனாக ராஜாராமன் இருந்தும் புதிதாக மூவரையும் பார்க்கிற எவனுக்கும் ராஜாராமனே அவர்களில் மிகவும் இளையவனாகத் தோன்றுகிற அளவுக்கு ராஜாராம னுக்கு அப்படியொரு நோஞ்சானான உடல்வாகு.

ராஜாராமனின் உடம்பை உத்தேசித்து அவனை எந்த வேலையும் செய்ய விடுவதில்லை. தினசரி காலையில் அறையைக்கூட்டி சுத்தம் செய்வதிலிருந்து அழுக்கும் மூக்குப்பொடி கறையும் மலிந்த ஜட்டி உட்பட ராஜா ராமனின் மொத்த துணிமணிகளையும் சோப்பு போட்டு அலசிக்கொண்டு வருவதுவரை கணக்கோ கௌஞ்சியோதான் மாற்றி மாற்றி செய்வார்கள். ஏறக்குறைய சிறிய நீச்சல் குளம் போன்றிருக்கிற பத்தினி ஆத்தாள் கிணற்றில் குளிக்கிறபோது இவனுக்கு முதுகு சொறிந்து விட்டு அழுக்குத்தேய்ப்-பதும் நடக்கும்.

அதைக்கூட நண்பனுக்குச் செய்கிறோம் என்கிற உணர்வில்லாமல் 'இது எனக்கு விதிக்கப்பட்ட கடமை இதைநான் செய்கிறேன் அவ்வளவுதான்' என்பது மாதிரியான மனோபாவத்துடன் இயல்பாக அவர்கள் செய்வது ராஜாராமனை அடிக்கடி ஆச்சரியத்தில் ஆழ்த்தும்.

கௌஞ்சி யார் யாரையோ பிடித்து கஷ்டப்பட்டு சென்ற மாதம் மாவட்ட மாறுதலில் தன் சொந்த மாவட்டத்துக்குப் புறப்பட்ட போது இவன் மிகவும் துக்கப்பட்டுப் போனான்.

அதிலிருந்து மீள்வதற்குள் கணக்குக்கும் மாறுதல் உத்திரவு வந்து விட்டது. உத்திரவு பத்து நாட்களுக்கு முன்பே வந்து விட்டபோதிலும் இவன் இடத்தில் பொறுப்பேற்றுக் கொண்டு இவனை விடுவிக்க வேண்டிய அந்தப்புதிய கணித ஆசிரியரின் வருகைக்-காக காத்திருந்தான். ஆயிற்று. அந்தப் புதிய கணித ஆசிரியரும் காலையில் வந்துசேர்ந்து பொறுப்பேற்றுக் கொண்டு விட்டார். மாலை நாலு மணியளவில் ஸ்கூலில் தனக்கு டீ பார்ட்டி இருப்பதாக சொல்லி விட்டுப்போன கணக்கை இன்னும் காணோம்.

ராஜாராமனுக்கு சுவரில் சாய்ந்து சாய்ந்து முதுகு வலித்தது. எழுந்து சோம்பல் முறித்தபடி அறை வாசலுக்கு வந்த போது பழனிச்சாமியும் கூடவே வந்தான்.

எதிரே எஸ்ஸார் ஹோட்டல் முன்பு பாத்திரம் துலக்கிக் கொண்டிருந்த தன் அம்மாவை ம்மா.. ம்மா என்று கூப்பிட்டு தன் பேண்டையும் சட்டையையும் தொட்டுக்-காட்டி கைகளை அசைத்து பழனிச்சாமி என்னவோ சொன்னான். இந்த பேண்டையும் சட்டையையும் எனக்குக் கொடுத்த ஸார் ஊருக்குப் போகிறார் அம்மா என்று அவன் சொல்வதை ராஜாராமன் புரிந்து கொண்டான்.

எழுதப் படிக்கத்தெரியாதவனாக மனவளர்ச்சி குன்றிய வனாக — வாய்பேச முடியாதவனாக இருந்தும் பழனிச்சாமிக்கு எப்படியோ எல்லா விஷயங்களும் தெரிந்து விடுகிறது.

உள்ளூரில் நடைபெறும் பெரிய வீட்டுத்திருமணங்கள், சாவுகள், பெரிய பெரிய அரசியல் தலைவர்களின் இயற்கை மற்றும் செயற்கை மரணங்கள், சுற்றுப் பட்டித்திருவிழாக்களில் நடைபெறும் கூத்துக்கள் ஆகியவற்றைத் தெரிந்து கொண்டு தன் பாஷையில் ராஜாராமனிடம் அதைப்பற்றிச் சொல்லுவான்.

உள்ளூர் கல்யாண கருமாதிச் சாப்பாடுகளுக்கெல்லாம் தவறாமல் போய்ச் சாப்பிட்டுவிட்டு வந்துவிடுவான். போகுமுன் அறைக்கு வந்து ராஜாராமனையும் தன்னுடன் சாப்பிட வரும்படி கூப்பிட்டு வற்புறுத்து வான்.

நான் சாப்பிட்டுவிட்டேன் என்றோ அல்லது நீ போ நான் அப்புறம் வர்றேன் என்றோ அவனுக்கு இவன் ஏதாவது சமாதானம் சொல்லி அனுப்புவான்.

ஒரு முறை, ரொம்பவும் வற்புறுத்துகிறானே என்று இன்னும் பனி விலகாத விடிகாலையில் பழனிச்சாமி-யுடன் கோயிலுக்குப் போய் மார்கழி பஜனையை வேடிக்கை பார்த்துவிட்டு சுண்டல் வாங்கிக் கொண்டு வந்த அனுபவமும் ராஜாராமனுக்கு உண்டு. அரசாங்க உத்தியோகஸ்தனான ராஜாராமன் இந்த அரைப் பைத்தியம் பழனிச்சாமியின் தோளில் கை போட்டபடி உள்ளே நுழைந்ததைக் கண்டு கோவிலிலிருந்த பெண்கள் சிரித்தார்கள்.

கிராமத்தினருக்கு தங்கள் நட்பு ரஸமாக இருப்பதை ராஜாராமன் உணர்ந்தே இருந்தான். அதை அவன் ஒரு பொருட்டாகவே நினைப்பதில்லை.

மணி ஐந்து முப்பது ஆகிவிட்டது. இன்னும் கணக்கைக் காணோம். ஆறு மணிக்கு வருகிற 'சிவா'வில் அவன் புறப்படுவதாக ஏற்பாடு.

ராஜாராமனுக்கு டீ சாப்பிட வேண்டும் போலிருந்தது. அறை மூலையில் கிடந்த துண்டுத்தாளை எடுத்து டீ-2 என்று எழுதிகாசையும் கொடுத்து பழனிச்சாமியை அனுப்பி வைத்தான்.

வழக்கமாக அப்படித்தான். தனக்கு டீகுடிக்க வேண்டும் போலிருக்கும் போதெல்லாம் பழனிச்சாமிக்கும் சேர்த்து அவனிடம் காசு கொடுத்து அனுப்புவான். சில நாட்களில் சிங்கிள் டீக்கே லாட்டரி அடிக்கிற நிலைமை ஏற்படும். அம்மாதிரி சமயங்களில் ரொம்பச் சொந்தமாக பழனிச்சாமியின் பையில் கைவிட்டு ராஜாராமன் சில்லறை எடுத்துக் கொள்வதும் உண்டு. பழனிச்சாமி இரண்டு கைகளையும் விறுவிறு என்று வீசியபடி டீ வாங்கப் போனான். பின்புறப் பார்வையாகப் பார்க்கையில் நேற்று கணக்கு அவனுக்குக் கொடுத்த மடிப்புக் கலையாத பேண்ட்டும் சர்ட்டும் நல்ல எடுப்பாகத்தான் இருக்கிறது.

உடை விஷயத்தில் பழனிச்சாமி சீமான்தான். எப்போதும் பேண்டும் — முழுக்கை சட்டையும் தான் அணிவான். ராஜாராமன் கணக்கு கொளஞ்சி இந்தக் கிராமத்தின் பிற அரசு அலுவலர்கள் என்று மாற்றி மாற்றி யாராவது கொஞ்சம் பழசாகிப்போன தங்கள் உடைகளை அவனுக்குக் கொடுத்துக் கொண்டிருப்பார்கள். ஆனால் நல்ல கோடைகாலத்திலேயே சட்டை மேல் சட்டை என்று நாலைந்து சட்டைகளைப்போட்டு சீக்கிரமாக எல்லாவற்றையும் கிழித்துக் கொண்டு விடுவான்.

டீ வாங்கிக் கொண்டு பழனிச்சாமி திரும்புகையில் அவனுக்குப்பின்னே வேகவேகமாக கணக்கும்வந்தான். நேரமாகிவிட்ட பரபரப்பு அவன் முகத்தில் தெரிந்தது.

''ஏன்டா இவ்வளவு லேட்டு?'' என்று விசாரித்தபடி டீயில் ஒன்றை எடுத்து கணக்கு முன் நீட்டி, ''குடி!'' என்றான் ராஜாராமன். வேண்டாம் என்று மறுத்தவனிடம், ''இதுதான் என் கடைசி டீ. மறுக்காதே!'' என்று வற்புறுத்திய போது மேலாக ஒரு உறிஞ்சு மட்டும் உறிஞ்சி விட்டு டீயை ராஜாராமனிடமே திருப்பித்தந்தான்.

டீயை உறிஞ்சியபடி பிரியப் போகிற நண்பனையே பார்த்துக் கொண்டிருந்தான் ராஜாராமன். அதிகம் போனால் இன்னும் பத்து நிமிடம். என்ன பேசுவது?

கணக்கும் ராஜாராமனையே பார்த்தபடி நின்றான். கடைசி நேரத்து உணர்ச்சிகளை பரிமாறிக் கொள்ளக் கூட வழியில்லாதபடி திடீரென்று பஸ் வந்துவிட்டது.

பெட்டிபடுக்கையை பழனிச்சாமி தலையில் தூக்கிக் கொண்டு முன்னே ஓடி பஸ்ஸிற்குள் இடம் பார்த்து விட்டு கீழே இறங்கியதும் கணக்கு அவசரமாய் பர்ஸைப் பிரித்து ஒரு இரண்டு ரூபாய் நோட்டை எடுத்து அவன் பைக்குள் திணித்தான். ''வருத்தப் படாதே .. அடிக்கடி கடிதம் போடு என்றவன் கொஞ்சம் நிறுத்தி கொஞ்சுகிற மாதிரியான குரலில், பழையபடி குடி சீட்டாட்டம் என்று கிளம்பி விடாதே!'' என்று ராஜாராமனின் கன்னத்தில் இதமாகத் தட்டினான்.

வெளிப்பட்டு விடாதபடி கண்ணீரை அடக்க ராஜாராமன் மிகவும் சிரமப்பட்டான். ''சரி!'' என்று தனக்கே கேட்காத குரலில் பதில் சொன்ன போது பஸ் புறப்பட்டு விட்டது.

அவசரமாய் படியில் தொற்றிக் கொண்டு கையசைத்த கணக்கிற்கு ராஜாராமன் பதிலுக்கு கையசைத்தபோது பழனிச்சாமியும் கூடவே சேர்ந்து கையசைத்து விடை கொடுத்தான்.

அறைக்கு திரும்பி வந்து அமர்ந்த போது இந்த அறைக்கு கணக்குக்கும் கொளஞ்சிக்கும் முன்பு வந்து தன்னுடன் தங்கி ஆறுமாதம் ஒரு வருடம் என்று குறுகிய காலத்தில் எங்கெங்கோ மாறுதலில் சென்று விட்டசெல்வம், ஆனந்தராமன், மிக்கேல், நாகராஜனின் நினைவு வந்தது.

இப்போது போலவே அந்த ஒவ்வொருவரின் பிரிவுக்கும் தான் மிகவும் கலங்கியதை நினைவு கூர்கையில் தனக்கு மட்டும் ஏன் மனதும் உணர்ச்சிகளும் இவ்வளவு மென்மையாகிப் போயின என்று ராஜாராமனுக்கு ஆச்சரியமாய் இருந்தது. யார் போனால் என்ன! யார் வந்தால் என்ன! பழனிச்சாமி என்றைக்கும் எங்கேயும் போய் விடப்போவதில்லை. போதும்!

இடதுபுறமாய் சற்று தள்ளி அமர்ந்து முழங்காலில் முகத்தைப்புதைத்தபடி இருந்தவனை, ''பழனிச்சாமி!'' என்று, மெல்லிய குரலில் கூப்பிட்டு, 'அருகே வா!' என்று சைகை காட்டி அவன் நகர்ந்து வந்ததும் அவன் தோளில் தன் கரத்தைப்பதித்து அழுத்தினான் ராஜாராமன்.

★

# காலத்தோடு பயணம்

வெ. சுப்ரமணியபாரதி

டாக்டருடைய தயக்கத்தைப் பார்த்த பின் என் படபடப்பு அதிகமானது. எச்சிலை அழுத்தமாக விழுங்கினேன். டாக்டர் திரைச்சீலைப்பக்கம் திரும்பி சாலையைப் பார்த்தார். சைக்கிள்களிலும், பைக்குகளிலும், ரிக்ஷாக்களிலும் மனிதர்கள்... மனிதர்கள்...

அப்பா மட்டும் படுக்கையை விட்டு நகர முடியாமல் பக்கத்து அறையில்...

''மிஸ்டர் அருண்! உங்கள எதுக்கு கூப்பிட்டனுப்பிச்சேன்னா...''

''...சொல்லுங்க டாக்டர்'' எனது குரலிலேயே திகில் தெரிந்தது.

''நீங்க எப்ப பேஷன்ட்ட வீட்டுக்கு கூட்டிட்டுப்போகலாம்னு இருக்கிங்க ''

திகைத்தேன்.

''என்ன யோசிக்கிறீங்க?''

''என்ன டாக்டர்.. நீங்கதானே டிஸ்சார்ஜ் பண்ற டேட் சொல்லணும்?''

''யெஸ் . யெஸ்...'' தனது இருக்கைக்கு திரும்பினார் டாக்டர்

''உட்காரு ''

''டாக்டர்... அப்பா...''

''ம் வீட்டுக்கு கூட்டிட்டு போகலான்னு நினைக்கிறேன் .''

''வாட்யூ மீன்''

''ஆமா அருண் கஷ்டம்''

எதிர்பார்த்த விஷயமானாலும் அதிகாரப்பூர்வமாக வந்தபோது அதிர்ச்சியாக இருந்தது.

''கொஞ்சம் டிரை பண்ணுங்க டாக்டர்'' என்னை அடக்கமாட்டாமல் கண்ணீர் கொஞ்சமாய் எட்டிப் பார்த்தது.

''ஷூயர் . ஷூயர்... ட்ரை பண்றோம் அருண் பட், ஒன்னும் பயனிருக்காது. கிட்டத்தட்ட லங்ஸே இல்லாம இப்ப அவர் உயிர் வாழ்றார். ஹார்ட் நிலமெ ரொம்ப மோசம்.. ட்ரான்ஸ்ப்ளான்டேஷன் இங்க சாத்தியமில்ல... எங்கயும் கூட்டிட்டுப் போறாப்பல அவர் நிலைமை இல்ல... யோசிச்சுப்பாருங்க''

மிகவும் மலைப்பாக இருந்தது.

''ப்ளீஸ் ட்ரை பண்ணுங்க ஸார்''

''சரி... அப்புறம் உங்க இஷ்டம்''

''இல்ல .. இனி என்ன செய்யணும்னு நீங்களாவது சொல்லுங்க டாக்டர் ''

''இட்ஸ் டூலேட்... மிஸ்டர் அருண்''

''டாக்டர் தப்பா எடுக்கலன்னா, எனக்கு ஒரு ஐடியா தோணுது...''

''ப்ளீஸ்...''

''பம்பாய், டில்லில இருந்து வேற ஸ்பெஷலிஸ்ட் யாரையும் கூப்பிடலாமா? இல்ல, எதுக்கு சொல்றேன்னா''

வருத்தத்தோடு சிரித்தார் டாக்டர்.

''உங்களுக்காக அப்படி செய்றதுல எனக்கு ஒன்னும் கஷ்டமில்ல. காலைல பாத்துட்டு செய்வோம்''

''தாங்க்யூ டாக்டர் ''

ரூமுக்குள் வந்தபோதுகமலா மிகவும் வெளிறிப்போயிருந்தாள்.

''என்னங்க பயமா இருக்கு''

''ம்''

''டாக்டர் எதுக்கு கூப்பிட்டு விட்டாரு?''

''அப்பாவ வீட்டுக்குக் கூட்டிட்டுப் போகச் சொல்றார்''

''ஐயோ அப்பன்னா''

''சரி, குமரேசன் எங்க?''

''அதோ படுத்திருக்கான்''

''அவனையும் கூட்டிட்டு நீ திண்ணையில போய்ப் படு .. நான் இருந்துக்கறேன் ''

கமலா, குமரேசனை எழுப்பி திண்ணைக்கு போனாள். நான் சோர்வோடு நாற்காலியில் போய் அமர்ந்தேன். குறைந்த விளக்கு வெளிச்சத்தில் அப்பா ஆக்ஸிஜன் சிலிண்டர் குளுக்கோஸ் பாட்டில், ஏராளமான ரப்பர் குழாய்களின் உதவியோடு மூச்சுத்திணறுவதைப்பார்க்க சகிக்க வில்லை.

ராட்சஷ ராட்டினத்தில் மிக உயரமான பகுதியில் சுற்றுவது போல வயிற்றுக்குள் ஒரு பந்து வந்து அடைத்துக் கொண்டது.

எப்படிப்பட்ட அப்பா! கம்பீரம் கம்பீரம் .. 'வள ..வள' என பேசும் அம்மாகூட அப்பா ஒரு முறைமுறைத்தால் மூச்சடக்கி நிறுத்திவிடுவாள். அதிகம் பேசினாலும் அம்மா நல்லவள் யாரும் வேதனைப்பட அவளுக்குப் பொறுக்காது அவளை அப்பா சின்ன வயதில் மிகவும் கஷ்டப்படுத்தியிருக்கிறார். அம்மாவே சொன்ன செய்திகள் ஆனாலும் அப்பாவுக்கு சீரியஸாகி ஆஸ்பத்திரியில் சேர்த்தபின் அம்மாவே குற்றுயிராய்ப் போய்விட்டாள் அதுதானே தாம்பத்தியம் ..

அம்மாவை கடைசி அறையில் சேர்த்திருக்கிறது. ஏற்கெனவே அம்மாவுக்கு ரத்த அழுத்தப்பிரச்சனை... பாவம்! அழகான அம்மாவை மங்களமாகவே பார்த்துவிட்டு... இனிமேல் நினைத்துப் பார்க்கவே முடியவில்லை!

அப்பா மூச்சுத்திணறினாலும், அவர் தூங்கிக் கொண்டிருப்பது போலத்தான் எனக்குப் பட்டது. அப்பா தூங்கும்போது அப்படித்தான் வேக வேகமாக மூச்சு வாங்குவார். வாங்கி மூச்செல்லாம். மனசு 'கப கப' வென எரிந்தது!

கமலாவுக்கு அப்பாமேல் பாசம், அன்பு எல்லாம் அதிக மில்லை... பயமும் மரியாதையும் தான்! யாருக்குமே அப்படித்தானிருக்கும் ..

அப்பா கதர் தான் உடுத்துவார். கஞ்சிபோட்டு துவைத்த முழுக்கைச் சட்டை, எட்டுமுழ வேட்டியோடு அப்பாவைப்பார்க்க கண்கொள்ளாக் காட்சியாயிருக்கும் கதருக்கு சம்பந்தமில்லாமல் சிங்கப்பூர் செண்ட் அடித்துக் கொள்வார். கேட்டை திறக்கும் போது அடுப்பாங்கரையில் வாசமடிக்கும். சினிமாவைப்பற்றி பேசிக்கொண்டிருந்தால், அம்மா பேச்சை நிறுத்திக் கொள்வாள். இலங்கை ஒலிபரப்புகூட்டு ஸ்தாபனத்தில் அறிவித்துக் கொண்டிருக்கும். பி.எச்.அப்துல்ஹமீதும் ராஜேஸ்வரி சண்முகமும் வால்யூமை குறைத்துக் கொள்வார்கள்.

மேலதிகாரிகள் கூட அப்பாவிடம் பயந்துதான் பேசுவார்கள் என அப்பாவுடன் வேலை பார்க்கும் ரங்கராஜு மாமா சொல்வார்.

அது என்னமோ அப்பா அப்படியோ தோன்றிப் பழகிவிட்டார். அவரும் கதை படிப்பார். ஜெயகாந்தன் மட்டும் படிப்பார். பாட்டு கேட்பார். பாகவதர் பாட்டு மட்டும் கேட்பார். படம் பார்ப்பார். சிவாஜி படம் தான் பார்ப்பார்.

புதுப்படத்திற்கு பிடிவாதமாய் அவரை அழைத்துப் போகச் சொன்னால் காதிநேரம் வெளியே சிகரெட் பிடித்துக் கொண்டு நிற்பார்.

சிகரெட்... அதுதானே எங்கள் குடும்பத்திற்கு வினையாக வந்து சேர்ந்தது எமன்! என்ன ஒரு கஷ்டம் என்றால், அப்பாவிடம், 'சிகரெட் குடிக்காதே' எனசொல்லும் தைரியம் யாருக்கும் இல்லாமல் போனது ஒருமுறை ஒரு பத்திரிக்கையில், 'சிகரெட்... தனக்குத் தானே வைத்துக்கொள்ளும் கொள்ளி' என ஒரு புதுக் கவிதை வரியை அப்பாவிடம் காட்டினேன். அதைப் பார்த்துவிட்டு, ''நல்லாருக்கு. உன் பாடத்தைப்படிக்கற வழியப்பாரு...'' என்று சொல்லிவிட்டார்.

என் மீதும் தம்பி மீதும் தங்கம் மீதும் அப்பாவுக்கு மிகவும் பிரியம். ஆனால் காட்டிக் கொள்ள மாட்டார். எப்போதாவது தங்கை கீதாவின் கன்னத்தில் முத்தம் கொடுப்பார். அவளோ, ''என்னப்பா சீ .'' என எரிச்சல்படுவாள். அப்பா — போனால் போகிறது என சிரித்துக் கொண்டே போய்விடுவார்.

அம்மாவுக்கு உடல்நலம் சரியில்லாமல் இருந்தால் பதறிப் போய்விட மாட்டார். ஆனால் கவலையாய் இருப்பார். கூர்ந்து பார்த்தால்தான் அந்த கவலை தெரியும்.

எந்த உணர்ச்சியையும் வெளிக்காட்டிக் கொள்ளக் கூடாது. என்ற அவரது கொள்கை எப்போது தோற்றது என்றால், கமலா கர்ப்பமுற்றிருந்த போது தான். கமலாவுடன் அப்பா வலிய வலிய பேசியதென்ன குங்குமப்பூவாய் வாங்கிக் கொடுத்ததென்ன, ஆண் குழந்தை பெற்றால் வாஷிங்மெஷின் வாங்கித்தரு-வதாய் பேச்சு வார்த்தை நடத்தியதென்ன-எங்களுக்-கெல்லாம் ரொம்ப ஆச்சரியமாக இருந்தது!

குமரேசன் பிறந்ததும்தான் தனது மகிழ்ச்சியைவெளிக் காட்ட ஆரம்பித்தார். ஒரு வருடத்தில் மூன்றுமுறை ஹார்ட்-அட்டாக் வந்து இப்போது ஆஸ்பத்திரியில் மூச்சு திணறிக்கொண்டிருக்கிறார்.

நான் சினிமாவில் சோகக் காட்சி வந்தால்கூட அழுது விடுவேன், ஆனால் அப்பா அழுது நான் பார்த்தது என்றால், அது ஆஸ்பத்திரியில் சேர்த்த அன்றுதான்.

தன்னிடம் ஒரு சிகரெட்டாவது வாங்கி வரும்படி அப்பா சொன்னதாக சுந்தர் சொன்னபோது எனது இதயம் சுக்குநூறாய் போய்விட்டது. நான் போனபோது கண் கலங்க, ''நல்ல ஸ்பெஷல்லிஸ்டா கூட்டிட்டு வாங்கப்பா'' என சொன்னபோது நொறுங்கியே போய் விட்டேன்.

கொஞ்சநேரத்தில் சுயநினைவு இழந்தவர் ஒரு வார-மாக இப்படியே இருக்கிறார். ஒரு வாரம் அப்பா படுக்கையில் இருப்பதா!

அப்பாவைப் பார்க்கப் பார்க்க என் கண்கள் பொங்கியது.

''அண்ணே ''

நிமிர்ந்த போது சுந்தர் நின்றிருந்தான்.

''அம்மா கூப்பிடறாங்க ''

எழுந்தேன்.

''நீ இரு .. என்னன்னு கேட்டு வந்தர்றேன்...''

அம்மாவின் அறையை திறந்தபோது அவளின் முகம் பேயறைந்தது போலிருந்தது.

''என்னம்மா'' எனது வினவலில் உயிர் இல்லாமல் போனதை அம்மா கவனித்தாள்.

''அப்பாவப் பார்க்கணுமாம் அம்மா'' அப்போதுதான் கவனித்தேன் கீதாவை. கீதாக்குட்டியா இது? முக மெல்லாம் வீங்கியிருந்தது.

அம்மாவப்பார்த்தேன். பாவமாக இருந்தது.கெஞ்சுவது போலான அந்தப் பார்வையை தாங்க முடியவில்லை.

''சரி .. வாங்க போகலாம்...'' அவர்களை அழைத்துக் கொண்டு வெளியே வந்தபோது, அப்பாவின் அறை-யிலிருந்து சுந்தர் ஓடி வந்தான்.

''அண்ணே... அண்ணே... அப்பா''

நாங்கள் எல்லோரும் அப்பா அறைக்குள் போன போது எல்லாம் முடிந்திருந்தது. அப்பா அவராக இல்லாமல், அதுவாக படுத்திருந்தார். நான் மயங்கி சாய, என்னை யாரோ தாங்கினார்கள்.

''போவோமா, அருண்?'' சித்தப்பா மெதுவாக என்னிடம்கேட்டார்.எரிந்துகொண்டிருந்த அப்பாவைப் பார்த்தேன். தலையாட்டினேன். திரும்பும் வழியில் யாரும் யாருடனும் ஏதும் பேசவில்லை. பேச என்ன இருக்கிறது.

மெயின்ரோடு வந்ததும் கொஞ்சம் பேச ஆரம்பித்-தார்கள்.

"எப்பேர்ப்பட்ட சாவு?" என அப்பா ஆஃபீஸ் ஹெட்-கிளார்க் பெருமூச்சு விட்டார்.

"ராஜா மாதிரியில்ல வாழ்ந்தார்? ம்... அப்படி ஒரு ஃபிகர் ஊர்ல யார் இருக்கா" என என்னிடம் சொல்லி வருந்தினார் பக்கத்து தெரு ஜவுளிக்கடைக்காரர்.

இன்னும் சிலர் தியேட்டரொன்றில் சினிமா மாற்றி-யிருப்பது பற்றியும் எக்ஸ்ட்ரா சிலிண்டர் வேண்டு மானால் யாரைப் பார்க்க வேண்டுமென்பது பற்றியும், இப்படியே போனால் ஜனதாதளம் என்னவாகு மென்பது பற்றியும் பேசிக்கொண்டு வந்தார்கள்.

பெரியப்பா மாமாவிடம் வளைகுடாப் போர் பற்றிய தனது கலக்கத்தை வெளிப்படுத்தினார் சித்தப்பா எத்தனை நாள் லீவு கேட்கலாம் என பெரியப்பாவிடம் கேட்டார்.

சரி ..

இவர்களெல்லாம் நிகழ்களுக்கு வர ஆரம்பித்து விட்டார்கள். ஏன் நிகழ் எதார்த்தத்தில் இருந்து கொண்டு அப்பா மரணத்தைத் தனி நிகழ்ச்சியாக காவேரி நீர் பிரச்சனையைப் போல - பார்ப்பவர்களும் இருக்கிறார்கள்.

'நமக்குத்தான் அப்பா இழப்பு இப்படி பாதிக்கிறதா' என யோசித்துப்பார்த்தேன். இந்த உலகில் இதுவரை எத்தனை அப்பாக்கள் இறந்திருக்கிறார்கள். எப்படி எல்லோரும் இழப்புக்களை ஜீரணித்திருக்கிறார்கள்.

எல்லோரும் வீட்டுக்கு வந்தோம். குளித்துவிட்டு சாப்பிட்டு விட்டு திண்ணையின் மூலையில் போய் அமர்ந்தேன்.

உறவினர்கள் எல்லாம் மொட்டை மாடியில் இருக்-கிறார்கள் போலும்.

மீண்டும் மீண்டும் அப்பா ஞாபகம் வந்து என்னை அமுக்கியது.

எனக்கு நினைவு தெரிந்த நாளிலிருந்து ஒரு நெருக்-கமான மனிதரின் மரணத்தையும் நான் சந்தித்த தில்லை.

எனக்கு மரணம் குறித்து பொதுவானகருத்தொன்றைத் தவிர அனுபவபூர்வமான எண்ணம் இல்லை. அதுவே அப்பாவின் இழப்பைப் பெரிதாகக் காட்டியது. அது பெரியது தானே? அம்மாவுக்கு எப்படியிருக்கும்? அவளைப் பார்க்கவே எனக்கு தெம்பில்லை. அதற்கு மேல் கீதாவும் சுந்தரும் பரிதாபமாக இருந்தார்கள்.

காலம் எனது இந்த இழப்பை எப்படி ஈடுகட்டப் போ-கிறது? திகைப்பாக இருந்தது.

கமலா குமரேசனைத் தூக்கிக்கொண்டு வந்தாள்...

"இந்தாங்க ஒங்க பிள்ள... இன்னக்கி பூராவும் உங்கள பாக்காம முறைச்சுக்கிட்டு இருக்கு." குமரேசனை மடியில் வைத்துக் கொண்டு கன்னத்தில் முத்தமிடப் போனேன். முகத்தை திருப்பிக்கொண்டான். கோபம்! குமரேசன் முகத்தைத் திருப்பிய போது கோபமாக முறைத்தான். அதிர்ச்சி அடைந்தேன்... இது என்ன அப்பா முறைப்பது போல இருக்கிறது...?

★

# அம்மாவுக்குச் சோறு

**M.S. ராஜா**

மீனாவுக்கு, வகுப்பில் டீச்சர் நடத்தும் பாடம் காதில் விழவில்லை. பசி பாடத்தை கேட்க மறுத்தது. இவள் பாடத்தை கேட்க ஆர்வப்பட்டாலும் நேற்று இரவும் இன்று காலையும் சாப்பிடாததால் பசி காதை அடைத்தது.

அவள் அம்மா இரண்டு நாட்கள் கட்டிட வேலைக்கு போக முடியாமல் வீட்டில் முடங்கியதால் வீட்டின் அடுப்பும் எரியாமல் முடங்கி விட்டது.

பள்ளியில் கிடைக்கப் போகும் சோற்றை நினைத்தால் மனதுக்குள் நிம்மதி, சந்தோசம் வயிற்றுத் தீயை அணைக்கலாம் ஒரு நிம்மதிப் பெருமூச்சு எப்போ மணியடிக்கும் எப்போ சோறு கிடைக்கும்? .. பசியில் தண்ணீரைக் குடித்துக்குடித்து வயிறுதான் வலித்ததே தவிர பசி நின்றபாடில்லை.

நேரம் போகாமல் அடம் பிடித்தது. அருகிலிருந்த மாதா கோவிலின் மணியோசை கேட்டது. 'அப்போ மணி பனிரெண்டு' என்று நினைத்தாள். இன்னும் சிறிது நேரத்தில் பள்ளிக்கூடம் மணியடித்து விடும். சோறு கிடைத்து விடும். பையிலிருந்த தட்டைத் தொட்டுப்பார்த்துக் கொண்டாள்.

வயிற்றுக்குள் பசி ஏதோ செய்தது. ஹைட்ரோ குளோரிக்அமிலமே சுரந்தது. சிறுகுடலை பெருங்குடல் என்ன செய்கின்றதென்று தெரியாத வலியெடுத்தது.

மணியடித்தது. உய்ய் யென்ற பெரும்சத்தத்துடன் சிறுவர் கூட்டம் கலைந்து சாப்பாடு பரிமாறும் வரிசையில் நின்றனர். மீனா பின்னுக்குத் தள்ளப் பட்டாள். எட்டிப்பார்த்தாள். ஒவ்வொருவராக சாப்பாடு வாங்கி தான் வாங்க வெகு நேரமாகும்போலிருந்தது. கால்கடுத்தது. சாப்பாட்டை நினைத்ததும் வலி பறந்தது.

அருகில் மிகஅருகில் வந்துவிட்டாள். ஆவலாக தட்டை நீட்டினாள். இரண்டு கரண்டிதான் வைத்தார்கள். தனக்கு சாப்பாடு குறைந்தளவுதான் உள்ளது போல இருந்தது. இன்னும் கொஞ்சம் கேட்போமா? வேண்டாம். அதட்டி இவ்வளவுதான் என்று போகச்சொல்லி விடுவார்கள். பயத்தில் நகர்ந்தாள்.

நல்ல வாசனை. எப்பொழுதும் உள்ளதை விட இன்று உண்மையிலே நல்ல சுவையாக இருக்கும். தன் தோழிகளுடன் அமரச் சென்றவளுக்கு அம்மாவின் நினைவு வந்தது.

அம்மாவை நினைத்துக் கொண்டே வீட்டிற்கு நடந்தாள்.

கட்டிட வேலைக்குப் போய்த்தான் அம்மா தனக்கு சாப்பாடு போடுகின்றது என்று தெரியும். தலைவலி. காய்ச்சல் என்றாலும் வேலைக்குச் சென்று விடுவாள் ஆனால் இன்று காலில் கல் விழுந்து நடக்க முடியாமல் போனதால் வேலைக்கு போக முடிய வில்லை. கல்லும் மணலும் சுமந்தே அம்மாவின் தலை முடிகள் செம்பட்டையாக இருந்தது. மெலிந்த தேகம் மகளுக்கென்றே வாழ்ந்து கொண்டிருக்கும் தெய்வம் ..... ஆனால் ஒருசில நேரம் கோபம் வந்து விட்டால் ''பிறக்கும் போதே அப்பனை முழுங்கியவளே, அந்த தெய்வமிருந்தா நான் இந்த கஷ்டமாபடுவேன்''? என்று நொந்து கொள்வாள்.

சட்டியில் சாப்பாடு குறைந்தால் அவளுக்குப் புளிச்சேப்பம் வருவதாக கூறி தனக்கு சாப்பாடு கொடுத்து விட்டு அவள் பட்டினி கிடந்தே உடம்பை கெடுத்துக் கொண்டாள். நேற்று கூட இருந்த சோற்றை தனக்கு கொடுத்து விட்டு அம்மா சாப்பிடாமல் பட்டினியிருந்து விட்டது தெரியும். உண்மையிலே உடம்பு சரியில்லாமல் முடங்கிக் கிடக்கின்றாள் என்பதை விட பசியால் தான் எழுந்து நடக்க முடியவில்லை என்பது நன்கு தெரியும். இன்று காலையில் குடிசையின் மூலையில் முனு முனுத்துக் கொண்டு; அம்மா படுத்திருந்தது அவளுக்கு மிக வருத்தமாக இருந்தது.

'இந்தச் சோற்றை கொண்டு போய் அம்மாகிட்டே கொடுத்தா எழுந்து நடக்கும் நாளைக்கு வேலைக்குப் போகும். அதற்குபின் நல்லா சமைச்சு ரெண்டுபேரும் வயிறுமுட்ட சாப்பிடலாம்...? இவ்வாறு நினைத்து வீட்டிற்குக் கொண்டு போனாள்.

போகும் பொழுதே சோற்றின் மேலிருந்த குழமபைத் தொட்டுச் சுவைத்தாள். ஆகா என்னா டேஸ்ட். உட்கார்ந்து பாதியை சாப்பிட்டு விட்டு மீதியை அம்மாவுக்கு... ச்சீ. ச்சீ வேண்டாம் எல்லாமே அம்மாவுக்கு கொடுத்தால்தான் நாளை வேலை பார்க்கத் தெம்புவரும்.

சரி .. அம்மா தன்னை சாப்பிடச்சொல்லி விட்டால், நான் ஸ்கூலில் சாப்பிட்டேன்னு பொய் சொல்லிவிட வேண்டியதுதான். தன்னை தயார் செய்து கொண்டு சென்றாள்.

'வேகமா, அம்மா கிட்டே போகணும் கொடுக்கணும்' நடையை எட்டி வைத்தாள் இன்னும் நான்கு தெரு கடந்து தன் வீட்டிற்குச்செல்ல வேண்டும்.

அவள் ஒரு தெருமுனையில் திரும்பியபோது ஆட்கள் அங்குமிங்குமாக ஓடிக் கொண்டிருந்தார்கள். ஏதோ கலவரம் என்று மட்டும் அவளுக்குப்புரிந்தது. ஓடிவந்த ஒருவர் அவள்மீதுமோதத்தட்டு அந்தரத்தில் சுழன்றது. பருக்கைகள் எல்லாத்திசைகளிலும் சிதறின.

''ஆகா! .. சின்னபொண்ணு விழுந்துட்டாளே''யென்று ஒருவர் அவளை தூக்கிவிட்டு பாவாடையிலிருந்த மண்ணையும், சோற்றையும் தட்டி விட்டு வீட்டை விசாரித்து அனுப்பிவிட்டார்.

வெறும் தட்டுடன் நடந்தாள். நடந்தவள் நின்றாள் முகத்தில் ஒட்டியிருந்த ஒரு சோற்றுப்பருக்கையை எடுத்துப் பார்த்தாள். கண் கண்ணீர்க்குளமானது. தன் தாயை நினைத்து அழுது கொண்டிருந்தாள்.

★

# பற்று

### தனுஷ்கோடிராமசாமி

''சார்... உங்கள... டீச்சர் வரச்சொன்னாங்க'' ஆண் ஆசிரியர்கள் அறையின் வாசலில் நின்று பலமாச் சொன்னான்.

எண்ணெய்க் கிணற்றில் தீப்பற்றியதைப் போல அனைவர் முகமும் வாசல் பக்கம் அந்தச் சின்னஞ்சிறு மாணவன் மீது பாய்ந்தன. மதகு திறக்கப்பட்ட வெள்ளம் போல் பள்ளி முடிந்து மாணவர்கள் வெளியேறிக் கொண்டிருந்தனர்.

''என்னவா?'' அவர் மட்டும் கேட்டார்.

''ஆமா... சார்''

''எந்த டீச்சர்...?''

''சின்ன டீச்சர்!''

''சின்ன டீச்சர்ன்னா?''

''எங்க டீச்சர்!''

''நீ எந்த வகுப்பு?''

''ஏழு பி...''

''எங்கே இருக்காங்க...?''

''ஒம்பது சி யிலே''

ரொம்பவும் இவருக்கு ஆச்சரியம். இந்தப் பள்ளிக்கு வேலைக்கு வந்து பத்து வருஷமாகியும் ஒரு டீச்சர் கூடப் பேசற சந்தர்ப்பம் கூட அவருக்கு வந்ததே இல்ல.

''வணக்கஞ்... சார்!''

''உக்காருங்க ..'' என்ன விஷயமோங்கற பதட்டத்தோடேயே இவர் ஒரு பெஞ்சியில் உட்கார்ந்தார்.

'எதுவானாலும் ஃபேஸ் பண்ண வேண்டியதுதான்'னு மனசில திடத்த வரவழைச்சுக்கிட்டு 'சொல்லுங்க'ங்கற முறையிலே பார்த்தார்.

''தப்பாயிருந்தா மன்னிச்சுக்கங்க சார்...''

''......'' இவருக்கு வேர்த்தது; நாக்கு பட்டுன்னு வரண்டு போச்சு...

''ரொம்ப நாளா... ஒங்க கிட்ட சொல்லணும்னு தோணிச்சு சார்... சந்தர்ப்பமே கெடைக்கலே சார்...

இன்னைக்கு பையன விட்டு கூட்டிட்டு வரச்சொல்லிட்டேன்'' தயங்கித்தயங்கிப் பிறந்த சொற்கள். கண்களில் நீர்.

''......'' இவருக்கும் கண்ணீர் தொற்று நோயானது. எதிலேயோ மாட்டிக்கிட்டது போல மனசு'பக்'ன்னது.

''நாங்க ஒண்ர லட்ச ரூபால வீடு வாங்கியிருக்கோம்... சார்...'' டீச்சர் கண்களில் நீர் ஒழுகியது (இதுதான் ஆனந்தக் கண்ணீரோ?)

நிம்மதி இவருக்கு.

அடுத்து கேள்வி கேட்க வேண்டியது தன் முறை என்பது நினைவுக்கு வர ..

'எப்போ வாங்கினீங்க?''

''ஆறுமாதம் ஆச்சு சார்!''

'சரியான கேள்வியைத் தான் கேட்டு விட்டோம்' என்பதில் இவருக்கு ஏக திருப்தி.

''ஒண்ணு நான் வீடு வாங்கியிருக்கிற விஷயம் உங்களுக்கு மட்டுந்தான் தெரியாதுன்னும் ..

ரெண்டு நான் வீடு வாங்கினதில எல்லாருக்குமே ரொம்ப பொறாமை சார்.

நீங்க மட்டும் பொறாமைப்பட மாட்டீங்க .. ரொம்ப சந்தோஷப் படுவீங்க'ன்னும் இந்த ரெண்டு காரணத்தாலே தான் உங்கள்ட்டே சொல்ல ஆசைப் பட்டேன் சார்'' .. அவங்க மொகம் ரொம்ப ப்ரகாச மாயிருந்தது.

மடமடன்னு அவங்க கொட்டினதில கொஞ்சம் திணறிட்டார். கூறுபாடோட என்ன பேசறதுன்னு தெரியலே. ,ஒண்ணு என்னோட வேலை பாக்ற டீச்சர் வீடு வாங்கிருக்காங்கறதிலேயும், என்னை இவ்வளவு உயர்வா மதிச்சதிலேயும் .. இந்த ரொண்டுக்காக எனக்கு ரொம்ப சந்தோஷம்... பெருமை...'ன்னு இப்படி ஏதேதோ சொல்ல மனசில தோணியது. ஆனா முளிச்சார்.

''ரொம்ப நன்றி சார்'' ரெண்டு கைகளையும் கூப்பி விடை பெற்று நடந்துக்கிட்டிருந்தாங்க டீச்சர்.

இவர் ஒக்காந்தேயிருந்தார்.

★

# அற்ப ஜீவிகள்

தினம் தோறும்
சம்பந்த மில்லாத சிலர்
கொல்லப் படுகின்றனர்.

கொல்லப் படுகிறவர்களுக்கு
காரணங்கள் எதற்கு?

அவர்கள் சம்பந்தமில்லாதவர்கள்
சம்பந்த மில்லாதவர்களை
யார் வேண்டுமானாலும் கொல்லலாம்.

ஆட்சியாளர்கள்
அச்சத்தை விதைக்க விரும்புகின்றனர்.

நிதானமாக
சம்பந்த மில்லாத சிலரின்
கழுத்தை திருகுகின்றனர்.

போராளிகளுக்கு
தம்மிடமும்
வெடிக்கும் துப்பாக்கி
இருப்பதை காட்ட வேண்டியிருக்கிறது.
சம்பந்த மில்லா சிலர்
வீழ்த்தப் படுகின்றனர்.

(சில நேரம் அணிகளுக்கு
நம்பிக்கையூட்ட
வேண்டியிருக்கிறது)

ஓர் இனத்தையோ குழுவையோ
ஒரு நாட்டையோ ஆளையோ
சிறுமைக்குள்ளாக்க வேண்டுமெனில்
சின்னங்கள் தேவைப்படுகின்றன.

கொடிகளை கிழிக்கலாம்
பொம்மைகளை எரிக்கலாம்
நினைவுச் சின்னங்களை தகர்க்கலாம்.

அதற்கு மேலும் வேவைப்படுகிறது.

பிரகிமையாக்கப்பட்ட
ஒரு சம்பந்த மில்லாத மனிதனை கொல்வது
ஒரு சம்பந்த மில்லாத மனுஷியை சிதைப்பது
ஒரு சம்பந்த மில்லாத குழந்தையை நிராதரவாக்குவது
தேவைப் படுகிறது.

அடுப்பின் புகை நடுவே
சிறிது நெருப்பை தேடும் மனிதர்கள்
அறிய மாட்டார்கள்
எந்த நேரம்
எவற்றின் சின்னமாய்
கருதப் படுவோ மென்று.

அரசியல் யுத்த தந்திரங்கள்
மாறிக் கொண்டே இருக்கின்றன.

நீண்ட கால
நலன்களின் அடிப்படையில்
சில சேதங்கள் தவிர்க்க முடியாதன.

(தவிர்க்கக் கூடியவையும்
தவிர்க்க முடியாதவையும்
சேதப் படுகிறவர்களல்ல
சேதப் படுத்துகிறவர்கள் நிர்ணயிப்பவை)

சம்பந்த மில்லாத மனிதனை நோக்கி
எல்லாத் தரப்பிலிருந்தும்
கூச்சல் வலுக்கிறது.

"தியாகம் செய்"
"அழியாப் புகழ் பெறு"

"எங்களது பலி பீடத்தில்
உன் தலையை
பெருமிதத்துடன் வை"

தனித்த சாலையில்
நசுங்கிக் கிடக்கும்
காரிலிருந்து ஒழுகும் இரத்தமாய்
ஒரு பயங்கரப் பீதி பிசுபிசுக்கிறது.

சம்பந்தமில்லாத மனிதன்
மேஜைக்கடியில் ஒளிந்து கொள்கிறேன்
மரப் பொந்துகளில்
நுழைய முற்படுகிறேன்.

கொடூரமாய் கீறிச்சிட்டு
சுற்றிலும் தேடுகிறது
சாவின் சுழல் நாற்காலி.

நான் எவற்றின் குறியீடு?
எந்தத் துப்பாக்கியின் மருந்து?

யாருடைய திட்டத்தின்
தூண்டில் புழு?

அழிக்கப்படும் போது
அழிப்பவனுக்கு
நான் இவற்றில்
ஏதோ ஒன்று மட்டும்

மனிதனாய் இருப்பதோ
கனவுகளோடு
சிந்தனைகளோடு
பாலுறுப்புகளோடு

நான்
எவரிடமும்
எதையும் கேட்பதில்லை
எந்த முதுகின் பின்னும்
ஒண்டுவதில்லை.

கஷ்டப்படுகிறேன்
வேலை செய்கிறேன்
வீடு திரும்புகிறேன்.

எதற்கு என்று தெரியாவிட்டாலும்
வாழ விரும்புகிறேன்.

துக்கம் வந்தால்
அழுகிறேன்.

ஹிம்சைகள் அழுத்தும் போது
பெண்டு பிள்ளைகளைத்தான்
அடிக்கிறேன்.

அவர்களின் நிழலில்
சுருண்டு படுத்து தூங்குகிறேன்.

இருந்தும்
கோடாரி
தலைக்கு மேல் உயர்கிறது.

நீடூழி வாழட்டும்
பெரிய இலட்சியங்களுக்காக
பெரிய எண்ணங்களை தாங்கும்
பெரிய மனிதர்கள்.

அதற்காக
சிறிய இலட்சியங்களுக்காக
சிறிய வாழ்வில் உழலும்
சிறிய மனிதனை
ஏன் துடைத்தெறிய வேண்டும்?

வரலாறு போராட்டங்களின்
ஊடாகத்தான் வளர்கிறது.
யாரும் நடு நிலை
வசிக்க முடியா தென்பதை
தத்துவார்த்த ரீதியில் நிரூபிக்க முடியும்.

எனினும்
யாரையும் இடிக்காமல்
தெருவில்
நடந்து போகிறவனை

ஓர் ஓரத்தில் உட்கார்ந்து
சிறு நீர் கழிப்பவனை
ஒழித்துக் கட்டுவதில்
நியாயம் ஏதுமுண்டா?

**மனுஷ்யபுத்திரன்**



# காத்திருக்க ... காத்திருக்க

காத்திருக்காதீர்கள்
நீங்கள் ஏன்
காத்திருக்க வேண்டும்?
எதற்காக?
வேண்டாம்—

காத்திருக்க காத்திருக்க
நீங்கள் இன்னமும்
யார் காலிலேயோ
நிற்க விரும்புகிறீர்கள்
என்பதே உண்மை.

காதலுக்காக காத்திருக்கலாம்
சரியே!

கார்ப்பரேசன் தண்ணீருக்காகக்
காத்திருக்கலாம்
இந்தியக் குடிமகனுக்கு
இதுவே கடமை!

விடியும் வரை
காத்திருக்கலாம்
விடிந்த பின்?

விதைக்கும் வரை
காத்திருக்கலாம்
விதைத்த பின்?

காலம்
என்றும் நம்மோடு
போராட்டத்தையே துவக்க
விரும்புகிறது.

அது
என்றைக்கும் நம் மோடு
ஒத்துப் போவதில்லை
என்றும் நம்
எதிரிதான்.

காற்றடிக்கும் போது
தூற்றிக் கொள்ளலாம்
காற்றே சூன்யமான போது?

காத்திருக்க காத்திருக்க
சோம்பல் தான்
காத்திருக்கலாம்
அதிலும் ஒரு சுகம்
இருக்கத்தான் செய்கிறது.
ஆனால்
கடமைகளைக்
காக்க வைக்காதீர்கள்
காக்க வைத்தால்
காத்திருப்பதே கடமையாகி விடும்.

காத்திருக்கா தீர்கள்......

**மு. பழனியப்பன்**

# ஒரு மகனுக்குப் பெயரிடுதல்

மூலம்: கிரில் கோவல்ட்ஸி

ஒரு பெயரைத் தேர்ந்தெடுப்பது
சிரமம் தான்
அச்சிரமம் எனக்கு நேர்ந்த போது
விடிவைப் பற்றி யோசிக்கும் கட்டத்தை
ஒரு குகைவாசி அடைந்தது போல,
நிரந்தரமான சூரியச் சுடருக்கு
முதன் முறையாகப் பெயரிடத் தயாராவது போல,
உணர்ந்தேன்.

இந்த உலகில்
எத்தனை பெயர்கள் இருக்கின்றன......
ஒரேயடியாக
நமக்கு மரியாதை கொடுக்கப்பட்டு விடுவதைப்போல,

ஒட்டு மொத்தமாக
வாழ்க்கை தரப்பட்டு விடுவதைப் போல,
நிரந்தரமாக
தாய்நாடு கிடைத்து விட்டதைப் போல,
அழியாத இதயம் உதயமாகிவிட்டதைப் போல,

என் மகனே—
நீ எப்போதும் அழைக்கப்படுவதற்கு
உனக்குக் கொடுக்கப்படுவதான - உன்
ஒரே பெயர்
என்னவாக இருக்கும்?

தேடப்படுகிற அந்தப் பெயர்
சன்னமான மெல்லிய ஓசையாக
ஆரம்பமாகிறது
ஒரு பெயர் பெயராகிவருவதற்கு
சற்று காலம் பிடிக்கிறது

முதலில்
அது - ஒரு
வெற்றிடமாக
ஜனசஞ்சாரமற்ற, ஒரு தரிசு நிலத்தின்
மத்தியில்
ஒரு மர வீட்டுக்காக
நாள் முழுவதும் நான்
ஒரு மரத்தடியைத் தள்ளிக்கொண்டு போவதாக
இருக்கிறது.

உனது பெயர்
வருங்கால மனிதர்களின் வீடுகள்
குழந்தைகள், தோட்டங்கள்,
மற்றும் காலங்கள் போல
எதிர்கால நகரம் போல
அர்த்தம் நிறைந்திருக்க வேண்டும்
உன் பெயரில்தான்
என் எதிர்காலம் தெரிகிறது.

உன் பெயர்
முளை விட்டுத் தளிர்க்கும்
ஒரு தானியத்தைப்போல இருக்கிறது

உன் பெயர்
குஞ்சு வெளிப்படுத்தும்
ஒரு முட்டையைப் போல இருக்கிறது
உன் பெயர்
மரபாக வளரக் கூடிய
கன்றாக இருக்கிறது
உன் பெயர்
நண்பர்களின் ஆனந்தத்திற்கு
காரணமாக இருக்கிறது.

ஆனால், உனது விரோதிகளுக்கோ—
அது, அவர்களை மௌனிக்கச் செய்யும்
கடுமையான, காத்திரமான,
தெளிவான, ஞானமுடைய
இதுகாறும்
நான் கேட்டிராத வார்த்தையாகும்.

நான் தீர்மானிக்கிற பெயர்தான்
எனது நம்பிக்கை, பொக்கிஷம்,
பெருமை எல்லாம்......

ஒரு பெயரை—
கண்டுபிடிக்க முடியாது
அது உருவாக்கப்படுகிறது
மழைக்குப் பின் வானவில்லாக
அது வெளிப்படும்.

ஒரு முறை தோன்றி விட்டால்
ஒரு போதும் மறக்க முடியாததாக
அரிதாக தூய்மையாக
பொன்னைப்போல் விலைமதிப்பற்றதாக
அவனால்
மீண்டும் மீண்டும்
மெதுவாக ரகசிப்பதாகும்.

ஆமாம்—
இதுவரை
அவன் பிறந்து விட்டானா, இல்லையா?

தமிழில்: பொன்மணி



★

## ஒரு இந்தியக் கவலை

ஓ……
எனதருமை
இந்தியப் பெருமக்களே!

நமக்கு
சுதந்திர வைடூரியம்……
நாற்பத்து நான்கு
ஆண்டுகளுக்கு முன்னே
கிடைத்தது நம்கைகளில்!

ஆனால், இன்று
அதை நாம்
எப்படியோ
தொலைத்து விட்டோம்!

அச்சாணி உடைந்த
அழகு ரதமாய்
இன்றைய
இந்தியத் தேர்!

அச்சாணி மாற்றி
சேரிடம் சேர்க்க
ஆளின்றி நிற்கிறது!

நாட்டைப் பற்றிய
கவலை
நமக்கு எப்போதாவது
உண்டா?

உழுபவனுக்கோ
மழை பெறும் கவலை!
உழைப்பவனுக்கோ
ஊதியக் கவலை!
பணக்காரனுக்கோ
பணம் சேர்க்கும் கவலை!
பாராளுவோருக்கோ
தேர்தலில் கவலை!
படிப்பவனுக்கோ
வேலையில் கவலை!
ஒவ்வொரு இந்தியனுக்கும்
ஒவ்வொரு கவலை!

ஒருவருக்கேனும் உயர்ந்த
நாட்டின் மீது……
கவலைப்படுவதற்கு
நேரமும் இல்லை!
நிம்மதியும் இல்லை!

இன்னொரு முறை
எல்லோரும்
அடிமை விலங்கை
எடுத்து அணியனுமே?
அப்பொழுது தானா
இந்தியனுக்கு
இங்கு……
சூடு பிறக்கும்!
சொரணை வரும்!
இப்படிச் சிந்தித்திட
என்மனம் குமைகிறது!

இருக்கின்ற கவலைகள்
இருந்து தொலைக்கட்டும்!
ஏ!

இந்தியத் திருமகனே!
நாட்டைப் பற்றிய
நல்ல கவலை
நம்மை பிடித்தாட்டட்டும்!

நம்பிக்கையோடு
நாளும் உழைத்திடுவோம்!
நாடு வாழ்ந்தால்……
நாமும் வாழ்வோம்.!

பழ. வள்ளியின்செல்வன்

★

## தேடல்… தேடல்….

நான் யார்?
எனது பெயர் என்ன?

என் பெயரைக் காட்டிலும்
என் இனத்தின் பெயர்தான்
இனித்த ஞாபகமாய்
எனக்குள் இருக்கிறது.
என்
இனப் பெயர் சொல்லட்டுமா?
மனிதன்!

இவனுக்கு பல
உன்னதங்கள் உண்டு!
இவனுக்குத்தான்
தெரிவதில்லை!

எந்த நேரத்தில்
எந்த விதத்தில்
எனக்குத் தெரிந்தது
என்றுதான் தெரியாது.

தெரிந்து கொள்ள
தேடிய போதுதான்
தெரியாது என்று
தெரிய வந்தது!

எனினும்,
தேடல் என்பதே
வாழ்க்கையானது!

இராணிமுத்து

★

## மூச்சுத்திணறலில் மூலிகைச் செடிகள்

இரும்புத் திரையில்
இருட்டுச் சிறைக்குள்
மூழ்கிக் கிடந்த
மூலிகைச் செடிகள்
சுதந்திரக் காற்றை
சுவாசிக்க நினைத்து
சிலிண்டர் ஆக்ஸிஜனை
கொஞ்சம்
சேர்த்தே இழுத்ததால்
மூச்சுத்திணறலில்
மோதித் தவிக்கின்றன!

ஆக்ஸிஜன் கொடுத்தவரே
அப்புறப் படுத்தப்பட்ட
அதிசயம்! ஆம்
இருபதாம் நூற்றாண்டின்
இயேசுவாக கோர்ப்பசேவ்!

காட்டிக் கொடுப்பதற்காகவே
கைகோர்ந்து வந்த
எல்ட்சின் யூதாஸ்
தள்ளி இருந்தே
தனது பகையை
தகர்த்து எறிந்து விட்ட
அமெரிக்காவின்
அழுத்தமான ஆணிவேர்!

"கட்டுப்பாடு என்பது
கட்டவிழ்ந்து போனால்
திருத்தம் என்பதே
திசைமாறிப் போகும்!

மனிதனை அழிக்க
ஆயுதம் வேண்டாம்
அவனே போதும்"
என்னும் உண்மைக்கு
சிதறும் ரஷ்யா
சிறந்த உதாரணம்!

அங்கு
தகர்ந்து கொண்டிருப்பது
உணர்வுச் சங்கிலிகளே!
உன்னதத் தத்துவம் அல்ல!
காலம் ஒருநாள்
இதைக்
கட்டாயம் உணரும்!

குழிப்பிறை: வி.கே. கஸ்தூரிநாதன்



## பிரியமுள்ள சீதா....

*சீதா... வந்திங்கு பாராய் —இந்தச்*
*சீரழிவை ஏனென்று கேளாய்!*
ஆதாயம் தேடுகின்ற அரசியல் வாதியினால்
அவதிப்படுவதற்கா அவதரித்தேன் பூமியிலே!

மண்ணும், மனையும் விட்டு
மாமக்கள் திருநாடும் விட்டு
அன்னை சொல் ஒன்றே
அருள் வாக்கு என்றெண்ணி
உன்னையும் உடன் அழைத்து
ஊர் விட்டுச் சென்றேனே!

தேசத்து மக்கள் மனம்
தெளிவாய் இருக்கையிலே —இந்த
வேஷமிட்ட கும்பலை நான்
வீடு கட்டச் சொன்னேனா?

தாற்பதடி மண்ணில் மட்டும்
ராமனைக் காணும் கண்கள்
பார்வைகள் பழுதாய்ப் போன
பாவிகள் வேலியன்றோ!

கல்லில் சிலைவடித்து
கற்பூரம் காட்டினாலும்
சொல்லாலும், செயலாலும் —என்பெயரில்
சூதாட்டம் ஆடியபின்

கலையழகு கோபுரங்கள்
கண் அகல எழுந்தாலும்
கொலைக்களம் எனக்கு —இனி
கொலுவிடம் ஆகிடுமா?

*சீதா....*
காட்டில் இருந்த போது —மனம்
கலக்கம் அடையவில்லை
நாட்டில் என் பெயரால் —நாசம்
நடக்க மனம் பொறுக்கவில்லை!

அறத்தால் வாழும் உள்ளம்
அழகான எந்தன் கோவில்
நிறத்தால் வேறென்று
நினைப்பதென் மனமில்லை
இடத்தினால் பிரச்சனைகள்
இங்கேயும் வந்ததினால்
பரதன் மட்டுமென்ன
பாபரும் எனக்கு பங்காளியே!

ஆர். பாண்டி



# திருவாளர்களும் திருமதிகளும்

வாழ்க்கைச் சகடத்தின்
அச்சுகள் இரண்டும்
எங்கே போகின்றன?
எதைத் தேடி அலைகின்றன?

திருவாளர்கள் ஆகவும்
திருமதி ஆகவும்
துடிப்பு .. வேதனை
தாபம் .. தவிப்பு...

உச்சி வெயில்
தகிக்க வில்லை
உணர் குளிர்
நடுக்க வில்லை

காற்று, மழை
கனத்த புயல்
எதுவும் பாதிக்காத உள்ளத்தை
கண்களிலும் காதுகளிலும்
கைகளிலும் தாங்கிக் கொண்டு,

மொழி பெயர்ப்பாளர்
கவியாவது போல
கண் வழிப்புகுந்தோர்
கருத்தில் அமர்வது—

அன்பினாலா
அவசியத்தாலா...
காதில் பட்டதும்
கருத்தில் பட்டதும்
நெஞ்சில் இருத்திய
உருவம்போல் இல்லை ..

மெல்லுவதற்கு
வெறும் வாய் உண்டு
வெல்வதற்கு
ஓர் உலகம் உண்டென

பழிச்சொல்பள்ளத்தை
விழி சொல்
கோபத்தால் தாண்டி
நடப்பர் தனித்து.
வாழ்க்கைச் சகடத்தின்
அச்சுகள் இரண்டும்
எங்கே போகின்றன—
உடற் கலப்புக்காகவா
உளம் கலந்தேகவா

கள வொழுக்கம்
கண்ட தமிழர்
கனவுகள்
ஒழுங்காகக் காண்பர்

கவலைத் தினவுகள்
நீங்க
எந்த மருந்தும்
விஞ்ஞானம் தரவில்லை.
கவலைகள்
வளர் விஞ்ஞானமாச்சு.

வருமானப்படி
இருப்பினும்
இல்லாவிடினும்
பொதுவான உறவில்
வாழ்க்கைச் சகடம்
சங்கடமாவது ஏனெனில்—

சாதல் புரிவது
கட்டாயமாயினும்
கருணை புரிவது
கட்டாய மில்லை!

சாதலில்
வேதனை உண்டா
இல்லையா — தெரியாது...
ஸ்டவ் வெடிப்பில் உண்டு
பிறந்தகம்
அனுப்பும்போது உண்டு...

காதல் மணமாயினும்
கட்டாய மணமாயினும்
கண்ணீர் விடுவது
எந்த வேதனையில் அடங்கும்?
கலாச்சார வேதனையிலா...

மகிழ்ச்சி வெள்ளத்திற்கு
ஆயிரம் அணைகள்
துயருக்கு
அங்கொன்றும்
இங்கொன்றும்தான்

கடல் நீரை விட
கண்ணீர்தான் உப்பானது
மேலும் உப்பெதற்கு?

வாழ்க்கை
விஞ்ஞான மயமாகிறதாம்...
விஞ்ஞானம்
வாழ்க்கைமயம் எப்போது?

ஆசையோடு அர்ப்பணமானது
மோசடிகளால்
வீணடிக்கப்படுவது
வாழ்க்கை வியாபாரிகளால்.

அந்தச் சமூக சேவகர்களுக்கு
ஏது தண்டனை?
காலம்
அவர் தலையில்
தங்கக் கரண்டியால்
தட்டுகிறது
அப்படியானால்
காலத்துக்குத்தானே
தண்டனை தர வேண்டும்.

அதனால்தான்
கருப்பைகளை
மூடச் சொல்கிறார்கள்

வாழ்க்கையைச்
செதுக்கிச் செதுக்கி
இலக்கிய வரிசையாக்கினார்
வள்ளுவர்
ஆளப்போவதும்
வாழப்போவதும்
மனிதனென்பதால்—

தாழப்போவது
மனிதனா...
இல்லை மடமையா...
என்பது தானே
இப்போதைய கேள்வி.

உடலுழைப்பில்
தசைகள் களைத்துப்போகும்
உலக அனுபவத்தில்
ஆசைகள் களைத்துப்போகும்
உண்மை வாழ்க்கையில்
அன்புக்குக் களைப்பு இல்லை ..

இதயச் சுனையில்
உறவுகள் பிறந்து
உணர்வுகள் வளர்ந்து
இமயத்திலும் பாய்கிறது,
ஆசை நதி...
அன்பும் பண்பும்
கரைகளாய் கொண்டு
மானுடக் கடலில்
கலக்கும் நதியை
வானமும்
பூமியும்
வணங்கும்.
நீவிர் மட்டும்
விதிவிலக்கா, என்ன?

**பொன்மணி**





# தாய்

மறைந்தாலும் எனக்குள்ளே
தாய் வாழ்கிறாள்! - நான்
மறந்தாலும் அவள்தானே
என்னை யாள்கிறாள்!

மொட்டுக்குள் வாசம் புகுத்திய
கெட்டிக்காரி —என்
தொட்டிலை ஆட்டிய
மெட்டுக்காரி

பல்முளைத்திட நெல்முனையில்
கீறிவிட்டவள் —நெஞ்சில்
பாய்விரித்துக் கதைகள் எல்லாம்
சொல்லிக் கொடுத்தவள்.

கூட்டைவிட்டுப் பறந்தபோதும்
கூடப் பறந்தவள் — இன்னொரு
கூட்டுத் துணையைத் தேடிய போதும்
கொஞ்சிச் சிரிப்பவள்!

மலை குனிந்து தரையைத் தொடும்
பணிவு மிக்கவள்!
வம்பு வந்தால் வானம் போலே
ஓங்கி நிற்பவள்!

பொய்யே எத்தனை முறை சொன்னாலும்
பிள்ளையை நம்பிடுவாள் —அந்தப்
பிள்ளையின் நலமே வேண்டி எந்தக்
கல்லையும் கும்பிடுவாள்.

**பரிணாமன்**







## சிறைகள்

சில்லு விளையாட்டு
வெற்றி தோல்விகளில்
ஒருவர் மீதொருவர்
குதிரை ஏறினோம்!

குளத்தங்கரை குளியலில்
ஒருவருக் கொருவர்
முதுகு தேய்த்தோம்
பசியறிந்து தின்பண்டம் தருவாய்.
அதில் பாதியுனக்குத் தருவேன்

நீ பழக நானும்
நான் பழக நீயும் உதவி
சைக்கிள் கற்றோம்.

அந்த ஒருநாளில்
பலிகிடா போல்,
தலை சிலிர்க்கச் சிலிர்க்க
மஞ்சள் நீருற்றி
சுற்றமும் சூழ்ந்தவரும் குலவையிட

சுதந்திரமிழந்து
ஓலைச் சிறையில் அக்கா நீ
தனிமைச் சிறையில் தம்பிநான்.

**ஜனநேசன்**



## முத்தம் தொடரட்டும்

அயர்வற மனத்தில் அன்பினில்
பூத்த உயர்தனி நெறிகள்
பயனுறத் தொடர உண்மையே
பொருளாய் உலகதன் முதலாய்
உதிரம் குடிக்கும் வெடிப்புகள்
தகர்த்து ஒருமை துளிர்க்க
பொதியாம் மதச்சுமை புதைத்து
சகிப்பும் சமமும் நாட்டி
வித்தகம் பொழியத் தொடரும்
பொங்கு தமிழ்க் கொடையே
புத்தம் புதுப்பொலி வுடனே
விண்ணவர் வியக்கும் நீதியாய்
நித்தம் நினைவினில் தொடரும்
அறியும் ஆற்றல் வளர்த்துச்
சித்திரச் சீர்பருவச் செவ்விதழாய்
முத்த மிடநடை தொடரட்டும்.

**ஓவியர் என். சொக்கலிங்கம்**



## தொலைந்து போன....

சுமையாகும்
சிறகுகளை ஒதுக்கிவிட்டு
விடுதலையாகும் ஒரு நாளில்
அதைச் செய்யலாம் என்றெண்ணி
பொதி சுமக்கும் கழுதை போல்
சுமந்து ,
மணல்களிலே தடுமாறி நடந்து
மந்தை வெளியில் பாரத்தை ஒருநாள் இறக்கிவைத்து
நன்றி சொன்ன தங்கைகளை வாழ்த்திவிட்டு
திரும்பிப் பார்த்தேன்....
செங்கலெல்லாம்
எலும்புகளாய் தெரிய என்விடு
சிரச்சேதம் ஆனது போல் நிற்கும்.
சிமின்டிற்கு பயந்திருந்த நான்
சிசுருஷை செய்து விட்டு புறப்படுகையில்
ஒத்திக்கிருந்த ஒன்னரை ஏக்கரும்
ஓவென்று அழும்;
கிணற்றில் விழுந்த குழந்தையைப் போல்.
கயிற்றைக்கட்டி வயிற்றைக்கட்டி
வியர்வை சிந்தி மீட்டுவந்து
என் வாசலிலே போட்டுவிட்டு
முச்சிறைக்கத் திரும்பிப் பார்த்தேன்.
முன் போல எதுவும் இல்லை
இனிதுரத்த எவரும் இல்லை
இனிசெய்யலாம் கல்யாணம் எள்றெண்ணி
கலைந்த கனவுகளை வார
கண்ணாடிக்குப் போனேன்
தலைவெளுப்பாய் இருந்த
தலை விதியை என்ன சொல்ல?

**இரா. பொன்னாண்டான்**







## வன்முறை இல்லா வாழ்வு

ஏடுகளைத் தினம்புரட்டில் ஏழெட் டின்மேல்
ஏராளக் கொலைச் செயல்கள் தாரா ளம்தான்!
'நாடுதனைத் துண்டாக்கி நல்கு' என்று
நாளுக்கு நாள்முழக்கம் பெருக்கி, மண்டை
ஓடுகளைக் குவிக்கின்ற கூட்டம் எல்லாம்
ஒன்றாகக் கூடியின்று ஆட்டம் போடும்!
பாடுபடும் நாமொன்று சேர்ந்தால் அந்தப்
பாவிகளைப் படுகுழியில் குவிக்க லாமே!
விளக்கில்வீழ் வண்டுக்கும் வருத்தப் பட்ட
வித்தகராம் இராமலிங்கர் விளைந்தே மண்ணில்
விளக்குகளும் அடுப்புகளும் வெடித்து விட்ட
விபரீதக் கொடுமைநிதம் பெருகக் கண்டோம்
பிளக்கின்ற மண்டைக்குள் சோறு பொங்கிப்
பேய்களுக்குப் படையலிடும் வெறியர் பாதை
வளர்க்கின்ற கூட்டத்தை எண்ணிப் பார்த்தால்
வார்த்தையில்லைகொடுமைசொல்ல;வயிற்றெ ரிச்சல்;
வண்டுகளும் கொட்டுவதால் குளவி ஆகும்
வன்முறையும் இப்படித்தான் பெருகிப் போகும்!
பெண்டுகளும் கொலை செய்யத் துணிந்து விட்டார்
பிறகென்ன சமத்துவத்தை கண்டு விட்டார்
துண்டுகளில் இனம்பிரித்துக் கொண்டு விட்டார்
துண்டாடத் தேசத்தைத் துணிந்து விட்டால்
குண்டுகளும் கொலைவாளும் இந்த தேசக்
குறிக்கோளின் சின்னங்கள் ஆகக் கூடும்

**அமுத-இளவழகன்**

★

## கேட்டதும், கிடைத்ததும்

கேட்டது:
உயர உயர உயர நானும்
பறக்க வேண்டும் —புகழ்
உச்சி யிலே என்றும் நின்று
சிறக்க வேண்டும்,
தயவு செய்து அதற்கு வழி
உடனே சொல்லுங்கள் —துளி
தயக்க மின்றி அதிலே சென்று
வெற்றி கொள்ளுவேன்.

கிடைத்தது:
தன் நலத்தை முற்று மாகத்
துறக்க வேண்டும் —வரும்
தலை முறைக்கும் பயன்கள் வர
உழைக்க வேண்டும்.
தடை களையும் படிக ளாக்கித்
துணிய வேண்டும் —அப்போ
தலைக் கனமே தோன்றி டாமல்
தவிர்க்க வேண்டும்.

**ரா. பொன்ராசன்**

## கலீல் கிப்ரானின் சில கவிதைகள்

### மணலும் நுரையும்

மணலுக்குள் நுரைக்கும் இடையில்,
இந்தக் கரையோரம் எப்போதும்
நான் நடந்து போகிறேன்.
எனது பாதச்சுவடுகளை உயரமான அலைகள்
அழித்துப் போகின்றன,
நுரைகளைக் காற்று அடித்துப் போகிறது.
ஆனால் கடலும், கரையும் எப்போதும்
போல் இருக்கின்றன.

### கூழாங்கல்

கூழாங்கல்லாகிய என்னை இந்த
அற்புத ஏரியில் இறைவன் எறிந்தபோது
எண்ணற்ற வட்டங்களால் அதன்
மேற்பரப்பை நான் சலனப்படுத்தினேன்.
ஆனால் இதன் ஆழத்தை அடைந்த போது
சலனமற்று ஒடுங்கிப் போனேன்.

### தவளைகள்

காளைகளைக் காட்டிலும் தவளைகள் பலமாகக் கத்துகிறன்றன. ஆனால் தவளைகளால் வயலில் ஏரை இழுக்க முடியாது. திராட்சை பிழியும் யந்திரத்தின் சக்கரத்தை சுழல வைக்கத்தெரியாது. அவற்றின் தோல்களால் செருப்புகள் தைக்க இயலா.

### கடலும் கரையும்

விழித்திருக்கும் போது அவர்கள் என்னிடம் சொன்னார்கள்; நீயும், நீ வாழும் உலகமும் எல்லையற்ற கடலின் எல்லையற்ற கரையில் கிடக்கும் சிறுமணல்'' எனது கனவில் அவர்களிடம் நான் சொனேன்; ''நான் தான் எல்லையற்ற கடல் எல்லாஉலகங்களும் எனது கரையில் உள்ள சிறு மணல்களே''

### காலஇடைவெளியில் ........

ஏழு நூற்றாண்டுகளுக்கு முன், ஏழு வெள்ளைப் புறாக்கள், ஒரு ஆழமான பள்ளத்தாக்கிலிருந்து பனி படர்ந்த மலைச்சிகரம் நோக்கல் பறந்தன. அவற்றைப் பார்த்த ஏழு மனிதர்களில் ஒருவன் சொன்னான். ''அந்த ஏழாவது புறாவின் இறக்கையில் ஒரு கறுப்புப்புள்ளி இருப்பதைக் கண்டேன்'' இன்று அந்தப் பள்ளத்தாக்கில் உள்ள மக்கள், பனி படர்ந்த மலைநோக்கி ஏழுகறுப்புப் புறாக்கள் பறந்ததாகச் சொல்லுகிறார்கள்.

### இரை

ஆண்டவரே, முயலை எனக்கு இரையாக்குவதற்கு முன், சிங்கத்திற்கு என்னை இரையாக்கி விடுங்கள்.

**தமிழில்: என்.ஆர். தாசன்**

# தலைவா...! என் தலைவா...!

மூலம்: வால்ட்விட்மன்

ஓ தலைவா! என் தலைவா!
நம்முடைய பயங்கரமான சிறு பயணம் முடிவடைந்தது
ஒவ்வொரு துன்பமும் கப்பலை நோக்கி நேராக
வந்தடைந்தன
நாம் தேடிய வெகுமதிதான் வெற்றி!

துறைமுகத்திற்கு அருகே மணிகளின் ஒலியை
நான் கேட்டேன்.
மகிழ்ச்சி மிகுந்த மக்களின் கண்கள்
பயங்கரமான துணிவுடன் வரும் இந்தக்
கப்பலின் பின்னே!

ஆனால், ஓ . இதயம்! இதயம்! இதயம்!!!
ஓ .. அந்த இரத்தக் கசிவுகள் துளிகளாய்!
அந்த மேல்தளத்தில் எங்கோ! என் தலைவன்
படுத்துக்கிடக்கிறான்,
குளிர்ந்து வீழ்ந்த பிணமாய்...!

ஓ தலைவா...! என் தலைவா !
மேலே ஏறு! மேலும் மணிகளின் ஓசையைக்கேள்!
மேலே ஏறு! உன்னுடைய கொடியைப் பறக்க விடு!
அங்கே இசைக்கு நீ வரவேற்பு செய்!

உன்னுடைய பூங்கொத்துக்களை நாடாவால்
கட்டி அழகுபடுத்து;
உன்னுடைய கரைகளில் ஓர் கூட்டமிருக்கிறது.
நீ அவர்களைக் கூப்பிடு,
அதிகாரமிருக்கிறது!
(எண்ணற்ற)
ஆர்வமுள்ள அவர்களுடைய முகங்கள் திரும்பும்!

இவ்விடத்தில் தலைவா! பிரியமான தந்தையே!
இந்தக் கை உன்னுடைய தலைக் கடியில்!
இந்த மேல்தளத்தில், சில கனவுகளுடன்
உன்னுடைய பிணம் குளிர்ந்து வீழ்ந்தது!

என்னுடயை தலைவன் பதில் சொல்ல வில்லை—
வெளுத்த அவன் இதழ்கள் அசைவற்ற நிலையில்!
என்னுடைய தந்தை என்கையை உணரவில்லை;
அவனிடம் நாடித்துடிப்பில்லை; விரும்பவுமில்லை!

பத்திரமாக நங்கூரமிடப்பட்ட கப்பலின் பயணம்
மிக்க களைப்புடன் முடிந்தது.
பயங்கரமான அதன் சிறு பயணம்
வெற்றி கண்டு திரும்பி வந்தது!
அதிசந்தோஷப்படு, ஓ கரைகளே! மற்றும்
ஒலிக்கும் ஓ மணிகளே!
ஆனால் நான் கவலையுடன்
அடி எடுத்து நடக்கிறேன்
அந்த மேல்தளத்தில் உலாவிய என் தலைவன்
படுத்துக்கிடக்கிறான்,
குளிர்ந்து வீழ்ந்த பிணமாய்!

தமிழில்: அழ. சுமதி

[அமெரிக்க நீக்ரோ அடிமைமக்களின் விடுதலைக்காகப் போராடிய ஆபிரஹாம்லிங்கன் மீதான இரங்கற்பா]

# தெரு - இரண்டு கவிதைகள்

## ஒன்று

கூரை நிழல்கள் கவிந்து நீளும்
நேர்கொண்ட பாதை ..

சாணமும் கரியும் ஏற்றிய கருப்பினில்
மாநிறக் கோலம் ஜொலிக்கும்
திண்ணைகள்

மூலையில் பெரிய காரை வீடிரண்டு
கம்பீரமாய் ..

இடைவெளிவிட்டு எவரும் நடாமல்
தானே முளைத்த குளிர்மர வேம்புகள்
மழையில் முளைத்த புற்களைக் கொண்டு
பச்சைக் கரை போட்ட
புடவையாய்ப் பாதை...
எச்சில் துப்பவும் மனது வராது.

நுண்ணிய மணலில் கால்வைத்து நடக்க
செருப்பைத் துறக்கவும்
சிந்தனை துணியும்

இந்தத் தெருவில் ஊர்வலம் வராத
எந்த மணமும்
ஓடிப்போய் நிச்சயித்த
ஒன்றாகவே இருக்கும்...

பாதை தூங்க நள்ளிரவாகும்
விடியுமுன்னரே விழித்துக்கொள்ளும்

மூதன் முதலாக
வீட்டுவாசலை விட்டு வெளிவந்து
தவழ்ந்த பொழுதில்
வாய்நிறைய இந்த மண்ணை
அள்ளித்தின்றதாய் அம்மா சொன்னது
இன்னமும் இனிக்கிறது.

தேங்காய் துருவி எறிந்த கொட்டாங்கச்சி
பாத்திரமாக இத்தெருமணல் அரிசியாய்
கற்பனைச்சோறு வடித்து உண்ட
பழைய விளையாட்டு மனதினில் கனியும்

இந்தத் தெருவில்தான்
சந்தோசக் கனவாய் —என்
வாழ்வினில் நுழைந்து
வாரிசிரண்டைத் தந்தவள் போனாள்
தனியாய்ப் பிணமாய் ..

தெருவை நினைக்க
நேரமில்லை மகனுக்கு
உறவையும் மறந்து
போனவள் ஒருமகள்...
பாட்டியின் வீட்டில் இருந்து படிக்கிற
பேரன் பேத்திக்குச் சுத்தமாய்த் தெரியாது!

வயதாகிப்போனது எனக்கா?
தெருவுக்கா?
நெரிசலில் மிதப்பது தெருவா?
நானா?

ஒரு சந்தாய்க் குறுகி
இது பொது வழியல்ல
பலகையைத் தாங்கிப்
பாதையை மறிக்கும்

'சௌந்தர பாண்டியன் பில்டிங்ஸ்'
ஒருவரின் விலைக்குத் தெருவே
உரிமையாய் ..

கடைசியாகப் பார்த்து விட்டுக்
காரேறினேன்...
''வயசாகிப்போன காலத்தில்
தனியாய் இன்னுமிங்கே
இருக்க வேண்டாம்—'' என்ற மகனுடன்.

நாடுகடத்தப்பட்ட
கைதியாக நான்....

கண்களில் கரைந்தது
எனது தெரு

★

## இரண்டு

குருடனல்ல ..
கோலூன்றி நடக்கும்
முடவனுமல்ல...
முடியவில்லை தெரு கடக்க...!

முள்ளிருந்தால் கூட
முயலலாம்...
மிகப்பெரிதாய்க்
கல்பரப்பிக் கிடந்தாலும்
கடக்கலாம்; கண்ணாடித்
துண்டுகள் கிடந்தாலும்
துணிந்து போய் விடலாம்..!

சாக்கடை நீரோடி வந்து
சங்கமித்த போதெல்லாம்
பூமிதித்தல் போல் மிதித்துப்
போனதுண்டு —இப்போது
ஆகாமல் அப்படியே
அஞ்சிநான் தவிக்கின்றேன்.

தெருவைக் கடந்து நான்
வீடுபோயாக வேண்டும்...

பாட்டன்மார் வியர்வை சிந்தப்
பராமரித்ததெரு —தாத்தா
ஆங்காங்கே செப்பனிட்டு
அகலப்படுத்தியது ..

அப்பாவரை புழுதி
இறங்கி மண்ணெடுத்து
சக்கரையாய் வாயிலிட்டுச்
சாப்பிட்ட பழைய தெரு...

அம்மா தெருவிறங்க
அனுமதிக்க வில்லையப்போ...
சும்மா போனாலும்
ஷுபோட்டுத்தான் நடப்பேன்

அந்த நாள் தொடங்கி
இன்று வரை நடந்தாலும்
அன்னியமாய் எனக்கேன்
ஆனது இன்று தெரு...?

கையில் குடையிருக்க
காலிரண்டில் செருப்பிருக்க
பாதை நினைவிருக்க
பகல்பொழுது; ஒளியிருக்க
தைரியத்தை முன்னெடுத்துத்
தானியக்க மறுக்குதுளம்...!

தீயின் நாவுகள்
தீண்டாமல் என் கூடரை—
தீமை கதவொடித்து
மேயாமல் என் குடும்பம்—
காப்பாற்றச் சொல்லக்
கடவுள்களும் இல்லையென்று
அஞ்சி நாவொடுங்கி
அசையாமல் நிற்கின்றேன்...

தெருவைக் கடந்தெப்படியும்
வீடுபோயாக வேண்டும்...

வீட்டில் மனதிருக்க
வீதியிலே உடலிருக்க
இரண்டிற்கும் இடையில் உயிர்
ஊசலாடித் தவித்திருக்க
அச்சம் முன்பின்னாய்
அலைக்கழிக்க
நிச்சயமற்று நகரும் என்
நிமிடங்கள் ..

அக்கினி தின்று
துப்பிய பொருள்கள்
கழுகுகளும் அருவருத்து
விலகுகிற முண்டங்கள்

காலடியில் பிசுபிசுத்துக்
கடக்கின்ற செவ்விரததம்,
தோளின்மீது விழும்
நிழல்கொண்ட கட்டிடங்கள்
'வன்முறை வாழ்க'வென
கோஷமிட்டு நொறுங்கி விழக்
காத்திருக்கும் கனமவுனம்

காலில் இடறியது
கல்லென்றறியுமுன்பே
வெடியென்றலறி
நொறுங்கும் மனது...
எப்படியிருந்தாலும்
தெருவைக் கடந்து நான்
வீடுபோயாக வேண்டும்...!

**திருங்கை சேதுபதி**

★



# குரோட்டன்ஸ்களோடு...

என்வீட்டுக் குரோட்டன்ஸ்களுக்குத்
தண்ணீர் ஊற்றுகிறேன்...

என் தாகத்திற்கு
இன்னொருவன் தண்ணீர் ஊற்றுவதைக்
கையால் ஏந்திப் பருகுவதைப் போல்
அவை பருகுகின்றன...

அவற்றின் ஒவ்வொரு துளிர்ப்பிலும்
என் ஆன்மா துளிர்க்கிறது .. குதூகலிக்கிறது
அவற்றின் ஒவ்வொரு வாடலிலும்
என் ஆன்மா சிதைகிறது... அவஸ்தைப்படுகிறது
முற்றிய ஒவ்வொரு இலை உதிர்விலும்
என்னுள் புதிய நம்பிக்கைகள் பிறக்கின்றன...
ஒவ்வொரு இலை அசைவுகளின் போதும்
நான் அவற்றோடு
மௌனமாகப் பேசுகிறேன்...!

தொட்டிகளில் தண்ணீர் காய்கின்றபோது
வறட்சியாகிப் போனதைப் போல
என் கண்கள்...!

பச்சைய ஊறலின்போது என்னுள்
ரத்த ஊறல் பிரவகிப்பதைப் போல்
அதனால்...

தோட்டத்துச் செடிகளுக்கு நனைந்த டவுசரோடு
தண்ணீர் ஊற்றும் சிறுவனின் ஆர்வத்தோடு
அவற்றிற்குத் தண்ணீர் ஊற்றுகிறேன்...
குறிப்பிட்ட நாட்களுக்குப் பின்
சாரமிழந்த பழைய மண் நீக்கிப்
புதுமண் போடுகிறேன்... புது எருவிடுகிறேன்
எல்லாம் என்கைகளாலேயே...
என் வீட்டுக் காம்பவுண்ட் வளாகத்தை
அழகுபடுத்தும் அவற்றிற்காக
என் ஆன்மா ஒவ்வொரு கணமும்
அக்கறைப் படுகிறது...!

அவற்றில் பூக்கும்
ஒவ்வொரு பூவின் இதழ் ஸ்பரிஸத்திலும்
முத்தமிட்ட என் காதலி முகத்தின்
மென்மையை அனுபவிக்கிறேன்..!

முதல்பூவை என் காதலிக்குப்
பரிசளிக்கும் வேட்கையில்
அவற்றின் வளர்ச்சியை
என் மனது அதிவேகமாய் உந்துகிறது...!
அதனால் உறிஞ்ச உறிஞ்சத்
தண்ணீர் ஊற்றுகிறேன்...!
ஒவ்வொரு குரோட்டன்ஸும்
ஒவ்வொரு அழகாய்...
என்வீட்டுக்கு வருவோரிடமெல்லாம்
கவித்துவத்தோடு
அவற்றின் அழகை வருணித்துப்பாடுகிறேன்.
ஒவ்வொன்றிற்கும்
ஒவ்வொரு பெயர் சொல்லிப்பாடுகிறேன்...!

ஞா. சிங்கமுத்து





# 'தொடரும்' ..... சிந்தனைகள்

**செங்கதிர்த்தேவன்**

இலக்கியம் கலைகள் - இவை மானுட ஆன்மாவின் உணர்ச்சிப் பிம்பங்கள்; மானுட அன்பின் உயிர்த்துடிப்புகள்; சிறுமை நீக்கி, மேன்மை நாடும் மானுடத் தவத்தின் சாரம்; மானுடத்தின் ஒளி;

எல்லையற்ற பிரபஞ்ச வெளியில், காலம் - இடம் இரண்டின் ஊடே பயணிக்கும் மனிதன், தன் வாழ்க்கையின் நிலைகுறித்து, பொருள்குறித்து, நாளைய திசைகுறித்துத் தொடர்கின்ற தேடலின் சிந்தனைக் குமிழ்கள் - குமிழிகள் அல்ல - குமிழ்கள்; சிந்தனை ஒளியைத் திரட்டிப் பாதுகாத்து வைத்திருக்கும் குமிழ்கள் சமூகவாழ்வினராகிய மனிதர்கள் எல்லோருக்கும் அழகியல் உணர்வுகளும் கலை இலக்கியப் பசியும் ருசியும் பொதுவானவை என்றாலும், இவற்றைப் படைக்கும் மனிதர், எக்காலத்தும், எவ்விடத்தும், சின்னஞ்சிறு குழுவினரே.

இதய நிலத்தில் அன்பே நீராகவும் அழகியலே ஒளியாகவும் சிந்தனையே உரமாகவும் கொண்டு புஷ்பிக்கின்ற இலக்கியம் என்னும் பண்பாட்டுச்செடி செழித்து வளர இன்னொரு தேவை - காற்று இலக்கியச் சூழல் என்னும் காற்று.

வரலாறு தொடங்கும் காலம் தொட்டு, இலக்கியக் குழுக்களே - சிறுபான்மைக் குழுக்களே இலக்கியச்சூழலாக அமைந்து, பரந்துபட்ட மக்களுக்காக இலக்கியத்தைப் படைத்திருக்கிறார்கள் எழுத்தறிவு பெற்றிராத எத்தனை எத்தனை லட்சம் தமிழருக்காக சங்கப் புலவர்களும் இளங்கோவும் கம்பனும் தமிழில் எழுதினார்கள்! எழுதியது ஓலையில் தான் என்றாலும், எழுதியது காலத்தை வெல்வன இல்லையா? பாரதி அச்சில் வெளியிட்டது சிலநூறு பிரதிகள் என்றாலும் எத்தனை ஆயிரம் மக்களைச் சென்று அடைந்து கொண்டேயிருந்தன!

தமிழ் இலக்கியத்தின் இந்தப் பாரம்பரியச் சாதனைகள் யாவும், வெகுஜனப் பத்திரிக்கை மற்றும் கலைத்துறைச் சாதனங்கள் விஞ்ஞானத் தொழில் நுட்பத்துணை கொண்டு தமிழ் கூறும் நல்லுலகம் மட்டுமின்றிப் பூ உலகம் முழுவதும் பரவிச்செல்கின்ற இந்தக் காலத்து வளர்ச்சிக்கு முன்பே - முன்பே - படைக்கப்பட்டவை இல்லையா?

விஞ்ஞானத் தொழில் நுட்பம் எவ்வளவுதான் முன்னேறிப் புத்தம்புது வாய்ப்புகளைக் கொணர்ந்தாலும் கூட இலக்கியத்தில் சாதனைகள் புரிவதற்கு ஊக்க சக்திகளாக இருப்பது அறிவுத்தேடலும் அழகியற்தாகமும் கொண்டு, எப்போதும் கற்பனைச் சுடரின் சிந்தனை அலைபாய்ந்த வண்ணம் சமூகதரிசனத்தை இலக்கிய தரிசனமாக்குவதில் ஒய்வின்றிக் கூடிச் செயற்படும் இலக்கியக் குழுவினரும், அவர்களின் சிற்றிதழ்களும் அமைத்துத்தரும் இலக்கியச் சூழல்தான்.

இந்தக்குழுவினரின் சிற்றிதழ்களின் நம்கால வரலாறு பாரதியிலிருந்து 'விவேகபானு'விலிருந்து தொடங்குகிறது 'மணிக்கொடியாக', 'சரஸ்வதியாக' - பின்னர் தோன்றி நிலைபெற்றுவிட்ட மறைந்துபோய்விட்ட எத்தனையோ இதழ்களின், குழுக்களின், வாயிலாக, இந்தவரலாறு 'தொடரும்',

பாரதியும் பாரதிதாசனும், புதுமைப்பித்தனும் ஜெயகாந்தனும் ஜீவாவும், ரகுநாதனும், லாசராவும் ஜானகிராமனும், இ.பா.வும், நா பா வும், சுந்தர ராமசாமியும், சுஜாதாவும் கண்ணதாசனும் காமராசனும், அருணாசலமும், சிற்பியும், க நா சுவும் செல்லப்பாவும் இவர் யாவருமே சிற்றிதழ்கள் தந்த நிலத்தில் முளைத்து விழுதுவிட்டு வளர்ந்து பரந்த விருட்சங்கள், இல்லையா?

விருட்சங்களின் புதிய தலைமுறைகள் புதிய வாரிசுகள் வரலாற்றில் 'தொடரும்' இந்தத் தொடர்ச்சிக்கு இலக்கிய இதழ்கள் களம் அமைக்கும்.

இலக்கிய இதழ் என்றாலே போதுமே- 'சிற்றிதழ்' என்பதை விட்டுவிடுவோம்; இலக்கியத்தில் சிற்றிதழ் இலக்கியம், பேரிதழ் இலக்கியம் என்ற பிரிவினை வேண்டாம்; அச்சு இலக்கியம்-கை எழுத்து இலக்கியம் என்ற பேதம் வேண்டாம் [இவற்றையெல்லாம் யாரேனும் பி எச்.டி. பண்ணு-வதற்கு ஒதுக்கி விடுவோம்!]

எழுதுவது, இலக்கியம், வெளிவந்தால் என்ன? வராவிட்டால் என்ன? எதில்வந்தால் என்ன? எத்தனை பேர் படித்தால் என்ன? எழுதுவதே இலக்கியம் மனிதனை உயர் இடத்துக்கு உயர்த்துவதே இலக்கியம் எழுத்தும் தெய்வம்; என் எழுதுகோலும் தெய்வம் என்பது, மகாகவி பாரதியின் சத்திய வாக்கு! எழுத்தைத் தெய்வமாய்ப் போற்றும் பாரம்பர்யம் 'தொடருமில், தொடர்கிறது

ஓர் எழுத்தாளர், சிறுகதை ஆசிரியர் எதனுல் அறியப்படுகிறார்? எந்தப் பத்திரிகையில் எழுதுகிருர் என்பதனுலா? அந்தப் பத்திரிகை எத்தனை லட்சம் பிரதிகள் விற்கின்றன என்பதனாலா?

நான்கு லட்சம் பிரதிகள் விற்கும், பதினைந்து லட்சம் பேர் வாசிக்கும் ஒரு பத்திரிகையில் ஒரு இரண்டு வரி அறிமுகம் கிடைப்பதால் எழுத்தாளருக்கோ, இலக்கியத்துக்கோ நன்மை என்ன? இலக்கிய உணர்வின், ரசனையின் பெருவெள்ளப் பெருக்கா?

உண்மையில் ஒரு எழுத்து ஒளி பெறுவது, அதன் தனித்தன்மையால்; அதில் சுடர்விடும் சத்தியக் கனலின் எரியழகினுல்; அதில் பேதம் எதுவும் இன்றிப் பெருகும் அன்பின் பிரவாகத்தினுல்; இதனால் அன்றே இதை எழுதியவர் யார்என்று பெருவியப்பும், எழுதியவர் மீதான பாராட்டும் வாசகரிடம் எழுகின்றன! இதனையன்றி, எழுத்தாளரை வேறெதன் மூலம் அறிவது?

''இன்னுர் எழுதியது என்பதால் அந்த எழுத்துக்குப் பெருமை சேர்வதில்லை; இதை எழுதியவர் இவர் என்று காட்டி, அந்த எழுத்து தான் எழுதியவருக்குப் பெருமை சேர்க்கிறது'' என்பது எழுத்தையே முதன்மைப் படுத்தும் ஜெயகாந்தனின் இலக்கிய விமரிசனப் பார்வை.

எதில் வந்தால் என்ன? எல்லா எழுந்து ஓடைகளும், வளர்ச்சியில், நதியாகி மகாநதியாகி இலக்கிய சாகரங்களாகப் பெருகி, இறுதியில் காலசமுத்திரத்தில் எல்லையற்றுக் கலக்கும்! இல்லையா மேலாண்மை பொன்னுச்சாமி?

இலக்கிய வேள்வியின் தார்மீக பலமும், தன்மான எளிமையும் கொண்ட, நல்ல இலக்கியப் படைப்பாளர்களுக்கு 'லட்சம் பிரதிப்பத்திரிக்கைகள்' அவ்வப்போது இடம் ஒதுக்குவது அவர்களைக் கௌரவிக்கும் பொருட்டே என்று பெருந்தன்மையோடு புன்னகைத்துக் கொள்வோம். அதை விடுத்து அவ்விதப்பத்திரிக்கைகளில் ஒருவரி அறிமுகம்வேண்டி கோரிக்கைவைத்துப் 'போராடுவது, எழுத்தையும், எழுதுபவனையும் சிறுமைப்படுத்துவது அல்லவா? விளம்பரத்தேடல் என்றும், பெருமை என்றும், சுய அவமதிப்பு என்றும் பொருள்கொள்ளக்கூடும் அல்லவா?

மானுட சரித்திரம் குறித்த ஆழமான விஞ்ஞான நோக்கும், ஞானச் செருக்கும், மானுட எதிர்காலம் குறித்த அழகிய, விஞ்ஞானக் கனவுகளும் கொண்ட ஒரு முற்போக்காளர் பலலட்சம் பிரதிகளில் ஒருவரி அறிமுகத்தால் 'சிறுகதை இலக்கியத்துக்கு' நற்பயன் விளையும் என்று இது என்ன தர்க்க இயல் புதிர்! - மெய்யாகவே எதிர்பார்க்கலாமா மேலாண்மை?

நமது சமூகவாழ்க்கையே ராமாயணம்தான்;படைப்பிலக்கியவாதி ராமன்;அவன்தர்மத்தின் வீரத்தின் நேர்மையின், அன்பின், திருவுருவம்; இந்த எழுத்தாள ராமனின் சத்தியம் சொல்லும் எழுத்து வில்லும் எல்லாச் சுரண்டல் ராவணர்களையும், துணைபோகும் சதிகார மாரீசங்களையும் துளைக்கும்; தொலைக்கும்; சிறைபிடிக்கப்பட்ட ஒடுக்கப்பட்ட, நசுக்கப்பட்ட மானுடம் என்னும் சீதையை விடுவிக்கப் போராடும் எதிர்த்துப் போரிட்டுச் சிறகு அறுபட்டுத் தன்னையே ஆகுதியாய்த்தரும் ஜடாயுகளைக் கண்டு கொள்ளும்; அன்போடு திருமேனி தழுவி, நன்றிப் பெருக்கில், உணர்ச்சிப்பெருக்கில் கண்ணீர் பெருக்கும்! தன் இலட்சியத்தின் துணையாய்க் குகன்களில், சுக்ரீவர்களில் அனுமன்களில் தன் நேசசக்திகளை இனம்கண்டு அரவணைக்கும்! சுயநலச் சூது அறியாமல், மயக்கத்தால், சற்றே சபலத்தால் களங்கப்படுகிற அபலை அகல்யை களுக்குத் தன் எழுத்தின் சத்தியத் தீண்டலால் மறுவாழ்வு - விமோசன - வழிகாட்டும்

படைப்பிலக்கியவாதி ராமன் என்ருல், விமர்சகன் விபீஷணன்! மெய்யான விமர்சனம், தர்மத்தை எடுத்துக் கூறும்; அதர்மத்தைக் கைவிட்டு விடுமாறு வற்புறுத்தும்; ராமன் யாரென்று எடுத்துச் சொல்லும்; தர்மத்தின் பக்கம் அணிசேர்க்கும்!

மானிட சமூகத்தின் சகல தீங்குகளின் பிரதிநிதியான ராவணனை எதிர்க்கும் புனிதப் போரில் படைப்பிலக்கிய ராமனும், விமர்சக விபீஷணனும் ஒரணி! மேன்மையான சித்திரம் இது, இல்லையா மேலாண்மை? ஆனால், மேலாண்மை, எதனால் நீங்கள் படைப்பிலக்கியத்தை அகல்யையாக, விமர்சனத்தை ராமனாக சித்தரிக்கிறீர்கள்?

''விமர்சக ராமர்களின் பாததுளிபட்டு உயிர்பெற்று இயங்குவதற்காக சிலையாகக்காத்திருக்கிறார்கள் படைப்பிலக்கிய அகல்யைகள்; எத்தனை காலம் காத்திருக்க வேண்டும்? ராமர்கள்தான் கூற வேண்டும்'' என்று [தொடரும் ஜனவரி91 இதழ்] எவ்வாறு உங்களால் உருவகப்படுத்த முடிகிறது? உரையாசிரியர்களும் விமரிசகர்களுமா படைப்பிலக்கியத்துக்கு உயிர் தருகிறார்கள்? எழுதுவது வாசகர்களுக்காகவா, விமர்சகர்களுக்காகவா? யாருக்காக எழுதுகிறீர்கள்?

ஓர் எழுத்தாளன், விமர்சனக்காரரின் சலசலப்புக்கு அஞ்சாத ஆண்மையாளன் அல்லவா? ஜெயகாந்தனின் 'ஏ விமர்சனக்காற்றே' கவிதையை மீண்டும் படியுங்கள் படைப்பிலக்கியவாதி என்ற உங்களது கௌரவத்தை எப்போதும் நிலைநிறுத்துங்கள், மேலாண்மை!

'கவிதை துக்கத்தின் காதலி' என்பார் புதுமைப்பித்தன். ஆம்; துக்கம்தான்; மனிதர், மனிதராக வாழ முடியாத நிலைநினைந்து உருகும் துக்கம், 'காரணங்கள், இவை என்று அறியமாட்டார்; அஞ்சி அஞ்சி சாவார் என்று நிலைகெட்ட மாந்தரை எண்ணி எண்ணி நெஞ்சு பொறுக்குதில்லையே' என்று விம்மும் துக்கம்; மானுட அன்புகோயில் கொண்ட நெஞ்சில், துக்கத்தினின்று எழும் ஆவேசம், ஆவேசத்தினின்று எழும் போராட்ட உணர்வு;

கவிதை அன்பின் தாய், துக்கத்தின் காதலி, கோபாவேசத்தின் சகோதரி போராட்டத்தின்தோழி, அமைதியின் அழகுமகள்.

இத்தகைய மானுட அன்பின் மகோன்னதக் கவிதைக்கு மாவீரப் புதுமரபு படைத்தனர். பாரதி பாரதிதாசன், தாகூர், நஸ்ருல் இஸ்லாம் மாயகாவ்ஸ்கி பாப்லோ நெருடா போன்ற புதுயுகக் கவிஞர்கள்.

இவர்களின் நவகவிதை மரபு. அடிமை உணர்வை அழித்தொழிக்கும்; கொடுமைகண்டு கொதிக்கச் செய்யும்; சிறுமைகண்டு சீறச்செய்யும், வறுமையின் காரணம் இன்னவென்று அறிந்திடச் செய்யும் காதலின் உயிர்த்தன்மை உணர்ந்து போற்றிடச் செய்யும் எவ்வித விலங்குமற்ற புதிய உலகிற்கு போரற்ற போதிய உலகிற்கு, சுதந்திர சமத்துவ உலகிற்கு மண்ணில் தெரியும் வானத்துக்கு அழைத்துச் செல்லும் வானளாவிய பார்வையின் மேன்மை அறிந்திடுமாறு, மனித ஆன்மாவை விண்ணளாவிய உயரத்திற்கு அழைத்துப் போகும் ஞானரதம் இம்மரபு!

இம்மரபு மனிதத்தன்மை அழிந்துபடும் அபாயச்சூழலில் மனிதத்தன்மை சிதறுண்டு அழியாமல் பாதுகாக்கும் தாய்மரபு. இன்றைய அணு ஆயுத மிரட்டலாலும் அழிக்க முடியாத மனித நேயத்தின் வீரமிக்க வெளிப்பாடாய் இன்று இம்மரபு மேலும் வளர்ந்துள்ளது. கண்ணதாசனும், காமராசனும் அருணசலமும், சிற்பியும், புவியரசும் பரிணாமனும் என்று இன்று தொடரும் மரபு 'இது எனது புரட்சி என்று வரித்துக் கொண்ட மாயகாவ்ஸ்கியைப் போல 'இது எமது மரபு என்று எடுத்துக் கொண்டுள்ளது 'தொடரும்'.

நமது சமகாலத்தின் சிக்கல்களையும் சீரான மரபுக்கவிதையில் கவிதையின் ஜீவன் துள்ளிடத் துள்ளிடத் தருகின்றார் கிருங்கை சேதுபதி பாரதி பாரதிதாசன் இருவரின் உணர்ச்சிகர வெளிப்பாடுகளின் ஒன்றிணைத்த ஒரு சொந்தப் பாணி இவருடையது. கவிதையில் இவருக்கு எதிர்காலம் உண்டு என்று இவர் கவிதைகளே சான்று கூறும்.

''இதய இருள் நீக்கி மனித முகங்களை
அடையாளம் காட்டத்தான் மத விளக்குகள்
மண்ணில் தோன்றின ' (தொடரும் நவம்பர்90)
''வைத்து புள்ளி வளர்ந்தது கோடு
பூத்தது வாசலில் கோலமாய் ஒரு பூ',
[தொடரும் ஜனவரி 91]

இங்கே கொழுந்து விட்டெரிவது
தீபமல்ல தேசம்,
வெடித்துச் சிதறிக் கொண்டிருப்பது
பட்டாசுகளல்ல மனிதர்கள்
(தொடரும் அக்டோபர்-90)

'தொடருமில்' நல்ல கவிதைகளை சிங்கமுத்து, ஆர். பாண்டி, பயனி, ஜனநேசன் முதலிய பலரும் எழுதுகிறார்கள்.

பயனியின் கவிதை வளத்திற்கு ஒரு உரைகல் பின்வரும் வரிகள்:

''நீர்க்குவியலில்
கல்லின் பயணம்-
எத்தனை வட்டங்கள்!

மரஇலைக் குவியலில்
  சூரிய ஒளியின் ஊடுருவல்-
    எத்தனை ஒளிச்சிதறல்!

மனிதக் குவியலில்
  மனப் பிரயாணம்.
    எத்தனைச் சலனம்!''

[தொடரும் ஜுன் 91]

நஸ்ருல் இஸ்லாமை, என் ஆர். தாசனும், மாயகாவ்ஸ்கியை சகாவும், லூட்மிலா தாத்யானி சேவாவைப் பொன்மணியும் தமிழில் தந்திருக்கிறார்கள்

நாதியற்ற தேசம் நீந்தத் தெரியாமல்
  மூழ்கிக் கொண்டிருக்கிறது;
தாயை விடுவிக்க நீ எடுத்துக்கொண்ட
  சபதத்திற்கு இது சோதனை நேரம்,
மூழ்குவது இந்துவா? முஸ்லிமா?
  என்று கேட்பது யார்? — நஸ்ருல் இஸ்லாம் [தொடரும் ஜீலை-90]

'' பாடல்களே எமது ஆயுதங்கள்,
  பாடல்களே எமது ஆற்றல்களின் ஆற்றலுமாம்,
தங்கக் குரலில் நாங்கள் இசைக்கும்
  பாடல்களைக் கேளுங்கள்! ' — மாயகாவ்ஸ்கி [தொடரும் ஆகஸ்டு-90]

''பூமிக்கோளத்தின் தலைவிதியை
  தனது கைகளில்
மனிதனே வைத்திருக்கிறன்'' — லுட்மிலா தாத்யானி சேவா [பிப்ரவரி-91]

மூலக்கவிஞர்களின் மூப்பறியாக் கவிதைகளை ஆன்ம ஒளியோடு அற்புதத் தமிழில் தொடரும் தொடர்ந்து தருகிறது. கவிதைகளுக்கு உரிய இடம் தரும் 'தொடரும்' அதன் பெயர் சொல்லும் கவிஞர்களையும் தரும் என்று நம்பலாம்.

புதுமைப்பித்தன், ஜெயகாந்தன், கு ப ரா. ஜானகிராமன், சுந்தரராமசாமி லா.ச. ராமாமிர்தம், பிறகு தமிழ் சிறுகதைக்கு என்ன ஆயிற்று?

மனித இதயத்தின் மின்னல்களை - மின்மினிப்பூச்சியின் மின்னல் அழகினை வியந்து தன்னை மறந்திடும் புறநிலைத்தன்மையோடு சிறுகதை வடிக்கும் சுஜாதா.........

எல்லையற்ற, வரம்பற்ற, வண்ணமயமான வானப்பெருவெளியின் எட்டா உயரத்தில் இருந்து ஒரு தேவதைப்பறவை, எல்லைகளும் பேதங்களும் மிகுந்து போன தரைமனிதர்களின் தனித்தனித் துன்பங்களையும் துயரங்களையும் மேகச்சலனத்தின் மூடப்படும் நிலவைப்போல இம்மனிதர்களின் ஒளிமங்கிய புறவாழ்க்கைத் தோற்றங்களையும் ஒளி இழக்காத அகத்தோற்றங்களையும் கேட்போரை மயக்கும் லயத்தில் இசைப்பதைப் போலச் சிறுகதை எழுதும் பிரபஞ்சன் ........

இரக்கமற்ற முட்களும் வசீகரிக்கும் பச்சை இலைகளும் கிறங்க வைக்கும் வண்ணப்பூக்களும், நிறைந்து கம்பீரமாய்ப் படந்து நிற்கும் அழகிய போகன்வில்லாக்களைப் போன்ற கதைகளைத் தரும் தி.சா ராஜு.

தமிழ் சிறுகதைச் சாதனையாளர்கள் அனைவரின் கலைவண்ணத்தின் சிந்தனை - எண்ணத்தின் ஜீவரகஸ்யம் முழுவதையும்-தனது முடிக்குள்ளே மகாகங்கையை மறைத்து வைத்துக் கொண்டிருக்கும் சிவனைப்போல-தனதாக ஆக்கிக் கதை பேசும் சந்திரகாந்தன்..........

நகரத்தின் எல்லைகளுக்கு வெளியே நெடிது வளைந்து செல்லும் சாலைகளின் இருமருங்கிலும் கூரையாய் வளைந்து நிற்கும் புளிய மரங்கள், வாகை மரங்கள் இவற்றுக்கப்பால், கோடையின் வெம்மையில் அபூர்வமான மழைக்காலத்தின் குளிர்த்தளிரில், எளிமையின், அழகின், சத்தியத்தின் சந்தோஷத்தின் உயிர்ப் பிம்பங்களாய் ஈர்க்கும் சூர்யகாந்திப் பூக்கள், நித்யகல்யாணிப் பூக்கள், காட்டுக் கருவேல மரங்களின் ஆவரம் செடிகளின் கொன்றை நிறப்பூக்கள், கடலைச்செடிகளின் மஞ்சள் நிறப்பூக்கள் பருத்திச் செடிகளின் மஞ்சள் வெளிர்நிறப்பூக்கள், பால்கட்டி மணக்கும் கம்பங்கதிர்கள், சோளக்கதிர்கள், பச்சைக் கிளியின் செக்கச் சிவந்த அலகுகளுடைய பச்சைக்

கிளிக்கூட்டம் போன்ற மிளகாய்ச் செடிகள் மனம் பூராவும் மணக்கும் கொத்தமல்லிச் செடிகள்-இவற்றுக்கு நடுவே, தீக்குச்சி மருந்து வாசனை நிறைந்து - தீப்பெட்டிக் காகிதங்களும், பட்டாசு காகிதங்களும் வண்ணக்குவியல்களாய் நிறைந்து திடீரென்று கோடை இடிகளும் கோடி மின்னல்களும் சேர்ந்து இறங்கி விழுந்து சூரியப் பிரகாசமாய் குழந்தைகளும், பெண்களும் எரிந்து போகின்ற வெடிமருந்துக் கிடங்குகளுக்கும் நடுவே, கோடையின் வெம்மையில் வெந்து அபூர்வமான மழைக்காலக் குளிரை நுகர்ந்துவாழ்கின்ற மனிதர்களைப் பற்றிய...... ... மிகமிகமிக அபூர்வமாகிப்போன ஒரு சலசலக்கின்ற கரையோரம் ஒன்றிரு காட்டுப்பூக்கள் பூத்திருக்கிற, ஒன்றிரு பெயர் தெரியாத பறவைகள் கூடிக் கொஞ்சுகிற, மணல் தெரிய சூரியன் மின்னுகிற தண்ணீர் ஓடுகின்ற ஒரு ஓடையைப் போல் எளிமையே அழகாய் மிளிரும் கதைகளை எழுதுகிற சகுந்தலை ........

இன்னும், இன்னும் வேறு யார்? வையவனா, வண்ண தாசனா, வண்ண நிலவனா, கல்யாணராமனா, எஸ். சங்கரநாராயணனா? தமிழ்ச் சிறுகதை வளர்ந்து கொண்டு தான் இருக்கிறது; ஆனாலும், புதுமைப்பித்தனின், ஜெயகாந்தனின் குருவுக்கு மிஞ்சிய சிஷ்யர்கள் இன்னும் வந்து சேரவில்லை

சிறுகதைகள்-தொடருமின் சிறுகதைகள் மு பழனியப்பனின் சின்னச்சின்னக் கதைகள்: முயற்சிகள்; ஒரே ஒரு கதைமட்டும் கொய்யாப்பிஞ்சு மட்டும்-பழனியப்பன். சிறுகதை மின்னலை உங்களால் கைகளுக்குள் பிடிக்கமுடியும்! பக்க நிரப்புக் கதைகளை விட்டு விடுங்கள்; தவம் செய்யுங்கள்; மின்னலைப் பிடித்து விடுவீர்கள்!

வேண்டாம் சந்திரகாந்தன்! பிரமிக்க வைக்கும் கோவில் ரதங்களைச் செதுக்கிய தச்சரின் உளி ஒரு போதும் மண்வெட்டிக் கனைகளைச் செதுக்கலாகாது அடுத்த ரதத்திற்காகக் காத்திருங்கள் 'புல்லைப் புசியாத புலிகள்' கதைகளை எழுதியவர், புல்லைப் புசிப்பவராக இறங்கலாகாது. தொடருமில் உங்கள் கதைகள் உங்கள் கதைகளாக இல்லை.

தொடருமின் சிறுகதையாளர்களின் பிரச்சனை பொதுவாகத் தமிழ்ச் சிறுகதையின் பிரச்சனையே. எல்லோருக்கும் அளவற்ற கதைக் கருக்கள் கிடைக்கின்றன. எல்லோரும் எழுதுவதில் அதிக ஆர்வம் காட்டுகின்றனர், மிகப் பலரிடத்தில் போதிய சமூக, அரசியல், வரலாற்று, கலாச்சார ஞானமும், சமகால பிரக்ஞையும், தெளிவான இலட்சியங்களும்கூட உள்ளன. ஆனால் துணுக்குகளுக்கும், மினி கதைகளுக்கும் வித்யாசமில்லாமல், செய்திகளுக்கும் கதைகளுக்கும் வித்யாசமில்லாமல், எழுதுகிறார்கள்; கட்டுரைகளையே கதைபோல தரும் பாணி வளர்ந்து வரும் போது கதைகளில் மட்டும் எல்லாம் இருக்கின்றன கதையைத் தவிர; கதைக் கலையைத் தவிர.

இந்தக் கலையைக் கற்றுத் தராது கல்லூரிக் கல்வி அஞ்சல் வழிக்கல்வி இந்தக் கலையைக் கற்றுத்தரும்-குருகுலம் மட்டுமே. ஏகலைவனைப் போல், நீங்களே குருகுலம் அமைத்துக் கொள்ளுங்கள்

புதுமைப்பித்தன், ஜெயகாந்தன் கு ப ரா, லா ச ரா. சுஜாதா எனும் குருபரம்பரை மகா சமுத்திரத்தில் மூழ்கி, மூழ்கி மூச்சை அடக்கி அடக்கி ஆழத்தில் அடி ஆழத்தில் போய்த்தான். ஒளிவீசும் சிறுகதை முத்துக்களை எடுக்கக் கற்றுக் கொள்ள வேண்டும். செப்டம்பர் 91 ல் எட்டயபுரம் பாரதிவிழாவில் பங்கேற்ற ஜெயகாந்தன், அவரைச் சந்தித்த, அவர் மீது அன்பும் ஈடுபாடும் கொண்ட ஒரு எழுத்தாளரிடம் கேட்டார்;

''நீங்கள் புதுமைப்பித்தனைப் படித்திருக்கிறீர்கள் அல்லவா?'' நண்பர் சொன்னார், ''இல்லை நான் உங்களைத்தான் படித்திருக்கிறேன்'' ஜெயகாந்தன் அடுத்து என்ன கூறியிருப்பார் என்று நினைக்கிறீர்கள்?

''நீங்கள் புதுமைப் பித்தனை அவசியம் படிக்க வேண்டும்; பயில வேண்டும்'' இதற்குப் பின் புதுமைப்பித்தனைப் பற்றி நிறைய அவரிடம் பேசினார் ஜெயகாந்தன்.

கதையும், இசையும் ஒன்று தான், சாதகம், அசுரசாதகம் செய்தால்தான் எட்ட முடியும் கலையின் சிகரங்களை. சாதகம் செய்யும் முயற்சிகளுக்கும் அரங்கேற்றச் சாதனைகளுக்கும் உள்ள வித்யாசம் புரிந்து கொள்ள வேண்டும். 'தொடரும்' ஆலோசிக்கட்டும்' சாதனை தொடரும்.

'இலக்கிய தரிசனம்' என்ற தலைப்பில் என்.ஆர். தாசனின் 'ஏதுபதி ஏது பெயர்' கவிதைத் தொகுப்பு குறித்தும், தோப்பில் முகம்மது மீரானின் 'ஒரு கடலோரக் கிராமத்தின் கதை நாவல் குறித்தும் இரு கடிதங்கள் தொடரும் வெளியிட்டிருக்கிறது. இரண்டும் தனித்தன்மை வாய்ந்த கடிதங்கள். இத்தகைய கடிதங்கள் நிறைய வெளிவர வேண்டும். முழுமையான விமர்சனத்துக்கும் நூல் மதிப்பீட்டுக்கும் இடையிலான இந்த வடிவத்தில் புதிய, அலைவரிசை-ரசனை வெளியீடும் கைவரலாம்.

'இந்தக் காலம் வசனத்தின் காலம் வசனத்தில் கவிதையின் செல்வாக்கும், கவிதையில் வசனத்தின் செல்வாக்குமாக வசனம் உயர்வு பெற்றிருக்கும் காலம்' என்று ஒரு முறை நா. பார்த்தசாரதி குறிப்பிட்டார். 'கண்ணதாசன்' இலக்கிய இதழிலிருந்து சொற்கோலம் என்ற வடிவத்தில், மனித இனத்தின் அடி ஆழங்களில் வெளிச்சம் பாய்ச்சும் வசனச் சித்திரங்களை வரைந்து வரும் என்.ஆர் தாசன் தொடருமில் தொடர்ந்து எழுதுவது மகிழ்ச்சி தருகிறது.

'ஒரு கடலோர கிராமத்தின் கதை' என்ற நல்ல நாவல் ஒன்றைப்படைத்துப் பிரபலமாகப் பேசப்படும் முகம்மது மீரான் அண்மையில் ஜெயகாந்தனிடம் தம்மை அறிமுகம் செய்துகொண்டார். தனது கடலோரக் கிராமத்தின் கதையைப்படித்திருக்கிறீர்களா? என்று ஜெயகாந்தனிடம் கேட்டார். ஜெயகாந்தன் அதைப் படித்திருப்பதாகக் கூறினார். ஆனுல், ஜெயகாந்தனுடைய படைப்புகள் எதையும் தான் இன்னும் படிக்கவில்லை என்று மீரான் தெரிவித்தார். மீரானின் நேர்மை பாராட்டுக்குரியது; ஆனால் ஜெயகாந்தனின் படைப்புகளை படிக்காமலிருப்பதன் நஷ்டத்தை அவர் புரிந்துகொள்ளவில்லையே! வேண்டாம், மீரான்!

சிலர் படைப்பது நல்ல இலக்கியமாகச் சிலசமயம் ஆகிவிடுகிறது; அந்தச் சிலர் நல்ல இலக்கியம் படித்திருப் பதில்லை என்பதற்குத் தாங்கள் எடுத்துக்காட்டாக இனிமேலும் ஆகிவிடாதீர்கள்! படியுங்கள் ஜெயகாந்தனின் எல்லா எழுத்துக்களையும் உங்களுக்குத் தெரிந்த மலையாளத்தில் கூட, ஜெயகாந்தன் படைப்புக்கள் பல ஆண்டுகளாக வந்துள்ளன; தமிழில் முடியாவிட்டால் மலையாளத்தில் படியுங்கள்; அதற்கும் நேரமில்லாவிட்டால், எப்போதேனும் தகழி சிவசங்கரப்பிள்ளையைச் சந்தித்து ஜெயகாந்தனைப் பற்றி அவரிடமே கேளுங்கள்' அந்த மலையாள இலக்கியப் பிதாமகர் கூறுவார், ஜெயகாந்தன் யாரென்று. ஜெயகாந்தனையும் அவருக்கு முன்னவர்களையும் பின்னவர்களையும் படியுங்கள், அது உங்களுக்கு நன்மை தரும்; இலக்கியத் தவத்திற்கும் இலக்கிய வியாபாரத்திற்கும் உள்ள வித்யாசம் என்ன என்பதை நீங்களே புரிந்து கொள்வீர்கள். தற்காலத்தமிழ் இலக்கிய இமயத்தின் உயர்வை உணர்வீர்கள். நீங்கள் ஏறவேண்டிய உயரமும் தெரியும் மீரான்! பாராட்டுக்கள் குவியும்போது, பாராட்டுக்களுக்குத் தகுதியானவராக மேலும் வளர்வதுதான் தனிமனித நேர்மை; இலக்கிய உலக நேர்மையும் கூட.

இந்த இலக்கிய - தரிசனக் கடிதங்கள் இரண்டைத்தவிர இலக்கியக் காட்சிகளும், தொடருமில் கட்டுரைகளாக வந்துள்ளன. கம்பன் கவிதை பற்றி டாக்டர் பழ முத்தப்பன் (தொடரும் அக்டோபர் 90) நா. சொக்கலிங்கம் (தொடரும் டிசம்பர் 90) பாரதிதாசன் கவிதைபற்றி அமுத. இளவழகன் (ஏப்ரல் 91) நல்ல கட்டுரைகளாக தந்திருக்கிறார்கள் பழைய இலக்கியம் குறித்தவை என்றோ பேராசிரியர்கள் எழுதியவை என்றோ ஒதுக்கிவிடாது இத்தகைய கட்டுரைகள் தொடர்ந்து வரவேண்டும். இலக்கியத்தில் மனிதஉணர்வுகளை, அழகுகளை மதிப்புகளை இயற்கை காட்சிகளை அவற்றில் மனம் பறிகொடுத்து ரசித்து ரசித்து, எடுத்துரைக்கும் ரசனைப்பார்வை செழுமை அடைய இத்தகைய கட்டுரைகள் வழிவகுக்கும்

ரசிகமணி டி.கே.சி, பேராசிரியர் ஸ்ரீநிவாசராகவன் ஆகியோரின் அழகியல் ரசனைப் பார்வை குறித்துப் பேசும் போது ரசனைவாதம் என்பது ஓய்வு பெற்றுள்ள வர்க்கத்தின் ரசனைக்கு உதவும் வாதம் என்று ஒரு முற்போக்கு பிஎச்.டி. விமர்சகர் குறிப்பிடுகிறார்.

நகர்ப்புறப் பாட்டாளிகள் என்றாலும், கிராமப்புற உழைப்பாளிகள் என்றாலும் கலை இலக்கிய நுகர்வு என்பது ஓய்வுநேரத்தில் தான்; பண்டைய இனக்குழு சமுதாயத்தின் குழு நடனம்கூட, வேட்டை முடிந்தபின் விருந்தின் போதுதான். நமது பிற்காலக் கூத்துகளும்கூட இரவில் தான் ஆகவே ரசனை என்பது ஓய்வுபெற்றுள்ள வர்க்கத்திற்கு மட்டுமல்ல, எல்லா வர்க்கங்களுக்குமே வேலை நேரம்முடிந்த ஓய்வு நேரத்தில்தான் டி.கே.சியின் ரசனைவாதம், அடிப்படை மனிதப்பண்புகளுக்கு விரோதமானதல்ல. அழகியல் ரசனை. கலை நுகர்வு, கலை இலக்கியப் படைப்புக்கள் இவை எல்லா மனிதர்க்கும் பொதுவானது; பாட்டாளிவர்க்கத்தின் அரசியல் நலன்களுக்கு எதிரானதல்ல சங்க இலக்கியம் முதல் கொய்யாப்பிஞ்சு' பழனியப்பன் வரை எல்லாக்கலாச்சார பொக்கிஷங்களிலிருந்து மனிதப் பண்புகளை விளக்கி மனித அழகுகளை, இயற்கை அழகுகளை விரித்து உரைப்பது ரசனைவாதம் என்றால், அது முற்றிலும் முற்போக்கானதே. இதை அந்த முற்போக்கு டாக்டர் புரிந்து கொள்ளட்டுமே!

இலக்கிய விமர்சனத்துக்கு தொடரும் கவனம் செலுத்தலாம் படைப்பாளியும், படைப்பும் விமர்சகனை முதன் மையாகச் சார்ந்திருக்கவில்லைதான்; ஆனாலும் இலக்கிய விமர்சனம், நல்லஇலக்கியத்தை அடையாளம் காட்டும்; இலக்கியச் சூழலின் சித்தாந்தம் மற்றும் அழகியல் தரத்தை உயர்த்தும்; படைப்பாளியின் பார்வையை விசாலப்படுத்தும்; ஆழப்படுத்தும்.

தமிழில் குறுகியமொழி இனவாத விமர்சனப்போக்கு 70-களிலிருந்தே செல்வாக்கு இழந்துவிட்டது. முற்போக்கு இலக்கியவாதிகளும், தேசிய அரசியலும் இதற்கு காரணம்; கலை - கலைக்காகவே என்ற விமர்சன வாதம்கூட தமிழில், காலூன்றவில்லை; க நா.சு.வின் விமர்சனத்தின் கூர்முனை பிரச்சாரத்தை எதிர்ப்பதாக இருந்தது. ஜெயகாந்தனும் ஒன்றுதான்; நா. பார்த்தசாரதியும் ஒன்றுதான்;, டாக்டர் மு.வ.வும் ஒன்றுதான்; திருவள்ளுவரும் ஒன்றுதான். 'இவர்கள் யாரும் இலக்கியப்படைப்பாளிகள் அல்ல' - அவரது பார்வையில்!

இதன் எதிர்வினையாகவே முற்போக்கு விமர்சனம் வளர்ந்தது கலை மக்களுக்காக என்று உரத்துக் கூறியது. தமிழ் இலக்கியத்தின் பாரம்பர்யத்தையும், நிகழ்காலத்தையும், எதிர்காலத்தையும், அவதாரவாமனனைப் போன்று மூன்று காலமும் அளந்து அதன் விஸ்வரூபத்தை - உலகளாவிய மானிட அன்பை நிலைநாட்டிய பெருமை

ஜீவானந்தத்துக்குரியது. இலக்கிய விமர்சனத்துக்கும் - தத்துவ ஆய்வுக்கும், விமர்சனத்துக்கும் - வரலாற்று ஆய்வுக்கும், விமர்சனத்துக்கும் - அரசியல் ஆய்வுக்கும், விமர்சனத்துக்கும் - சமூக இயல் ஆய்வுக்கும் இடையிலான பரஸ்பரஎல்லைகளைச் சரியாக அவர்நிறுவினார். மானுடமாட்சியை மானுட அழகியலை மானுட நெறிகளை, நிலையான மதிப்புக்களை பாரம்பர்ய இலக்கியத்திலிருந்து உலக இலக்கியத்திலிருந்து தற்கால இலக்கியம் வரை ரசித்து ரசித்து வியந்து வியந்து எடுத்து எடுத்துக் கூறுவதே இலக்கியவிமர்சனத்தின் தனிச்சிறப்பு என்று தமது கட்டுரைகளின் வாயிலாகக் காட்டினார். சங்க இலக்கியமும், கம்பனும் பாரதியும் அவர் பார்வையில் புதிய பரிமாணம் பெற்று. பெற்று. புதிய பொருள் பெற்று தற்கால வாழ்வில் இரண்டறக் கலந்தார்கள்.

ஆனால் 70-களிலிருந்து முற்போக்கு விமர்சனம் அநேகமாக அரசியல் மேடை ஆகிவிட்டது வரலாற்றை தற்கால சமூக நடப்பை உற்பத்தி மற்றும் வர்க்க உறவுகளின் அடிப்படையில் விளக்குவதற்குவசதியான ஒருசாதனமாகவே இலக்கிய விமர்சனத்தை இடதுசாரியினர் குறுக்கிவிட்டார்கள்; படைப்பாளனின் அரசியல் அல்லது அரசியலற்ற நிலைகள், சித்தாந்தம், படைப்பின் பாத்திரங்களினது வர்க்க நிலைகள், வர்க்க நலன்கள் இவற்றைப் பற்றியே பேசுகிறார்கள். கட்சி உறுப்பினராகவுள்ள எழுத்தாளர்களுக்கு ஒரு அளவுகோலும், கட்சி நெருக்கமான-வர்களுக்கு ஒரு அளவு கோலும் அல்லாதவர்களுக்கு ஒரு அளவு கோலுமாக விமர்சனம் அரசியல் பட்டறை ஆகிவிட்டது.

ஜீவாவிலிருந்து விலகி விமர்சனம் வறட்டு விமர்சனமாக மாறியதில் கலாநிதி கைலாசபதிக்கும், தொ.மு.சி. ரகு-நாதனுக்கும் பெரும் பங்குண்டு. இதைச் சரிசெய்யும் 'பெரிஸ்திரோய்க்கா' பணியை மேற்கொண்ட ரகுநாதன் அதையும் முழுமையாகச் செய்யவில்லை செப்டம்பர் 90 நெல்லைக்கருத்தரங்கில் அவர் வாசித்த தலைமை உரை ஸ்டாலினிசம் பண்பாட்டுத் துறையில் விளைவித்த தீமைகள் குறித்து பூரணமான ஆய்வை மேற்கொள்ளவில்லை. 'கலை' இலக்கியத்துறையில் ஸ்டாலினிச நிலைகளின் பின்னே ஸ்டாலினிச அரசியல் நிலைகள் புரட்சி குறித்த திருகு மருகான, யாந்திரீகமான கொள்கைகள் இருந்தன என்பதை, அந்தத்தவறான நிலைகள்தான் காந்திஜியைப் புரிந்து கொள்ளவிடாமல் தடுத்தது போலவே பாரதியையும் புரிந்து கொள்ளவிடாமல் தடுத்தது என்பதை ரகுநாதன் தெளிவாக எடுத்துவைக்கவில்லை; ஜீவானந்தம் மட்டுமே தனது சொந்தச் சிந்தனை ஒளியால், இந்தச் சூத்திரத்திற்கு இரையாகாமல், பாரதியை தெளிவாகப் பார்த்தார் என்பதையும் ரகுநாதனால் ஒப்புக்கொள்ள முடியவில்லை; எந்த ஒரு கலாச்சார இயக்கத்தையும் புரிந்து கொள்வதற்கு, அதில் பின்னியிருக்கும் அரசியல் நிலைகளைப் புரிந்து கொள்ள வேண்டும் அல்லவா? இந்தியாவில் தமிழகத்தில் ஸ்டாலினிசம் அரசியல் ரீதியாக இழைத்த 'தவறுகளை அதனால் விளைந்த நஷ்டங்களை மூடிமறைத்துவிட்டு அல்லது கண்டுகொள்ளாமல்' விட்டுவிட்டு தமிழ் முற்போக்கு இலக்கியத்தில் பெரிஸ்திரோய்க்கா செய்வதினால் பயனில்லை என்பதற்கு அவரது நெல்லைக் கருத்தரங்குக் கட்டுரை நல்ல நிரூபணம். தேசிய விடுதலைப் போராட்டத்தின் பகுதியாக காந்தியம் தமிழ் இலக்கியத்தில் செலுத்திய செல்வாக்கின் முற்போக்கான பாத்திரத்தை இன்றளவும் இவர்கள் அங்கீகரிக்கவில்லை; ஏனென்றால் முற்போக்கான பாத்திரம் வகிக்கக்கூடிய ஒரே ஒரு 'இசம்' 'மார்க்சிசம்' தான் அதுவும் ஸ்டாலின் பாணி மார்க்சிசம்தான் என்பது இங்கே புரையோடிப் போயிருக்கிறது. ஏனைய தேசீய-வட்டார அளவிலான கருத்தமைப்புகளும் கூட, மத அடிப்படையிலான கொள்கைகளும் கூட, வரலாற்றில் மார்க்-சிசத்துடன் துணையாக நிற்கின்றன நிற்க முடியும் என்ற லெனின் கருத்தை இவர்கள் இன்னும் கூட உணரவில்லை ''போர்க்குணம் மிகுந்த மனிதாபிமானிகள்'' லட்சக்கணக்கான மனிதர்கள் ஸ்டாலினிசத்தின் இரும்புப்பிடியில் நசுக்கப்பட்டது குறித்துச் சிறிதும் சலனமின்றி எவ்வாறு இருக்க முடிந்தது? ரகுநாதனே இப்போது-குறிப்பிடுவது போல, நல்லவேளை புதுமைப்பித்தன் ஸ்டாலினிசக் கொடுமைகளை அப்போதே-அப்போதே அறிந்திருந்தார்; நல்லவேளை, தமிழ் இலக்கியம் புதுமைப்பித்தனை இழந்து விடவில்லை; பின்னாளில்; 1956-ல் சுந்தரராமசாமி ஜீவாவிடம் கேள்வி கேட்டார், சுந்தரராமசாமி என்றஎழுத்தாளர் தப்பித்தார்; பின்னாளில், ஜெயகாந்தன் 'அதிகார பூர்வ' கம்யூனிஸ்ட் நிலைகளிலிருந்து விடுபட்டார்; தமிழ் இலக்கியம் தனது பரந்த மரபை இவர்களின் மூலமாகப் புதிய ஒளியுடன் புதுப்பித்துக் கொண்டது. ஆனால் புதுமைப்பித்தனை 'நம்பிக்கை இழந்தவர்' (Pessimist) என்றும், ஜெயகாந்தனை 'ஆன்மீகவாதி' என்றும் மேல்தட்டு வர்க்கத்துக்குத் தாவியவர் என்றும் இவர்களுக்கு முந்திய பாரதியை 'முதலாளி வர்க்கக் கவிஞன்' என்றும் கொச்சையாக சித்திரிப்பதிலேயே அதிகாரப்பூர்வ முற்போக்கு விமர்சகர்கள் முழுக்கவனம் செலுத்தினார்கள். 75-ல், ஜெயகாந்தன் மிகச் சரியாகவே கேட்டார், ''பாரதியையே புரிந்து கொள்ளவில்லையே நீங்கள்! என்னையா சரியாகப் புரிந்து கொள்ளப் போகிறீர்கள்?''— இலக்கிய விமர்சனத்தில் நிகழ்ந்த திரிபின் காரணங்களை ரகுநாதன் முழுமையாகச் சொல்லியே ஆகவேண்டும், ஜி. நாகராஜன் என்ற ஓய்வறியாத முற்போக்கு படைப்பாளரின் மனச்சாட்சி மிக்க ஆன்மாவுக்கு அஞ்சலி செலுத்துவதற்காக;

செய்யுங்கள், தயவுசெய்து, ரகுநாதன்! [காலம் சென்ற] கலாநிதி கைலாசபதியும், வானமாமலையும் தான் விமர்சன இலக்கியப் பதாகையை தூக்கிப்பிடித்தவர்கள் என்றும், [தொடரும் ஜனவரி 91, பக்கம் 15] விமர்சன இலக்கியம் விதவையாகிக் கிடக்கிறது என்றும், இந்த விதவைக்கு மறுவாழ்வு வேண்டுமென்றும் [தொடரும் ஜனவரி 91, பக்கம் 17] பெரிதும் வெறுத்து, விரக்தியுற்றுப் பேசுகிற மேலாண்மை பொன்னுச்சாமியின் 'கோரிக்கை' யையும் சற்றுக்கவனியுங்கள், ரகுநாதன்!

சிலுவையைச் சுமப்பதைத் தவிர தங்களுக்கு வேறு மார்க்கமில்லை; ஏனெனில் மார்க்சிய விமர்சனத்தை ஜீவாவுக்கு முன்பே தொடங்கிய வரலாற்றுப் பாத்திரம் தங்களுடையது என்று தங்கள் நெல்லைக்கருத்தரங்கத் தலைமையுரை சொல்லுகிறதே!

ஒரு விமர்சகன் முதலாவதாக நல்ல ரசிகன்; இரண்டாவதாகத்தான் விமர்சகன் நல்ல ரசிகன்தான். நல்ல விமர்சகனாக முடியும் என்று மார்க்சிய விமர்சகர் ஆர்கே கண்ணன் குறிப்பிட்டார். [இதை இப்போதும் அவர் அங்கீகரிப்பார் என்றே கருதுகிறேன்]. இதுவே ஜீவாவின் விமர்சனத்தின் அடிப்படையாகும்.

வறட்டு விமர்சனங்கள் தொடரும்' இதழில் இடம்பெறவில்லை; இது மகிழ்ச்சிக்கு உரியது; விமர்சனம் செய்வதை விட, நல்ல இலக்கியம் படைப்பது இன்னும் ஆரோக்கியமானது. சில ஆண்டுகளுக்கு முன் ஆர்.கே. கண்ணன், இப்போது விமர்சகர்களின் சப்தம் அதிகமாகக் கேட்கிறது-படைப்பாளர்களைவிட-என்று சொன்னார்; தொடருமில் படைப்பாளர்களின் குரல், தொடர்ந்து உரத்து ஒலிக்கட்டும்!

'மகாகவியின் கல்விக் கொள்கை' குறித்த சகாவின் தொடர்கட்டுரை தொடரும் இதழின் சிந்தனைவளத்திற்கு உரம் தருகிறது. இந்தியக் கலாச்சாரத்தின்-சமூக, அறிவியல், விஞ்ஞானத் தேடலின் சாதனைகளின்-தேக்கங்களின் புதிய பாய்ச்சல்களின் பாதையினைப் பாரதியின் தரிசன-ஒளி வெள்ளத்தில் சகா கடந்தகாலத்துக்குள் நம்மைப் பிரமிக்கச் செய்து கொண்டே அழைத்துப்போகிறார்; பண்டைய மாண்பிலிருந்து இன்றைய சீரழிவுக்குத் தள்ளப்-பட்டதன் காரணங்களையும், சீரழிவிலிருந்து புத்துயிர் பெற்று பூத்துக்குலுங்குவதற்கும் இந்த ஒளி-வெள்ளப் பாதையின் வழியே நம்மை சகா மேலும் அழைத்துச் செல்வார் என்று எதிர்பார்க்க முடியும். பாரதி ஆய்வில் தொ.மு.சி. ரகுநாதன், பெ.சு. மணி ஆகியோரின் சரியான வாரிசாக வெற்றிபெறவல்ல சகாவின் இக்கட்டுரை! குறித்துக் கருத்து சொவல்தற்கு இத்தொடர் முடியும் வரை காத்திருத்தலே இலக்கிய நாகரிகம்; இல்லையா சாக

ஜெயகாந்தனின் 'வட்டாரக் கலாச்சாரத்தில் தேசியத்தன்மை' என்ற கட்டுரையை [தொடரும் ஏப்ரல் 91] இதழில் வெளியிட்டு 'தொடரும்' சிறப்புப் பெற்றது. டெல்லி சாகித்ய அகாடமி கருத்தரங்கில் கலந்துகொண்டு ஜெயகாந்தன் பிப்ரவரி 91-ல் வாசித்த கட்டுரை இது.

இலக்கியத்தை வட்டாரத்துக்குள் திணித்துக் கொச்சைப்படுத்தும் சில படைப்பாளிகளுக்கு, விமர்சகர்களுக்கு இக்கட்டுரை பெறற்கரிய விழுமிய பார்வை ஒன்றைத் தரும்; 'யாதும் ஊரே; யாவரும் கேளிர்' என்ற தமிழ் மரபை தேசீய மரபாக, உலக மரபாக மானுடம் முழுவதன் மரபாகத் தரிசனம் செய்யும் விரிந்த பார்வை தரும்.

இக்கட்டுரையை பலலட்சம்-பிரதிகள் பத்திரிகைகளுக்குத் தராமல் 'தொடரும்' இதழுக்குத்தந்து தன்னலமற்ற ஒரு இலக்கிய வேள்விக்குத் தனது அன்பையும், ஆதரவையும் அளித்திருக்கிறார் ஜெயகாந்தன் இல்லையா மேலாண்மை ''இந்திய இலக்கியம்-ஒரு நூற்றாண்டு மதிப்பீடு'' என்ற தலைப்பில் டெல்லியில் நடந்த கருத்தரங்கில் வைக்கப்-பட்ட இக்கட்டுரையை அவசியம் படியுங்கள், தோப்பில் மீரான்!

மதவாதத்திற்கு எதிராகவும், மத நம்பிக்கையாளர்கள் ஆற்ற வேண்டிய பணிகளை அறிவுறுத்தியும் சகாவிடுத்த வேண்டுகோள் (தொடரும் நவம்பர் 90) மிகத் தேவையான ஒன்று அதன் எதிரொலி மதவாதிகளிடமிருந்து அல்ல மனுஷ்ய புத்திரனிடமிருந்து (டிசம்பர் 90) இதழிலும் மறு-எதிர் ஒலியாக பொன்மணியிடமிருந்து (பிப்ரவரி 91 இதழிலும்) உரத்துக் கேட்கின்றன. 'மதம் சக மனிதனை வெறுக்கத் தூண்டுகிறது' என்று கூறும் மனுஷ்ய புத்திரன் மார்க்ஸை சந்திரகாந்தனிடமிருந்து ''காப்பாற்றப்'' போராடுகிறார். பொன்மணி தமது பதிலில் மார்க்ஸையும், சந்திர காந்தனையும், மனுஷ்ய புத்திரனிடமிருந்து காப்பாற்றப் போராடுகிறார். மதம் குறித்து எழுதுகையில், ''மதம் ஒடுக்கப்பட்ட மனிதனின் பெருமூச்சாகவும், இதயமற்ற உலகின் இதயமாகவும் இருக்கிறது'' என்று முடிக்கப்போகும் மார்க்ஸ், ' அது மக்களின் அபினி'' என்று முத்தாய்ப்பு வைக்கிறார். இந்த முத்தாய்ப்-பிலிருந்து தொடங்குவோம்.

''இங்கு எனக்கு உணவு தரமுடியாமல் விண்ணில் நிலைத்த இன்பம் தருபவராகக் கூறப்படும் கடவுளை நான் நம்பவில்லை'' ''வயிற்றுக்கு ஒருவேளைக் கஞ்சிக்கும் வழியின்றித் தவிக்கும் இந்திய நாட்டின் கோடிக்கணக்கான மக்களுக்கு தேவை மதம் அன்று; உணவே—'' என்று கைகளைக் கட்டிக் கொண்டு தொடரும் ஜனவரி 91 இதழ் அட்டையில் கர்ஜிக்கிறார் விவேகானந்தர். இன்னும் கொஞ்சம் பார்க்கலாம்.

''உடலாலும், உள்ளத்தாலும் மனிதர்கள் வலிமை பொருந்தியவர்களாய் மாறும் சமுதாயம் அமையும்வரை கடவுள் என்கிற கருத்தமைப்பின் தேவையை எத்தகைய நுணுக்கமான நாத்திக பிரச்சாரத்தினாலும், கூட அகற்றிவிட முடியாது''

'க-ட-வு-ள் எ-ன்கி-ற க-ரு-த்-த-மை-ம-ப்-பு!'

எந்தப் புரட்சிக்காரனுடையது இந்தச் சிந்தனை? மார்க்ஸ்? எங்கெல்ஸ்? லெனின்? ஸ்டாலின்? மாசேதுங்? பகத்சிங்? சிங்காரவேலர்?

இவர்கள் யாரும் இல்லை. ஆச்சரியப்படாதீர்கள்! ''கடவுள் என்கிற கருத்தமைப்பு'' — (Concept of God) — என்ற கருத்தமைப்பை வடிவமைத்த புரட்சி வீரன் விவேகானந்தரே!

'' .....சமுதாயம் அமையும் வரை'' - அதுவரை. ''அபின்'' தேவைதானே பொன்மணி, வலியை மறக்க! வலிமிகுந்த வாழ்வினை வலிமறந்து வாழ்வதற்கு 'அபின்' தேவை;

ஆ, அபின்! அது 'மதமாக' இருக்கிறது; அல்லது 'மத-எதிர்ப்பாக' இருக்கிறது. அது ''இந்தக் கட்சியாக' இருக்கிறது! அல்லது ''அந்தக் கட்சியாக'' இருக்கிறது!

அதன், -அதன் பெயரால், அதன்-அதன் கொடியால் இழைக்கப்படும் மனித-விரோதக் கொடுமைகளை ஒடுக்கு முறைகளை நியாயப்படுத்தக் கொள்ளும் ''எந்த அபின்'' - அல்லது ''இந்த அபின்'' எல்லா அபினும் ஒன்றுதான் சாதாரண மக்களின் ''அபினைத் ' தவிர.

இங்கே சாதாரண மக்களுக்கு 'அபின்' உயிர் வாழ்வதற்கான தேவை, வலி மறந்து வாழ்வதற்கு! இல்லையா பொன்மணி!

வலிதான்—▷ என்னென்ன வலி —▷ எல்லாம் நமது இதயத்தைத் துளைக்கின்றன!

நாள்தோறும் வன்முறையாளர்களின் வெறித்தனமாக படுகொலைகள் - பஞ்சாபில்; காஷ்மீரில்; அஸ்ஸாமில்; ஆந்திராவில்; வலிக்கவில்லை நமக்கு?

இந்து என்றும், முஸ்லீம் என்றும், சீக்கியன் என்றும் எல்லாப் புனிதக் கோயில்களின், எல்லாப் புனிதத் தீர்த்-தங்களின், எல்லாப் புனித நதிகளின் புனிதத்திற்காக என்று மதக் கலவரங்களின் மனிதர் மாள்வது வலிக்கவில்லை நமக்கு?

இந்தச் சாதிக்காக, என்றும் அந்தச் சாதிக்காக என்றும் சாதிக்கலவரங்களில், மனிதர் மாள்வது வலிக்கவில்லை நமக்கு? கறுப்பர் என்றும், வெள்ளையர் என்றும் நிறம்பார்த்து ஆப்பிரிக்க மனிதர் மாள்வது வலிக்கவில்லை நமக்கு?

இந்திய மண்ணிலும், இலங்கை மண்ணிலும், இங்கிலாந்து மண்ணிலும் சோவியத் குடியரசுகளின் ''மண்களிலும்'' 'இந்த மொழியினம்' என்றும் 'அந்த மொழியினம்' என்றும் மனிதர் மாள்வது வலிக்கவில்லை நமக்கு?

வலிக்கத்தான் செய்கிறது; நாகரிகமிக்க இதயங்களில் நன்றாகத்தான் வலிக்கிறது; 'தொடரும்' தலையங்கங்களில், கட்டுரைகளில், கவிதைகளில், இந்த இதய வலியின் ஆத்மாவேசத்தின் மனிதம் ததும்பும் குரல் ஒலிக்கிறது

நிறவெறிக்கொடுமையை உணரும் வலிதான் நெல்சன் மண்டேலாவின் இந்திய வருகையை மகிழ்ச்சியோடு வரவேற்கிறது. [தொடரும் அக்டோபர் 90] அணுயுத்த ஆபத்தினை உணரும் வலிதான், உலக அமைதிப் பணிக்காகக் கோர்ப்பசேவ் நோபல் பரிசு பெற்றதை மகிழ்ச்சியோடு பாராட்டுகிறது; [தொடரும் அக்டோபர் 90]

யுத்தங்களை நியாயமான யுத்தங்கள் என்றும், அநியாயமான யுத்தங்கள் என்றும் வேறுபடுத்திப் பார்க்கின்ற 20-ம் நூற்றாண்டு அணுகுமுறையை காலாவதியாக்கிவிட்டு, எல்லா யுத்தங்களும் மனிதர்களுக்கு எதிரான யுத்தங்கள் என்று மாறிப்போயிருக்கும் 21-ம் நூற்றாண்டு விஞ்ஞானத் தொழில் நுட்ப யுத்தத்தின். புதிய அர்த்தத்தை உணர்ந்துள்ள வலியினால்தான் ஈராக் குவைத்-அமெரிக்க - ஐ.நா. வளைகுடா யுத்தத்தைப் பற்றிய தலையங்கம் எழுதியது. [தொடரும் ஜனவரி, பிப்ரவரி, மார்ச் 91] வலிதான்; எத்தகைய கொடுமையான வலி; மனித சரித்திரத்தில், இதுவரை எவருக்கும் நேர்ந்திருக்காத வலி! வலி என்று உணர முடியாமலேயே செய்து விட்ட வலி!

> ''சாவு வந்து உன்கழுத்தில் மாலைதன்னைச்
> சந்தனத்தில் போட்டதையும் ஏற்றாய்; பின்னே
> கால் தொட்டுப் பணிகையிலே கையில் தூக்கி
> கனிவுடனே ஏற்றாயே — ஐயோ பாவி!
> தலை சிதறி நீ விழுந்த நிலையைப் போலுன்
> தாய்நாடு சிதறிவிழ நினைப்பார் சுற்றி
> வலைவிரித்துக் காத்திருக்கத் தேசமெங்கும்
> வன்முறைகள் தலைவிரித்தே ஆட்டம்போட
> நிலை கலங்கி நிற்கின்ற ......''

—வலியின் வேதனை, வலியின் ஆத்திரம், வலியினின்று தோன்றும் எதிர்கால வழி—தொடரும் மே 91 இதழ் முழுவதும் இந்தவலி—அலைகள்.

திலகருக்குப்பின் காந்தி என்று தேசிய இயக்கம் தனது பாதை தொடரும் கட்டத்திற்கு முன்பாகவே, திலகரோடு இருந்தபோது, இந்தியப் பாட்டாளிகளுக்காக என்று ஒரு தனி அமைப்பு காங்கிரசுக்குள்ளேயே வேண்டும் என்று சிந்தித்துச் செங்கொடி உயர்த்திய டாங்கே,

''காந்தி X லெனின்'' என்ற தலைப்பிட்டு இவர் எழுதிய புத்தகத்தினால் ''இதனை எழுதியவரை நான் சந்திக்க விரும்புகிறேன் ' என்று லெனின் தெரிவித்தாரே, அந்த டாங்கே,

பிரிட்டிஷ் ஏகாதிபத்திய அரசு தொடுத்த மீரத் சதி வழக்கில் சிறைப்பட்டபோது, சிறைக்கு வந்து காந்திஜிசந்தித்த டாங்கே,

அரைநூற்றாண்டுக்குமேல் இந்தியத் தொழிற்சங்கக் காங்கிரசின் தலைவர், பொதுச் செயலாளராகவும், உலக தொழிற்சங்க சம்மேளனத்தின் [தொடக்க முதல்] துணைத்தலைவராகவும், தேச, சர்வதேசப் பாட்டாளி வர்க்க இயக்கத்தில் முன்னின்ற டாங்கே,

சொந்தக் கருத்தைத் தெளிவாகத் தயக்கமின்றி எடுத்துச் சொல்லி, அதே நேரத்தில், தன் சபதத்திற்கேற்ப கௌரவர்களை விட்டுப்பிரியாது போராடிய பீஷ்மரைப் போலவே, இந்திய கம்யூனிஸ்ட் இயக்கத்தின் பிதாமகராக விளங்கிய டாங்கே,

பாட்டாளி வர்க்க நலனையும், தேச நலனையும், சர்வதேச நலனையும் ஒரே அலைவரிசையில் பார்த்துப் புரட்சிப் போர்முறைகள் வகுத்துத்தந்து, வர்க்கப்போராட்ட குருக்ஷேத்திரத்தில் அறிவுலக நேர்மையின் சின்னமாகத் திகழ்ந்த டாங்கே,

''காந்தியும், லெனினும்'' என்று இருவரையும் ஒரே திசையில் நிறுத்திக் காட்டுவதற்கு மாறாய் காந்தி X லெனின் என்று எதிர்-எதிர் திசையில் நிறுத்திக் காட்டி தவறு அல்லவோ செய்து விட்டேன் நான்!'' என்று பகிரங்கமாக ஒப்புக் கொண்ட டாங்கே,

''ஸ்டாலினிசப் பாவத்தின் கறைகள் எனது கரங்களில் படவில்லை என்று பொய்யுரைத்துத் தப்பித்து கொள்ள நான் விரும்பவில்லை .....கோர்ப்பசேவ் வெல்லட்டும்!'' என்று வாழ்த்தியதன் மூலம் பிராயச்சித்தம் கண்ட மனச்சாட்சி மிக்க முதியோன் டாங்கே,

''ஓ, கன்னங்கரிய அந்த நண்பரின் மார்பின் குறுக்கே வெள்ளைப் பூணூல் கீழே இறங்கிச் சென்றது-கருமேகக் கூட்டத்தினிடையே இறங்கும் மின்னலைப் போல!'' என்று தமது 82-வது வயதில், 50 வருடங்களுக்கு முன் சென்னையில் சந்தித்த ஒரு தோழரைச் சிரித்தவாறே வர்ணிக்கும் கவியுள்ளம் கொண்ட டாங்கே,

டாங்கே என்ற முதியோனின் மரணம் மானுட வரலாற்றின், இந்திய நாகரிகத்தின், உலகக்கம்யூனிசத்தின் இந்திய விடுதலை இயக்கத்தின் சிந்தனைச் செழுமையும், தத்துவப்பாரம்பரியமும் கொண்ட இந்த கம்யூனிஸ்ட் மனிதனின் ஆன்மா, 20-ம் நூற்றாண்டு முழுவதின் மானுட அனுபவம், வேதனை, மகிழ்ச்சி, நம்பிக்கையின் ஓர் உயர்ந்த சின்னம் அன்றோ?

இந்த முதியோனின் மரணம்தான் எவ்வளவு எளிமையாகக் கடந்து போயிற்று—இவன் வாழ்வைப்போலவே, இவன் இலட்சியத்தைப் போலவே, அதே எளிமையுடன்!

டாங்கேயின் மரணாஞ்சலியை மே 91 இதழில் வெளியிட்டுத் தொடரும் தனது வலியை எல்லோருடனும் பகிர்ந்து கொண்டிருக்கிறது.

ஆனாலும், வலியின் அருமையை மெய்யான புரட்சியாளர்கள்-மார்க்ஸ் உட்பட - நன்கு உணர்ந்து அனுபவத்திருக்கிறார்கள்; டால்ஸ்டாய் கூறியதைப்போல, 'எவருடைய ஆன்மா பிறர்துயர் குறித்துத் துயரம் கொள்கிறதோ, அவருடைய ஆன்மா தூய்மையானது; எவ்விதச் சலனமும் இன்றி அமைதி அடைந்திருக்கும் ஆன்மா— மிக இழிவான ஆன்மாவாகும்'. வள்ளலாரைப் போல, வாடிய பயிரைக் காணும் போதெல்லாம் வாடுகின்ற ஆன்மாவே தெய்வீகமானது;

ஆம் வலியற்ற ஆன்மாவோ எனில், அது மரித்துப்போனது; வலியை உணர்கின்ற ஆன்மாவே புரட்சிகரமானது; அழகானது; உயிருள்ளது; அது வலியால் மரத்துப்போவது இல்லை; வலியை மறந்து போவது இல்லை. வலியால் மரித்துப் போவது இல்லை. வலியே, ஒருவகையில், ஆன்மாவின் வலிமை; வாழ்வின் செயலின் வழிகாட்டி.

இத்தகைய 'ஆன்மீக சொரூபமான' மனித நேசப்படைப்புகளை வடிக்கும் எழுத்தாளரைத்தான், கலைஞரைத்தான் 'ஆன்மாவின் எஞ்சினியர்கள்' என்று 'ஆன்மா'வுக்கும் 'புதிய வரையறை' தந்தார் மாக்சிம் கார்க்கி இத்தகைய ஆன்மாவின் வலியை அனுபவித்து வாழ்ந்து. நமக்கு வழிகாட்டியவர்தான் பாரதியார். மனித நேசம் முற்போக்கு என்பதன் உன்னத சின்னமே இந்த 'ஆன்மாவின் வலி' தான் . மிகப்பாரம்பர்யச் சொத்தாக, இதே ஆன்மா— 'தொடரும்' இதழ்களில் தொடர்கிறது.

புதுப்பிக்கப்பட்ட ஒர் கோவிலில் புதுப்பித்தலைக் கொண்டாடுவதற்கான, ஒரு அற்புதமான திருவிழாவுக்காகக் கோடிக்கணக்கான மக்கள் மகிழ்ச்சி வெள்ளத்தில் கூடித்திரண்டு கோயிலையும் ஊரையும் தோரணங்களும் பந்தல்களும் விளக்குகளும்கொண்டு வண்ணமயமாய் அழகுபடுத்தி, வானை ஒளிமயமாக்கும் வாணவேடிக்கைகளும் உள்ளம் கொள்ளை கொள்ளும் களியாட்டங்களும் கண்டு திருத்தேரின் புறப்பாட்டுக்காக ஆரவாரித்து நிற்கையில் பதுங்கிக் கிடந்த ஒரு நெடுங்காலப் பகையுணர்வில் திடீரென்று வெடித்த ஒரு சச்சரவும் சச்சரவின் கூச்சலும், கூச்சலின் கோப வெறியும். கோப வெறியில் மூண்டதொரு பயங்கரக் கலகத்தில்—

திசையறியாது. நடப்பதறியாது, அதிர்ச்சியும் அவலமுமாய்க் கூட்டம் சிக்குண்டு சிதறிச் சிதறி ஓடி அறுந்து வீழ்ந்த பந்தல்களும், தோரணங்களும், விளக்குகளுமாய்க் கோயிலும், ஊரும் சோபை இழந்து ஒரு திருவிழா கலைந்தது போல—

> சோவியத் யூனியன் என்ற ஒரு திருவிழா கலைந்து போயிற்று;
> கிறிஸ்துவின் 1991-வது பிறந்த நாளில் கோர்ப்பசேவ் பதவி விலகினார்.

புதிய காமன்வெல்த் அமைப்பு தமக்கு உடன்பாடு அல்ல என்றும் தாம் மேற்கொண்ட பாதைசரியானதுதான் என்றும் அறிவித்து விட்டுப் பதவி விலகினார்.

ஆகஸ்டு 91 ல் ஸ்டாலினிஸ்ட் கம்யூனிஸ்டுகள் நடத்தித் தோல்வியுற்ற ஆட்சிக்கவிழ்ப்புச் சதியைப்போலவே. டிசம்பர் 91 'காமன் வெல்த் குடியரசு' ஸ்தாபகர்களின் வெற்றிகரமான ஆட்சிக்கவிழ்ப்பும் சட்டவிரோதமானது என்று ஒரு ருஷ்ய நிபுணர் குறிப்பிட்டார்.

ஆனால், பெரும்பாலான குடியரசுப் பாராளு மன்றங்கள் காமன் வெல்த் அமைப்புக்கு ஆதரவாக வாக்களித்து விட்டதால் அதை மதிப்பதாகக் கூறி பதவி விலகினார் கோர்ப்பசேவ்

சோவியத் மக்களையும், சோவியத் கட்சியையும் ஸ்டாலினிசத்திலிருந்து பாதுகாப்பதற்கு லெனின் தொடங்கிய பணி-லெனின் மரணத்தால் நின்று போன பணி-குருஷ்சேவ் தொடர்ந்த பணி கோர்ப்பசேவ் கிட்டத்தட்ட நிறைவேற்றிய பணி, அதன் இறுதிக் கட்டத்தில் தோல்வியுற்றது. —இதுவே கோர்ப்பசேவ் பதவி விலகலின் வரலாற்று முகமான பொருள்.

'மூக்குக்கண்ணாடி' யைக் காணாமற் போக்கிவிட்டுத் தடுமாறித் தத்தளிக்கும் கிழவர்களைப் போலவும், 'சோடா பாட்டில்' இளையவர்களைப் போலவும் கம்யூனிஸ்டுகள் இந்தியாவிலும் இது குறித்துத் தத்தளிக்கின்றனர்; கோபப்படுகின்றனர்; வெறுத்துப் போகின்றனர். அமெரிக்கக் கம்யூனிஸ்ட் கட்சி, சீனக் கம்யூனிஸ்ட் கட்சி, பிடல் காஸ்ட்ரோவின் கியூபா, இ.எம்.எஸ். நம்பூதிரி பாட் போன்றோர் கோர்ப்பசேவ் ஒரு துரோகி என்று தீர்ப்பு வாசிக்கின்றனர்.

முதலாளித்துவப் பத்திரிகைகளும், கம்யூனிஸ்ட் பத்திரிகைகளும். 'நேற்றுவரை' சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியின் 'மாபெரும் தலைவர்களாக'இருந்த ருஷ்யக்குடியரசுத் தலைவர் உக்ரேனியக்குடியரசுத் தலைவர், பைலோ ரஷ்யக் குடியரசுத்தலைவர், ஜார்ஜியக் குடியரசுத்தலைவர் முதலிய கம்யூனிஸ்டு தலைவர்களே கோர்ப்பசேவையும் அவரது 'மனிதமுகம் கொண்ட கம்யூனிசத்தையும்' 'ஜனநாயக சோஷலிசத்தையும்' 'பெரிஸ்த்ரோய்க்காவையும் கிளாஸ் நாஸ்த்தையும்' சேர்த்துக் காலை வாரிவிட்டு விட்டுக் குறுகிய தேசிய வெறியாளர்களாக மாறி 'சோவியத் யூனியனின் அஸ்திவாரத்தைத் தகர்த்த சந்தர்ப்பவாதிகளாக, பதவி வெறியர்களாக மாறிவிட்டது குறித்து வாயே திறக்கவில்லை; ஆம்; வாயே திறக்கவில்லை;

ஆகஸ்டு 91க்குப்பின், சோவியத் மக்களின் கண்களில், உலக மக்களின், உலக சோவியத் நண்பர்களின் கண்களில் ஜனநாயக விரோத சதிகாரச் சக்தியாகத் தரம் தாழ்ந்து போன சோவியத் கம்யூனிஸ்டு கட்சியை அதனை நம்பி நின்ற கோர்ப்பசேவ் கலைத்தது மிகப்பெரிய தவறு என்பாரும் உண்டு. அது தடைசெய்யப்பட்டதும் ஜனநாயக விரோதம் என்பாரும் உண்டு. இது குறித்தெல்லாம், 'தொடரும்' தனது மெய்யான அக்கறையையும், கவலை-யையும் 'அக்டோபர் 91' இதழில் சகாவின் பேட்டியின் மூலம் பகிர்ந்து கொண்டது.

''பெரிஸ்த்ரோய்க்கா, கிளாஸ்நாஸ்த் என்ற இரு கொள்கைகளைக் கொண்டு வரும்போதே இவற்றை எதிரிகள் பயன்படுத்திக் கொள்ளக்கூடும்'' என்று எச்சரித்த கோர்ப்பசேவ் அந்த எதிரிகளை எதிர்த்துப் போராட வலிமை உள்ளதாகத் தனது கட்சி அணியைத் தயார் செய்யத் தவறிவிட்டார்; அதன் விளைவாக அவர் அருகில் இருந்த-வர்களே ஆட்சிக் கவிழ்ப்பு முயற்சியில் ஈடுபட்டு விட்டனர். அதனைத் தொடர்ந்து ஒன்றியம் சிதறுண்டு போகும் அபாயம் ஏற்பட்டுவிட்டது'' என்று சரியாகவே சகாகூறியுள்ளார். மார்க்சிசம் ஒரு விஞ்ஞானம் அது தவறாக இருக்க முடியாது; அதை நடைமுறைப் படுத்திய சோதனையில் தான் தவறு ஏற்பட்டிருக்கிறது என்றும் கூறியுள்ளார்.

தோற்றுப் போனது ரஷ்யபாணி சோஷலிசம் என்றோ, அல்லது சோவியத் யூனியன் கம்யூனிஸ்ட் கட்சி மார்க்சி-யத்தை நடைமுறைப்படுத்தியதுதான் தவறு என்றோ சொல்வதில் எல்லாக் கம்யூனிஸ்டுகளுக்கும், சோவியத் நண்பர்களுக்கும் கருத்து வேறுபாடு இல்லை;

இது ஏன் தோற்றுப் போயிற்று என்பதை. இதில் என்ன தவறு? எங்கே, எப்போது. யாரால் இழைக்கப்பட்டது. என்பதைச் சொல்லும்போதுதான் கம்யூனிஸ்டுகள் மத்தியில் 'சமரசம் காணமுடியாத அளவு' கடுமையான கருத்து வேறுபாடுகள் எழுந்துள்ளன.

கோர்ப்பசேவின் கொள்கைகளை வரவேற்ற சோவியத் நண்பர்களுக்குக்கூட. இங்கே இப்போது கோர்ப்பசேவின் மீது கோபம் ஏற்பட்டிருக்கிறது.

லெனினுடைய புரட்சி வெல்லவேண்டுமே என்ற பதைப்போடு—பரபரப்போடு—எதிர்பார்ப்போடு பாரதி துடித்துக் காத்து நின்றதைப் போலவே. 'கம்யூனிசம் தோற்குமா' என்ற வரிசையில் தொடர்ந்து எழுதி, கோர்ப்பசேவின் வருகையை வெற்றியை, வரவேற்ற ஜெயகாந்தனுக்கும் கூடத்தான்.

> '' 'சக்கரவர்த்தி என்றே மேலாம் தன்மை படைத்திருந்தோம்'
> பொக்கென ஓர் கணத்தே எல்லாம் போகத் தொலைத்துவிட்டாய்'—என்று
> பீமன் தர்மபுத்திரனிடம் விம்மி வெகுண்டதைப் போல எண்ணற்ற
> கம்யூனிஸ்டுகளின். சோவியத் நண்பர்களின், மார்க்சிய அபிமானிகளின்
> மனம் பதைக்கிறது''

என்று ''தாய்'' 29-12 91 இதழில் ஜெயகாந்தன் எழுதுகிறார்.

''மானுட குல வரலாற்றிலும், சர்வதேச அரசியல் வரலாற்றிலும், ஒவ்வொரு நாட்டின் தேசிய வரலாற்றிலும் இந்த நான்கு மகா புருஷர்கள் (மார்க்ஸ்—எங்கெல்ஸ்—லெனின்—ஸ்டாலின்) பதித்துள்ள முத்திரைகளும் நிறை-வேற்றியுள்ள சாதனைகளும் வருங்கால வரலாற்றில் இன்னும் துல்லியமாய்ப் பிரகாசிக்கும். இவ்வாறெல்லாம் நான் எழுதுவது குறித்து எனது நண்பர்களில் பலர் முதல் மூன்று தலைவர்களின் விஷயத்தில் ஒப்புவர்; ஸ்டாலினைக் குறித்து இன்று ஏற்பட்டிருக்கும் கடுமையான விமர்சனங்களுக்கு ஆதாரம் ஆயிரம் இருக்கலாம்; அதன் பொருட்டு அந்தத் தலைவர்களின் பட்டியலில் இருந்து அவரை நீக்கி விடுவது சரியாக இருக்காது ''என்றும் ஜெயகாந்தன் அக்கட்டுரையில் எழுதுகிறார்.

ஸ்டாலினை—எவரது கரங்களில் சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியின் சோவியத் மக்களின் எதிர்காலம் பாதுகாப்பாக இருக்காது என்று சோவியத் கம்யூனிஸ்ட் கட்சிக்குத் தமது மரணப்படுக்கையிலிருந்து லெனின் எச்சரிக்கை விடுத்-தாரோ, அந்த ஸ்டாலினை—ஜெயகாந்தன் லெனின் வரிசையில் 'நான்காவது நாயகராக' வைக்கிறார்.

லெனின் வழித்தலைவர்களை, அரசியல் குழு உறுப்பினர்களை, மத்தியக்குழு உறுப்பினர்களை, இளங்கம்யூனிஸ்டுத் தலைவர்களை, லெனின் ஆதரவாளர்களாக இருந்த அறிவு—ஜீவியினரை—ஒவ்வொருவராக நசுக்கி, அழித்துப் பழிவாங்கிய ஸ்டாலினை, லெனினுக்கு அடுத்த நான்காவது—நாயகராக வைக்கிறார்.

சோஷலிசம் பற்றிய ஸ்டாலின் கருத்துச் சிதைவுகளை—தவறான கொள்கைகளைப் பற்றிய 'விமர்சனங்கள்' வேறு; கட்சியில் தம்முடன் முரண்பட்ட தோழர்களை சோவியத் மக்களின் பிரதிநிதிகளை, பிற நாட்டுக் கம்யூனிஸ்டுத் தலைவர்களை—பல்லாயிரக்கணக்கில் அழித்து ஒழித்த 'தவறுகள்' வேறு; ஆதாரங்கள் ஆயிரம் ஆயிரம்.

மார்க்ஸ்—லெனின் பெயரைப் பயன்படுத்திக் கொண்டே, மார்க்சிய லெனினியக் கொள்கையினின்றும் நடைமுறை-யிலிருந்தும் விலகிச் சென்று, கட்சிக்கும் புரட்சிக்கும் ஸ்டாலின் இழைத்த கொடுமைகள், தீமைகள் குறித்துக் கம்யூனிஸ்டு எதிரிகள் அல்ல—கம்யூனிஸ்டுகளே—உலகம் முழுவதும் உள்ள கம்யூனிஸ்டுகளே ஆதாரபூர்வமாக எழுதியிருப்பதை எல்லாம் ஒதுக்கி விட்டு ஸ்டாலினை நாலாவது நாயகராக சித்தரித்தல் எவ்வாறு இயலும்?

அந்தத் தவறுகள், அன்றைய கட்சியின் மெஜாரிட்டியினர் செய்த தவறுகள்; எனவே அந்தத் தவறுகள் தவிர்க்க முடியாத கால நிர்ப்பந்தத்தால் விளைந்த தவறுகள்; இன்னும் தெளிவாகச் சொன்னால், அன்றைய சோவியத்

யூனியன் உயிர்த்திருப்பதற்கு அவசியமாக இருந்த—நேர்ந்த தவறுகள்'' என்றும் அதே ''தாய்'' கட்டுரையில் ஜெயகாந்தன் ஸ்டாலினை 'தவறுகளிலிருந்து' விடுதலை செய்கிறார்.

தமது வழிபாட்டை உருவாக்குவதற்காகத் தான் லெனின் வழிபாட்டை ஸ்டாலினே முன்னின்று தொடங்கினாரோ என்று உரக்கச் சிந்தித்த ஜெயகாந்தனால்,

'தவறுகள்' என்றால் 'கட்சியின்' 'காலத்தின்' 'தேசத்தின்' தவறுகள் (ஸ்டாலினின் தவறுகள் அல்ல) என்றும், சாதனைகள் என்றால் 'வரலாற்றில் பொறிக்கத்தக்க' ஸ்டாலின் சாதனைகள் என்றும் எப்படி எழுத முடிகிறது?

இதுவன்றோ, எழுத்துப்பிசகாமல், ஸ்டாலினிசம்! தவறேசெய்ய முடியாத மாமனிதர் ஸ்டாலின்! வாழ்க, ஸ்டாலின்! அனுப்புங்கள் ஸ்டாலின்-விமர்சகர்களை சிவேரியா எனும் பேய்ப்பனிப் பாலைவனத்துக்கு!

— ஸ்டாலினிச அரசியல், சித்தாந்தப் பார்வையைச் உதறி எறிந்த மகத்தான முன்னோடிச் சிந்தனையாளர் என்ற தனிப்பெருமையைத் தமிழ் இலக்கிய வரலாற்றில் படைந்த ஜெயகாந்தன்,

— இந்தியாவைப் போல இயற்கையாக, வரலாற்று மரபாக-உருவாகாமல், செயற்கையாக உருவாக்கப்பட்ட தேசம் சோவியத் யூனியன் என்று எடுத்துரைத்தார்; (தொடரும் ஏப்ரல் 91)

— வன்முறையை அடிப்படையாகக் கொண்டு புரட்சி நிகழ்ந்ததால் ஸ்டாலின் காலத்தவறுகள் நிகழ்ந்தனவோ என்று சிந்தித்தார்;
ஜெயகாந்தனின் இந்தக் கருத்துக்களுக்கு என்ன பொருள்?

— அக்டோபர் புரட்சியில் லெனினின் மேன்மையான, ஜனநாயகத் தலைமையில் நம்பிக்கை கொண்டு, அவரது தலைமையில் வழி நடந்த கம்யூனிஸ்ட் கட்சியின் மீதும் நம்பிக்கைகொண்டு பிரிந்து போகும் உரிமையை லெனின் பிரகடனம் செய்த போதும் கூட, ருஷ்ய சாம்ராஜ்யத்தின் அடிமைகளாக இருந்த பிற தேசிய இனமக்களும் (பின்லாந்து நீங்கலாக) சோவியத் யூனியனாக இணைந்தவர்கள் என்பது அல்லவா பொருள்!

— பின்னர், ஸ்டாலின் தலைமையில் செயற்கையான தேசிய இனப்பிரச்சினைத் தீர்வுகள், மாற்றுக் கருத்தாளர் மீதான வன்முறை ஜனநாயகச் சீரழிவு, அறிவுத்துறையினர் மீதான ஒடுக்குமுறை, கட்டாய நிலப்பறிப்பு முதலிய-வற்றை அனுபவித்த தேசியக் குடியரசுகளின் மக்கள் 'சோவியத் யூனியன்' என்ற எல்லைக்குள் அனைத்து அதிகாரம் - சர்வாதிகாரம் படைத்த கட்சியின், ராணுவத்தின் பலத்தால் ஒரு 'ஒற்றுமை-மாயைக்குள்' 'ஒன்று படுத்தப்பட்டிருந்தனர்' என்பது அல்லவா பொருள்!

— பின்னர் ஸ்டாலினிசப் பாரம்பரியத்தின் அஸ்திவாரத்தை-சித்தாம், அரசியல், பொருளாதாரம், தேசிய இனம், கலாச்சாரம், விஞ்ஞானம், ராணுவம், உலகப்புரட்சி—ஆகிய அனைத்துந துறையிலிருந்தும் முற்றாகக் கலைத்துவிட்டுச் சீரமைக்கும் இரண்டாவது லெனினிசப் புரட்சியைக் கோர்ப்பசேவ் மேற்கொண்டவுடன் குடியரசு மக்கள், இயல்பாகவே, ஸ்டாலினிசச் சின்னமான பழைய-மத்தியத்துவ சர்வாதிகார சோவியத் அமைப்பினின்றும் சுதந்தரமான மாற்று அமைப்புகளைக் கோரினார்கள் என்பது அல்லவா பொருள்?

— இந்தப் புதிய நிலைமைகளுக்கு ஏற்ப, பழைய லெனினின் அக்டோபர் பிரகடனம் போலவே, அடக்கு-முறையற்ற, கட்டாயம் அற்ற ஓர் உளப்பூர்வமான, மெய்யாலுமே சமத்துவமான ஒரு ஜனநாயக சோஷலிசக்-கூட்டமைப்பாக புதிய சோவியத் யூனியன் ஒன்றை வார்த்து எடுப்பதற்காகக் கோர்ப்பசேவ் போராடுகிறார் என்பது அல்லவா பொருள்!

— ஸ்டாலினிஸ்ட்டுக் கம்யூஸ்ட்னிஸ்டுகளின் எதிர்ப்பும், குடியரசுக் கம்யூனிஸ்ட் தலைவர்களின் தேசிய சந்தர்ப்ப வாதமும் மகாதேசிய வெறியும் (லெனின் கடுமையாக எதிர்த்த அதே மகா ருஷ்ய தேசிய வெறி உட்பட) புறநிலையில் ஒரே அணியாகத் திரண்டு கோர்ப்பசேவின் புரட்சியைத் தோற்கடித்துவிட்டன. (லெனினும் 1905-ம் ஆண்டு புரட்சி தோற்றதைப்போல) என்பது அல்லவா பொருள்!

இவ்வாறெல்லாம் பொருள் கொள்ளத் தக்கவாறு எழுதிய ஜெயகாந்தன், 29-12-91 தாய் இதழில்,

> ''சக்கரவர்த்தி என மேலாம் தன்மை படைத்திருந்தோம்—
> பொக்கென எல்லாம் ஓர்கணத்தே போகத் தொலைத்துவிட்டாய்!''

என்று பாரதி வரிகள் வாயிலாகக் கேட்பது ஸ்டாலினிசத்தின், ஸ்டாலினிசத் தனிநபர் வழிபாட்டின், பலம் வாய்ந்த எச்சமிச்சம் என்பதைத் தவிர, வேறு எவ்வாறு புரிந்து கொள்வது?

இந்த வினாக்களின் நோக்கம், ஸ்டாலினிசத்தை விவரிப்பதோ, விளக்குவதோ அல்ல; 40 ஆண்டுகளுக்கு முன்பே சுதந்திரச் சிந்தனை பெற்ற மாபெரும் முன்னோடி ஜெயகாந்தனுடன், விடுபடாமல் ஸ்டாலினிச இலக்கியக் கோட்பாடுகளிலிருந்து விடுபடுவதற்கு 40 ஆண்டுகள் எடுத்துக் கொண்டாலும், சோஷலிசயதார்த்தவாதம் என்பதிலிருந்து மனிதாபிமானம் என்று மாறிவருகிற முதுபெரும் எழுத்தாளரும் விமர்சகருமான ரகுநாதனுடன் வாதம்-எதிர்வாதம் செய்வது அல்ல; மாபெரும் அக்டோபர் புரட்சியின் தமிழ் இலக்கியத்தாக்கம் போலவே கோர்ப்பசேவின் இரண்டாவது புரட்சியின்—நிறைவேறாது நின்றிருக்கும் புரட்சியின் தாக்கத்தைப் புரிந்து கொள்ளுவதற்கான, தெளிவைத் தேடுவதற்கான வினாக்களே இவை.

மேலும், எழுப்புகிறவருக்கு மட்டுமே எழுந்துள்ள வினாக்கள் அல்ல இவை:
விடைகளும் எழுப்புபவருக்கு மட்டுமே அல்ல; அல்லவா?

தொடரும்... ...

ஸ்டாலினிசத்தின் அஸ்திவாரங்களைக் கலைத்துவிட்டு, முதலாளித்துவச்சந்தைப் பொருளாதாரத்தின் தீமைகளைப் பற்றிய எச்சரிக்கையோடு, சோஷலிசச் சந்தைப் பொருளாதாரத்தைக் கட்டி வளர்க்கும் புதிய நிர்மாணத்திற்கு உலகு எங்கும் கம்யூனிஸ்டுகளின் மார்க்சிய அபிமானிகளின் மனிதாபிமானிகளின் தேடல் தொடரும்.

அதிகாரத்திற்கு வந்ததும், புரட்சிகரக் கம்யூனிஸ்ட் பண்புகளைப் படிப்படியாக இழந்து, பதவியை அதிகாரத்தை சுவைக்கத்தொடங்கி, சலுகை பெற்ற அருவருக்கத்தக்க ஒரு புதிய அதிகார வர்க்கமாக இகழத்தக்க முறையில் சீரழிந்து விடுவதன் கசப்பான பொருளை, கசப்பான விளைவுகளைக் கம்யூனிஸ்டுகள் மறந்து விடாமல் புரட்சிகர நினைவில் கொள்வது தொடரும்.

ருஷ்யக் காமன் வெல்த் மக்கள்—தங்களது புதிய ஜனநாயக உரிமைகள்—பாவம், ஜார்காலத்து முடியாட்சி சர்வாதிகாரத்திலிருந்து நேரே ஒரு—கட்சி—சர்வாதிகாரத்துக்கு மாறிச் சென்ற அம்மக்கள் தங்கள் புதிய ஜனநாயக உரிமைகள் பாதுகாக்கப்படுவதற்காகப் போராடுவது தொடரும், ரொட்டிக்கும், வாக்குப்பெட்டிக்கும் பட்டினிக்கும் சிந்தனைக்கும் உள்ள மிகச்சரியான பரஸ்பர ஜனநாயக உறவை அவர்கள் நிலைநாட்டுவது தொடரும். அமெரிக்காவின் புதிய காலனி ஆதிக்கத்துக்கு, அரசியல் தலையீட்டுக்கு எதிராக, ராணுவமயமாக்குதலிலிருந்து—நுகர்பொருள் உற்பத்திமயமாக எல்லா நாட்டுப் பொருளாதாரங்களையும் மீட்பதற்காக, எல்லா ஏழைநாடுகளின் ஒற்றுமையும் தொடரும்; எந்த ஒரு நாட்டின் இறுதி லட்சியங்களும் கம்யூனிசத்திலிருந்து பிரிக்க இயலாததாகவே இருக்கும்.

கம்யூனிசம் என்ற மிகப் பழைய கனவை—அழிவற்ற கனவை நோக்கி, மனிதாபிமானிகள் அனைவரின்—மார்க்சிய-வாதிகள் மட்டுமல்ல—அனைத்து மனிதாபிமானிகளின் பயணமும் எண்ணமும், வன்முறையற்ற ஜனநாயகப் பாதையில் தொடரும். கோர்ப்பசேவ் கூறியதைப் போல ''கம்யூனிசம் ஒரு அழகிய கனவு; நிறைவேற்றுவதற்குரிய கனவு; அது எங்கள் தேசத்தில் தான் தோற்றுப்போயிற்றே அன்றி, உலகின் வேறு தேசங்களில் அல்ல''.

'கனவு காணுங்கள்' என்று மாபெரும் கனவாளர்கள் லெனினும் நேருவும் நமக்குப் பணித்த கனவு! டால்ஸ்டாய்' புஷ்கின், கார்க்கி ஷோலகோவ், மாயகாவ்ஸ்கி, பாஸ்டர்நாக், தாகூர், பிரேம்சந்த், தகழி என்று நமது கனவு தொடரும்!

வள்ளுவன், கம்பன், பாரதி, ஜீவா, ஜெயகாந்தன், ரகுநாதன் என்று நமது கனவு தொடரும்...

ஸ்டாலினிசத்திலிருந்து தம்மையும் பிறரையும் விடுவித்துக் கொள்ளும் முயற்சியை மேற்கொண்டுள்ள ரகுநாதனின் 'பெரிஸ்திரோய்க்கா' தொடரும்.

நமது வரலாற்றை, மரபை, சுதந்திரப் போராட்டத்தை, புதிய இந்தியாவின் எழுச்சியை நிர்மாணத்தை, அதன் உலகப்பாத்திரத்தை, விவேகானந்தரை, காந்திஜியை, நேருவை, இந்திராகாந்தியை, ராஜிவ்காந்தியை, சோவியத் யூனியனை, லெனினை, ஸ்டாலினை, குருஷ்சேவை, கோர்ப்பசேவை, காஸ்ட்ரோவை, டால்ஸ்டாயை, பாரதியை —இவர் அனைவரின் மேன்மையை, வரலாற்றுப் பங்கை, தமது மனச்சாட்சியின் அறை கூவலுக்கு ஏற்ப தன்காலத்துக்கும் எதிர்காலத்துக்குமாய்ச் சிந்தித்துச் சொல்கின்ற ஜெயகாந்தனின் பெரும்பணி தொடரும்.

''தொடரும்'', கட்சி சார்பு இல்லாத, மனிதாபிமான, முற்போக்கு இலக்கியம் என்ற பணியைத் 'தொடரும்' தமிழகம் முழுவதும் அதன் செய்தி தொடரும்; —ஏனென்றால் நேர்மையான மனிதாபிமான மனச்சாட்சி 'தொடரும்' இதழுக்கு இருப்பதால்; வரலாற்றுக் கடமையை எத்தனை சிறிய அளவு என்று கருதாமல் தொடரும் உணர்வு இருப்பதால்;

கோர்ப்பசேவ், ஒரு கிறிஸ்துமஸ் நாளில் பதவி விலகுவதற்கு முன்னரே கூறியது போல் ''ஆம்; என்னை இந்தப் புதிய பாத்திரத்தில் எவ்வாறு இருப்பேன் என்று மனக்கண்ணில் நிறுத்திப் பார்த்துக் கொள்கிறேன்; எப்போதும் போல் எனது அரசியல் செயல்பாடு தொடரும்; எனது சிலுவையை நான் சுமப்பதும் இறுதி வரை தொடரும்''.

—30-12-1991.

# நன்றிக்குரியவர்கள்

மாநிலங்களவை உறுப்பினர் செ. மாதவன் முன்னாள் சட்டமன்ற உறுப்பினர், இராம. அருணகிரி மின்வா ஆலோசனைக்குழு உறுப்பினர், எஸ். இராமரத்தினம் வழக்குரைஞர், அ. கணேசன் தோழர், சி. கரிகால P.N.S. ராமசாமி, K.R. இராஜமாணிக்கம், அமரர். R.M. சேவுகப்பெருமாள், பெரி. மைலன்.

Dr. S. சின்னையா, Dr. KR. பாலகிருஷ்ணன், Dr. S. மீனாட்சிசுந்தரம், Dr. V. முருகேசன், Dr. S. குருநாத Dr. வீ.ந. பரிமளச்செல்வன், Dr. S. ஞானசேகரன்.

R.S. சகடை, R.K. சுந்தரராசன், சிங்கை மந்திரி, A. ஆதிமுலம், அ. பாண்டியன், சீ. இலட்சுமண A. கண்ணன், PR. இராஜேந்திரன், தங்கராசு, R. பாலகிருஷ்ணன். S. சிதம்பரம், ஞானஅரசு, சக்திவேல். V. வள்ளியப்பன்,

Jc. S.P. சாத்தப்பன், Jc. M. பாலகிருஷ்ணன், Jc. M. சோமசுந்தரம், Jc. S.S. மணியன், Jc. S. சண்முக Jc. P. சிவநேசன், Jc. P. கிருஷ்ணன், Jc. V.M. இளங்கோவன், Jc. பழனியப்பன் Jc. M.மாரிமுத்து

P.N.S. ஜோதி, P.N.S. ராஜா, R. பிரகலாதன், V. சுகுமாரன் ராமுடு ஸ்வீட்ஸ்டால், S. விஸ்வநாதன் ராஜேஸ்வரி ஸ்வீட்ஸ்டால், M.G. கிருஷ்ணமூர்த்தி, P.V. நாராயணசாமி பெட்ரோல்டீலர், ஊ.பெரி. பெரியணன் S. மாசிலாமணி முத்துக்கிருஷ்ணசாமி, மீரான், கிருஷ்ணபிரகாஷ், கிருங்காக்கோட்டை அமரர். ஒ மு. நடராஜன் மெ.கி.சி. சீதாராம் புலவர்வாணன் V மணிமாறன், வீர. சவாசிவம் க. சத்தியசீலன், S. ஆறுமுகம், P.பாரிதாசன், பிரான்மலை, வெங்கடகிருஷ்ணன், கோ.சீனிவாசன், R.சொக்கலிங்கம், சேனாதிபதி, மேலேச்சிவபுரி கணேசர் செந்தமிழ்க்கல்லூரி முதல்வர் டாக்டர். பழ. முத்தப்பன், பேராசிரியர்கள்: பழ. சிதம்பரம், ப.சதாசிவம், தா.மணி, க.கனகராசு, சிவ.சொர்ணம், நூலகர் முருகேசபாண்டியன், பசு.சுவாமிநாதன், வே.திருநீலகண்டபூபதி மற்றும் மாணவ, மாணவியர் வார்ப்பட்டு கருப்பையா, திருநாவுக்கரசு, பரமசிவம், மணிமுத்து, M. மாரிமுத்து பொன்னமராவதி மலே.இலக்குமணன், டாக்டர். M. சின்னப்பா, தீபஜோதி மெயின்பிரஸ், திருச்சி சி. ஜெகநாதன் கோவை ஹோட்டல் அன்னம்: அதிபர் S. கெங்காராமன், R. முரளிதரன், M. சந்திரன், S. தட்சிணாமூர்த்தி S. திருவாசகம் (சத்யா), சென்னை ஹரிச்சந்திரன், R. பத்ரிநாராயணன், தே மு. கணேசன், தஞ்சாவூர் அருவியூர் வடக்கு வளவு நகரத்தார், சிங்கம்புணரி அருவியூர் தெற்கு வளவு நகரத்தார், திருச்சி அருவியூர் வடக்கு வளவு நகரத்தார், சங்க நிர்வாகிகள்மற்றும் உறுப்பினர்கள், திண்டுக்கல் G. கௌதம்' திருச்சி ராஜு V. புதூர் தொடக்கப் பள்ளி ஆசிரியர்கள், தமிழ்மணி சேதுராமலிங்கம்.

மதுரை ஸ்டைலிங் டைலர்ஸ், அதிபர் A. நாச்சியப்பன், 'தீபம்' A. அழகு, சுப்பிரமணியம், அட்டை அச்சிட உதவிய க மாணிக்கம், அச்சிட்ட மதுரை, கோவை ஸ்கிரீன் பிரிண்டர்ஸ், சிங்கம்புணரி கண்ணன் அச்சகத்தார்.

தொடர்ந்து தொடரும் இதழுக்குப்படைப்புக்கள், சந்தாக்கள் அளித்த பெருமக்கள், வெளியீட்டு விழாவில் கலந்து கொண்ட பிரமுகர்கள், விளம்பரங்கள், நிதியுதவியளித்த அன்பர்கள், மலர் சிறக்க உதவிய அனைத்து அன்பர்கள் என இன்னும் இன்னும் நீளும் இந்தப்பட்டியலில் தொடரும் அனைவரும்.....

**தொடரும் குழுவினர்:-**

மு. பழனியப்பன், ஞா. சிங்கமுத்து, இவர்களுடன் சந்திரகாந்தன், வி. அழகப்பன், பழ. வள்ளியின்செல்வன், இரா. பாண்டி, முருகேசன், ராஜேந்திரன், சகாயராஜன்.



அச்சிட்டோர்:- கண்ணன் அச்சகம், 4-3/103 நாடார்பேட்டை, சிங்கம்புணரி - 624 502.

எது நடந்ததோ, அது நன்றாகவே நடந்தது
எது நடக்கிறதோ அது நன்றாகவே நடக்கிறது
எது நடக்க இருக்கிறதோ அதுவும் நன்றாகவே நடக்கும்
உன்னுடையது எதை இழந்தாய்,
எதற்காக நீ அழுகிறாய்?
எதை நீ எடுத்துக் கொண்டாயோ, அது
இங்கிருந்தே எடுக்கப்பட்டது
எதைக் கொடுத்தாயோ, அது இங்கேயே
கொடுக்கப்பட்டது
எது இன்று உன்னுடையதோ
அது நாளை மற்றொருவருடையதாகிறது
மற்றொரு நாள், அது
வேறொருவருடையதாகும்
இந்த மாற்றம் உலக நியதியாகும்!

—கீதை

